(இ - ள்.) (கண்டோர் இவன் அழகினர்) செவ்வேளோ! மதவேளோ! திருமாலோ! என்று சொல்லும்படி தக்கனவன மிகவொளிவாய்ந்த அழகுடையவனுகி அவயவங்களெல்லாம் விளக்கமுற, நல்ல தாயாகிய கமலையென்பவள் இருகண்களும் ஆனந்திக்கும்படி (அவனைப் பன்முறை) பார்த்து (இருகரங்களாலும்வாரி) எடுத்து (மார்புடன்) அணைத்துக்கொண்டு உச்சிமோந்து, மனமுருகிய ஆசையாலாகிய இன்பக் கண்ணீரொழுகும்படி உடல்பூரித்தனள். எ - று.

காமனெனினும் வேளெனினு மொக்குமாதலின் அஃதிருபெயரொட்டுப் பண்புத்தொகை. முருகன் - சிவகுமாரன்; செவ்வேளெனப்படுவோன். காமன் - மால் மகன்; கருவேளெனப்படுவோன். (௨௬)

நாயகன் முனிவா லன்றே நாமிங்குப் போதப் பெற்றுத்
தூயவ னொருவன் மெய்யிற் றோன்றிய காற்றான் மைந்தன
றீயவன் பிணியி னீங்கிச சிறந்தன னென்று மாது
மேயதன் னிறைபால் வைதத வெறுப்புவிட் டுவகைதிட் டாளே.

(இ - ள்.) என் கணவருடைய கோபத்தாலல்லவா நாமிங்கடையப்பெற்று புனிதமானவனொருவனுடைய தேகத்திலுண்டான காற்றினால், மகன் தனது கொடிய வலிய பிணியினின்று விலகிச் சிறப்புற்றனன்? என்று, கமலையென்பவள் பொருந்திய கணவனிடத்தில் வைத்த வெறுப்பையொழித்துக் களித்தனள். எ - று. (௨௭)

அச்செய னகரி னுள்ளா ரனைவரு மறிந்து நாளு
நச்சியின் னடிசி லாடை நல்கவே று திருக்கு நாளிற்
கச்சர வணிந்த வெண்டோட் கண்ணுதல் பூசை யாற்றும்
பொச்சமின் மறையோன் பாத மிருவரும் போற்றி னாரே.

(இ - ள்.) அக்காரியத்தை அந்நகரவாசிகள் யாவருமுணர்ந்து தினந்தோறும் விரும்பி இனிய அன்னமும் ஆடையுங்கொடுக்க (அவற்றைப்) பெற்று (உண்டுடுத்தி) வாழ்ந்திருக்குங்காலத்தில், கச்சாகப்பாம்பினை யணிந்த எட்டுத் திருப்புயங்களையுடைய நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானுக்குப் பூசைசெய்யும் பொய்ம்மையில்லாத (ஆதிசைவ) வேதியருடைய பாதத்தை இருவரும் வணங்கினர்கள். எ - று.

கண்ணுதல் - அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; சிவபிரானை யுணர்த்தியது. சிவபெருமானைப் பூசிக்கும்வேதியனெனவே ஆதிசைவவேதியனென்றாம். (௨௮)

குருபரன் கருணை கூர்ந்து கோதறு தீக்கை யாற்றி
திருமலக் கணேச ருண்மை நிகழ்த்துமெட் டெழுத்தை யோதி
மருவுறக் கணிக்கு மாறும் வகுத்தனன் வகுத்த வாறே
யிருவரு மனுவை யெண்ணி யிருந்தவ மினிது செய்தார்.

(இ - ள்.) குருசிரேட்டன் கிருபைமிகுந்து குற்றமற்ற சிவதீக்கைசெய்து, மலரகிதராகிய கணேசப்பெருமானுடைய உண்மையைக் கூறும் எட்டெழுத்தாலாகிய மந்திரசதை யுபதேசித்து, (அதனைப்) பொருந்துமாறு கணிக்கும்வகையையுங் கூறினன். (அவன்) கூறியவகையே அவ்விருவரும் அம்மந்திரத்தைக் கணித்துப் பெருந்தவத்தை இனிதாகச் செய்தார்கள். எ - று. (௨௯)

வருந்துமெய்த் தவத்தி னார்க்கு வரந்தர வரத னெண்ணி
முருந்துறழ் முறுவன் மாது முன்னுற முன்னர்த் தோன்றித்

திருந்திய வரங்க ளெல்லாஞ் சிந்தையிற் றிறம்பாப் பத்தி
பொருந்திய தக்கன் முன்னர்ப் பொற்புறத் தோன்றி நின்றார்.

(இ - ள்.) வருந்துகின்ற உண்மைத்தன்மையுடைய அவர்கட்குக் கணேசப்பெருமான் வரமருளும்படி திருவுள்ளங்கொண்டு, முருந்தையொத்த பல்வரிசையையுடைய சுமலியென்பவருக்கு முன்னே பொருந்தும்படி முதலிலே தரிசனமளித்துத் திருத்தமாகிய வரங்களைக்கொடுத்து, மனதில் அகலாத பத்தியைப் பொருந்திய தக்கனுக்கு முன்னே அழகுபெறப் (பின்னர்ப்) பிரசன்னமாயினார். எ - று.

முருந்து - மயிலிறகின்அடி. (௩௦)

ஒருமுழந் தாளிற் செங்கே ழொருபதம் வைத்த கோலத்
தொருமருப் பிரண்டு காது முக்கணு நான்கு தோளும
பொருவிலபொன் னுடையு மேனைப் பொலங்கலம பலவுந் தோன்ற
விருவருக் கரியா னிற்ப விணைவிழி மலரக் கண்டான்.

(இ - ள்.) ஒரு முழங்காலிலே, செந்நிறம்பொருந்திய ஒருபாதத்தைப்பொருந்திய திருக்கோலமாகிய ஒற்றைக்கொம்பும் இரண்டுசெவிகளும மூன்று விழிகளும் நான்குதோள்களும் ஒப்பில்லாத பொன்னுடையும் பிற அழகிய ஆபரணங்கள் பலவுந் தோன்றும்படி, (பிரமன் திருமாலென்னும) இருவருக்கும் அறியப்படாத கணேசப்பெருமான் நிற்க, (தக்கன்) இருவிழிகளும் மலருமபடி தரிசித்தனன் எ - று.

பொன்னுடை - பீதாம்பரம். (௩௧)

அச்சமு மன்புந் தோன்ற வடியிணை பணிந்து சூழ்போந்
துச்சியிற் கரங்க ளேற வொளிவிழி யருவி தாழ
விச்சுவ ரூப னான விநாயகப் பெருமான் றன்னை
முச்சக முழுதும் போற்று முதலவனைத் துதிக்கின் றானல்.

(இ - ள்.) அச்சமும் அன்புந் தோன்றும்படி (விநாயகக்கடவுளுடைய) திருவடிகளை வணங்கிப் பிரதக்கணஞ்செய்து, கரங்கள் சிரமிசை யேறவும், பிரகாசிக்கின்ற கண்களிலிருந்து (ஆநந்த) அருவி யொழுகவும், விச்சுவரூபராகிய விநாயகப்பெருமானென்னும் மூவுலகத்திலுள்ள வெல்லோருந் துதிசெய்யும் முதற்கடவுளை (பின் வருமாறு) துதிசெய்யலாயினன். எ - று.

விச்சுவரூபன் - உலகரூபி. முச்சகம் - சுவர்க்கமத்திய பாதலமென்னும் மூன்றுலகங்கள். முதல்வன் - ஒவ்வொரு கருமத்திற்கும் முதலிற் பணியத்தக்கவன்.

வே று.

வேதகா ரணனுநீ வேதமோர் நான்குநீ
பாதமோர் நான்குநீ பதங்களோர நான்குநீ
போதலை மலையமர் புவனகா ரணனுநீ
நாதநின் பெருமையை நவிலவல் லாரெவர்.

(இ - ள்.) வேதகாரணருந் தேவரீரே! ஒப்பற்ற நான்கு வேதங்களுந் தேவரீரே! நான்குபாதங்களுந் தேவரீரே! நான்கு பதங்களுந் தேவரீரே! காலும் கடல் [illegible] பொருந்திய பூமியாகிய விவற்றிற்குக் காரணருந் தேவரீரே! நாதனே! தேவரீருடைய பெருமையைச் சொல்லவல்லவர் யாவர். எ - று.

[illegible] - சரியை கிரியை யோகம் ஞானம். மற்றவை வெளி. (௩௨)

புராதனப் பொருளுநீ புறம்பினு முள்ளினும்
விராவுமெய்க் கரியுநீ மிகுமுப நிடதநீ
சராசர வுருவுநீ தத்துவ முழுதுநீ
பராபர நினதியல் பகரவல் லாரெவர்.

(இ - ள்.) பழமையாகியபொருளுந்தேவரீரே!, புறத்திலும் அகத்திலுங்கலந்த உண்மையாகிய சாட்சியுந்தேவரீரே! மேம்பட்ட உபநிடதங்களுந்தேவரீரே! சராசரங்களினுருவமுந்தேவரீரே! தத்துவங்கள் யாவுந்தேவரீரே! பராபரனே! தேவரீருடைய இயற்கையைச் சொல்லவல்லவர் யாவர்? எ - று.

உபநிடதம் அநேக ஆயிரமெனக் கூறப்படும். அவற்றுள் ஈசாவாசியமுதல் முக்திகோபநிடத மிறுதியாக நூற்றெட்டுச் சிறந்தனவென முற்காலத்துத் தொகுக்கப் பட்டுள்ளன. அவற்றையும் மதக்கோட்பாடுடையார் தத்தமக்கேற்றவாறு கையாண்டு வருகிறார்கள். (கஅ)

மூவர்கா ரணனுநீ மூன்றுகா ரணமுநீ
மூவகை யுலகுநீ மொழியுமுச் சுடருநீ
மூவகை யுயிருநீ மூவகை யுருவுநீ
தேவனே நினதரு டெளியவல் லாரெவர்.

(இ - ள்.) மூவர்க்குக் காரணருந் தேவரீரே! மூன்றுகாரணங்களுந் தேவரீரே! மூவகை யுலகங்களுந்தேவரீரே! சொல்லுகின்ற முச்சுடர்களுந்தேவரீரே! மூவகை யுயிர்களுந்தேவரீரே! மூவகை யுருவமுந்தேவரீரே! தேவனே! தேவரீருடைய திருவருளைத தெளியவல்லவர் யாவர்? எ - று.

மூவா - பிரமன் விண்டு உருத்திரன். மூன்று காரணங்கள் - முதற்காரணம் துணைக்காரணம் நிமித்தகாரணம். மூன்றுலகு - சுவர்க்கம் மத்தியம் பாதலம். முச்சுடர் - சூரியன் சோமன் அக்கினி. மூவகையுயிர் - விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர். இவருள், ஆணவமல மொன்றையுடையவர் விஞ்ஞானகலரும், ஆணவகன்ம மலங்க ளிரண்டையுடையவர் பிரளயாகலரும், ஆணவகன்மமாயை யென்னு மும் மலங்களையுடையவர் சகலருமாவா. மூவகையுரு - தூலவுரு சூக்குமவுரு காரணவுரு.

இந்திரி யங்களி னிசையதி தெய்வநீ
யிந்திரன் முதலிய வெண்டிசைத் தேவர்நீ
யந்திநண் பகலுநீ யறுவகைப் பருவநீ
யெந்தைநின் னுருவினை யியம்பவல் லாரெவர்.

(இ - ள்.) இந்திரியங்களின் சொல்லத்தக்க அதிதெய்வங்களுந் தேவரீரே! இந்திரன் முதலிய எட்டுத் திக்குப்பாலர்களுந் தேவரீரே! அந்தியும் நடுப்பகலுந் தேவரீரே! அறுவகைப்பருவங்களுந் தேவரீரே! எந்தையே! தேவரீருடைய செயல்களைச் சொல்லவல்லவர் யாவர்? எ - று.

அறுவகைப்பருவம் - கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முது வேனிலென்பன. (உ0)

ஏகனீ யநேகனீ யிருளுநீ யொளியுநீ
போகிநீ யோகிநீ புலவரொல் லாருநீ

சாகர மேழுநீ யிடவரைக் குலமுநீ
ஆகநின் னடிமலர் மருவவல் லாரெவர்.

(இ - ள்.) ஏகமானவருந் தேவரீரே! அநேகமானவருந் தேவரீரே! இருளுந் தேவரீரே! வெளிச்சமுந் தேவரீரே! போகியுந் தேவரீரே! யோகியுந் தேவரீரே! தேவர்கள் யாவருந் தேவரீரே! சமுத்திரங்களேழுந் தேவரீரே! விசாலமான மலைத் தொகுதிகளுந் தேவரீரே! ஆகாயரூபியே! தேவரீருடைய திருவடித்தாமரையைப் பொருந்த வல்லவர் யாவர்? எ - று.

ஏகன் - ஒன்றியானவன். சாகரமேழு இவை உவர்நீர் நன்னீர் பால் தயிர் நெய் கருப்பஞ்சாறு தேன் என்பவற்றை யுடையவை. (௧௭)

அறைபிர மேயநீ யப்பிர மேயநீ
பறையும்பா வனையுநீ பாவனா தீதநீ
நிறைபரப் பிரமநீ நிலமுத லைந்துநீ
யிறைவநின் னருளினை யெய்தவல் லாரெவர்.

(இ - ள்.) சொல்லத்தக்க பிரமேயமுந் தேவரீரே! அப்பிரமேயமுந்தேவரீரே! சொல்லத்தக்க பாவனையுந்தேவரீரே! பாவனாதீதமுந்தேவரீரே! நிறைந்த பரப்பிரம முந்தேவரீரே! நிலமுதலிய ஐம்பூதங்களுந்தேவரீரே! இறைவரே! தேவரீருடைய திருவருளையடைய வல்லவர் யாவர்? எ - று.

நிலமுதலைந்து மண் நீர் தீ காற்று ஆகாயம். பிரமேயம்-அளவிடக்கூடியது.

மிருதிநீ புராணநீ வேறுபல் கலையுநீ
வருணமோர் நான்குநீ வனமுப வனமுநீ
தருவொடு கொடியுநீ சகலசெந் துக்கணீ
யொருவநின் றன்னிய லுணரவல் லாரெவர்

(இ - ள்.) மிருதிகளுந் தேவரீரே! புராணங்களுந் தேவரீரே! வேறுவகைப் பட்ட பலகலைகளுந்தேவரீரே! வருணங்கள் நான்குந்தேவரீரே! வனங்களும் உப வனங்களுந்தேவரீரே! மரங்களுங் கொடிகளுந்தேவரீரே! சகலசெந்துக்களுந்தேவரீ ரே! ஒப்பற்றவரே! தேவரீருடைய இயற்கையை அறியவல்லவா யாவர்? எ - று.

மிருதி - தருமநூல் பதினெட்டு. அவையாக்கினோர் பெயரான்விளங்கும். அவை மநு அத்திரி ஹாரிதம் விட்டுணு யாஞ்ஞவற்கிய முதலியன. புராணங்கள் - மகாபுராணங்கள் பதினெட்டு; உபபுராணங்கள் பதினெட்டு கலை - அறுபத்துநான்கு வகைத்து. வருணம் நான்கு - பிராமணன் அரசன் வசியன் சூத்திரன். (௧௮)

காமமா திகளுநீ கடும்பசி தாகநீ
காமநித் திரையுநீ நகுவினோ தங்கணீ
யேமமார் பொறையுநீ யின்பநீ துன்பநீ
வாமனே நின்கழன் மதிக்கவல் லாரெவர்.

- ள்.) காமமுதலியனவுந் தேவரீரே! கொடுமையாகிய பசியுந்தாகமுந் தேவரீரே! அச்சந்தரும் நித்திரையுந்தேவரீரே! சிரிக்கத்தக்க அற்புதங்களுந்தேவரீரே! இன்பம்பொருந்திய சாந்தமுந்தேவரீரே! இன்பமுந்தேவரீரே! துன்பமுந்தேவரீரே! வாமனே! தேவரீருடைய திருவடியைத் தியானிக்கவல்லவர் யாவர்? எ - று

காமமாதிகள் - காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம். காமன் அழகுடையவனென்றும் குறுகிய வடிவுடையவனென்றும் பொருள்படும். (௫௦)

அருளுநீ மறமுநீ யன்புநீ வன்புநீ
தெருளுநீ மருளுநீ செல்வநீ வறுமைநீ
வெருளுநீ தேற்றநீ வேறுநீ யொன்றுநீ
குருவநின் குணங்களைக் குறிக்கவல் லாரெவர்.

(இ - ள்.) அநுக்கிரகமுந் தேவரீரே! கோபமுந் தேவரீரே! அன்புந் தேவரீரே! பகைமையுந் தேவரீரே! ஞானமுந் தேவரீரே! அஞ்ஞானமுந் தேவரீரே! செல்வமுந் தேவரீரே! தரித்திரமுந் தேவரீரே! மயக்கமுந் தேவரீரே! தெளிவுந் தேவரீரே! வேற்றுமையுந் தேவரீரே! ஒவ்வொன்றுந் தேவரீரே! குருவானவரே! தேவரீருடைய குணங்களைக் குறிக்கத்தக்கவர் யாவர்? எ - று. (௫௧)

புண்ணிய தலங்கணீ பொருவிறீர்த் தங்கணீ
வண்ணமூர்த் திகளுநீ வரதருமவள்ளனீ
பண்ணியம் பலவுநீ பரமதப் பொருளுநீ
யண்ணலே நின்செய லறியவல் லாரெவர்.

(இ - ள்.) புண்ணியஸ்தலங்கள் தேவரீரே! ஒப்பில்லாத தீர்த்தங்கள் தேவரீரே! அழகிய மூர்த்திகளுந் தேவரீரே! வரங்களை யுதவும் வள்ளல் தேவரீரே! பல பண்ணியங்களுந் தேவரீரே! சிறந்த மதத்தின் பொருளுந் தேவரீரே! தலைவரே! தேவரீருடைய செயல்களை யறிய வல்லவர் யாவர்? எ - று. (௫௨)

செய்வினை முதலுநீ செயப்படு பொருளுநீ
செய்வினைத் தொழிலுநீ செய்கரு மப்பய
னுய்வகை யவரவர்க் குதவவல் லவனுநீ
மெய்வலாய் நினதியல் விளக்கவல் லாரெவர்.

(இ - ள்.) செய்கின்ற வினைமுதலுந் தேவரீரே! செய்யப்படுகின்ற பொருளுந் தேவரீரே! செய்கின்ற வினைத்தொழிலுந் தேவரீரே! (அவரவர்) செய்கின்ற கருமப்பயனை அவரவர்க்கு உய்வகையாகக் கொடுக்கவல்லவருந் தேவரீரே! மெய்மையில் வல்லவரே! தேவரீருடைய உண்மையியல்பை விளக்கவல்லவர் யாவர்? எ - று.

வினைமுதல் செயப்படுபொருள் வினைத்தொழிலென இலக்கண முறையாக [கருத்தா] எழுவாய், செயப்படுபொருள், [வினைமுற்று] பயனிலையெனச் சொல்லணி செய்யப்பட்டது. (௫௩)

குணமொடு குறிபல கொள்கைகொள் ளாயெனி
னணிமலர் மணமென வாக்கையி னுயிரெனப்
பணியுயி ரறிவெனப் பயினுமத் தன்மையாற்
கணபதி நினதியல காணவல் லாரெவர்.

(இ - ள்.) அழகிய மலரும் மணமும்போலவும், [illegible] போலவும், பணிகின்ற உயிரும் உணர்வும் போலவும் விளங்குகின்ற அத்[illegible]தமாகிய [illegible] பெருமானே! தேவரீர் குணமுங் குறியும் பலவகைக் கொள்கையுங் கொள்ளீராயின் தேவரீருடைய இயல்பைக் காண வல்லவர் யாவர்? எ - று.

அத்துவிதம் - இரண்டின்மை. [illegible] (௫௪)

என்றுதோத் திரம்பல வியம்பிய தக்கன்மு
னன்றுதன் னுருவமே நான்மறை யாளனு
மன்றநேர் காட்டுபு மதமழைக் கயமுக
வின்றுநின் றுதிகளுக் குவந்தன மென்றனன்.

(இ - ள்.) என்று பலதோத்திரங்களைக்கூறிய தக்கனென்பவனுக்குமுன்னே, மதநீரைச்சொரியுங் குளிர்ந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் நன்மைபொருந்திய தமதுருவமே நான்குவேதங்களிலும் வல்ல முற்கலமுனிவராகப் பொருந்தக் காட்டி, நீயுரைத்த உன்னுடைய தோத்திரங்களுக்கு மகிழ்ந்தோமென்றனர். எ - று.

காட்டுபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். காட்டியென்பபொருள். (௬௬)

தம்பிரா னருளலு நக்கன் மீட்டுமபணிந்
தெம்பிரா னடியனே னிலவிளெண் டிருவுமுற்
றும்பரார் புகழ்தர வோங்கிநா னவாழுமா
நம்பிரான் றருகென நாதனு ரோதுவார்.

(இ - ள்.) (இவ்வகையாக) விநாயகக்கடவுள் அருள்புரியவுந் தக்கன் மறுபடியும் வணங்கி, எமதுபெருமானே! அடியேன் இகத்தில் அட்டலட்சுமிகளும் பொருந்தித் தேவர்களும் புகழும்படி மேம்பட்டு யான் வாழும் வகையாக வரந்தருக. நம்பிரானே! எனவேண்ட விநாயகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார் எ - று.

வேறு

முற்கல னெனும்பெயர் முனிவனை மாறபெறுந
தக்கவ னவனுருச் சார்ந்த நமமுடை
மிக்கவிவ் வுருவுகாண் விளம்பு மன்னவன்
பொக்கமற றெமதடி போற்றும் பத்தியான்.

(இ - ள.) முற்கலனெனனும் பெயரைப் பூர்வத்தில் எமமாற்பெற்ற தக்கனாகிய அவனுடைய உருவத்தைச்சார்ந்த நமமுடைய மேம்பட்ட இவ்வடிவினைக் காண்பாயாக. சொல்லிய அம்முற்கலமுனிவன் பொய்ம்மையின்றி எமமுடைய திருவடியைத் துதிசெய்யும் பத்தியுடையவன். எ - று. (௬௭)

பொக்கம் - பொய்ம்மை.

அவனுயிர் நமகுரு வான பெற்றியா
லவனுரு நமதுரு வதனைத் தேற்றுவா
னவனுரு வாகியு மளித்தனங் காட்சியை
யவனுருக் காற்றினின் னசிட்டந் தீர்ததனென்.

(இ - ள்.) அம்முற்கலனுடைய உயிரானது நமக்கு வடிவமானதன்மையால், அவனுருவமே நமதுருவமென்பதனைத் தெளிவிக்கும்படி அவன்வடிவமாகியுங் காட்சியைக்கொடுத்தோம். அவன் தேகத்தினின்று தோன்றிய காற்றினால் உன்னுடைய [illegible] விலக்கினேம். எ - று. (௬௮)

[illegible] றனைச்சர ணடைந்த தக்கனே
[illegible] விழைவெலா மிரப்பு வாறுயர்

பொன்னக ரரசனைப் பொலிவை போலெனா
முன்னவன் மறைந்தனன் முடிகொள் வீமனே.

(இ - ள்.) தக்கனே! அம்மூற்கலமுனிவனைச் சரணமடையக்கடவை. (அவ னே) உன்னுடைய மனதிலுள்ள விருப்பங்களையெல்லாம் நிறையச்செய்வான். (அந் நல) உயர்வாகிய பொன்னகரத்திற் கரசனாகிய இந்திரனைப்போல விளங்குவை. செல்கவென்று திருவாய்மலர்ந்தருளி முற்பட்டவராகிய விநாயகக்கடவுள் அந்தர்த் தான மாயினர். கிரீடமணிந்த வீமராசனே! (என்று விசுவாமித்திர முனிவர் அவனு டன் கூறினார்) எ - று. (சுக)

தக்கன்பிணிநீங்குபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஉ௱சுசு.

# முக்கலர்தக்கனுக்குபதேசித்தபடலம்.

கற்றைச் சடிலத் தேரமபன காட்சி கொடுத்து மறைதலோடும்
பெற்றம் பிரிந்த கன்றெனவும் பெற்றதாய் பிரிந்த மகவெனவும்
பற்றும் பொருள்கைப் பெற்றிழந்த படாகூர வறுமை யானெனவுஞ்
சற்று தரியா துளங்கரையத் தக்க னிலமேல் வீழ்ந்தெழுந்தான்.

(இ - ள்) கற்றையாகிய சடையையுடைய விநாயகக்கடவுள் காட்சியளித்து மறைந்தவுடனே, தக்கன் பசுவைப்பிரிந்த கன்றுபோலவும், பெற்றதாயைப் பிரிந்த பிள்ளைபோலவும், தேடத்தக்க பொருளைக் கையிற்பெற்றுப் போக்கடித்த துன்ப மிக்க வறுமையாளனைபோலவும், சிறிதுபொழுதுந் தாளாமல் மனங்கரையப் பூமியின் மேல்விழுந்து (புரண்டழுது) எழுந்தான். எ - று (க)

சென்ற திசையை யெதிர்நோக்குந் திசைகள் டோறுந் தூரிஇச் செல்லு
நின்று பெருமா னருள்புரிந்த நிலத்திற் கிடந்து புரண்டலறு
மன்றல் கமழ்ந்த முடிமிலைந்த மாலை யெனவே மலர்ந்ததுணாக்
கொன்றை மரத்தை யெதிர்வணங்கு குறுகித் தழுவி நனிமோக்கும்.

(இ - ள்) (விநாயகக்கடவுள்) சென்றதிசையை யெதிரேபார்ப்பான்; திசை களியெல்லாந் தேடிச்செல்லுவான்; கணேசப்பெருமான் நின்று அநுக்கிரகஞ்செய்த விடத்தில் விழுந்து புரண்டு அலறுவான் வாசனையின் திருமுடியிற்கட்டிய திரு மாலையைப்போல மலர்ந்த மலர்க்கொத்துக்களையுடைய கொன்றைமரத்தை யெதிரே பணிவான்; நெருங்கி (அதனை)த் தழுவி மிகவும் மோப்பான். எ - று.

காளைச் சுரும்பு நறைபருகுங் கமலத் தடமே புள்ளினமே
வாளைக் கயமே யகன்மிலைகளே மாட நிரையே கபோதங்களே
பாளைக் கமுகே மடற்பனையே பயிலு மன்றிற் குருகினமே
[illegible]க் கருதார்க் கருளாத சாமி வரவுங் கண்டீரே.

(இ - ள்) இளம்பருவமுடைய [illegible] [illegible]பருகுந் தாமரைத்தட மே! பறவைச்சாதிகளே! வாளைமீன்கள் [illegible] [illegible] [illegible]

ஆனன்றில்களே! [illegible] மாடங்களே! கபோதகங்களே! [illegible]யுடைய [illegible]மரங்களே! [illegible]பனைமரங்களே! சஞ்சரிக்கும் அன்றிற் பறவையினங்களே! (தம்முடைய) திருவடியைத் தியானஞ்செய்யாதவர்களுக்கு அருள்புரியாத [illegible] எம்பெருமான் எழுந்தருளவுந் தரிசித்தீர்களா? எ - று.

கபோதகம் - கரும்புறா. அகன்றில் - ஆண்அன்றில்.

"வானைக்கயமே மகன்றில்களே" எனபபாடங்கொண்டு, "வானைமீன்கள் பொருந்திய கயத்தின்மேவும் அகனறில்களே" எனப் பொருளுரைப்பாருமுளர். (ரு)

சேயன் மலர்ந்த கருணைமுக மனைய முகமபெற றிரொன்று
வெய்ய களிற்றி னடிதாழுமு விளங்கு முருவி னிறத்ததெனச்
செய்ய தளிரைக் கரங்கூப்புந தேனுனடிபோன் மலாநததெனப்
பெய்யு மதுப்பங் கயமலரைப் பெரிது மிறைஞ்சிப் பழிச்சுமால்.

(இ - ள்.) எம்பெருமானுடைய மலாந்த திருபாமுகததையொதத முகத்தைப் பெற்றிருக்கின்றீர்களென்று, கொடியயானைகளின் கால்களைப் பணிவான், பிரகாசிக்கின்ற (இறைவர்) திருவுருவைப்போல நிறமுற்றிருந்ததென்று சிவநததளிரகளைக் கைகூப்புவான்; கணேசருடைய திருவடிபோல மலர்நதுளளதென்று தேன் சொரிகின்றதாமரைமலரை மிகவும் வணங்கித் துதிபுரிவான். எ - று (சு)

மெழுகா ரழலுற் றெனவிளகி மெய்வே றுகி யிவ்வாறே
யெழுபே ரரவ மநதிரததா லிலகு மருளா றிபைககலகி
முழுதா னநதச சுவையமுத மொண்டு பருகி மாணுககா
குழுவா தரிக்கு முக்கலஞா கோதி லிருக்கை சென்றடைந்தான்.

(இ - ள்.) மெழுகானது பொருநதிய தீயிறபட்டாறபோல (மனம்) இளகி, உடல் வேறுபட்டு இவ்வகையாகவே, எழுகின்ற பேரொலியையுடைய மநதிரத்தினால், பிரகாசிக்கின்ற திருபைககடலைக [கடைந்து] கலககி மிகக ஆனநதமெனனுஞ் சுவையையுடைய அமுததத்தைமொண்டு பானஞ்செய்து, மாணாககா கூட்டத்தைக் காக்கும் முக்கலமுனிவருடைய குற்றமிலலாத ஆசிரமததிறபோய்ச சோந்தனன். (தக்கனென்பவன்) எ - று. (எ)

தாவில் வேத முதலான சகல பொருளு மிகததெளிநது
தேவ தேவன் றிருவடியைச சிறப்ப வுணாநத வருந்தவத்தான்
மேவு யோகப் பெருவலியால் வேணடு முருவங கொளத்தக்கான்
பூவில் வேறு கதிரவன்போற் பொலிமுக் கலனை யெதிரகண்டான்.

(இ - ள்.) கெடுதலிலலாத வேதமுதலிய எல்லாபபொருள்களையு மிகுதியாகத்தெளிந்து தேவதேவனுடைய திருவடிகளை மேமபடததெரிநத, அருந்தவத்தினாலும், பொருந்திய யோகத்தின் மிக்கவலிமையாலும விரும்பிய வுருவங்களைக் கொள்ளத்தக்கவராகிய பூமியிலுள்ள வேறுசூரியனைப்போல விளங்கும முக்கலமுனிவரை யெதிரேகண்டனன். (தக்கன்) எ - று. (அ)

மன்னுங் கருணை விழிமூன்று மலாக்கை நான்குமபேரழகு
துன்னு மேனி யவயவமுந் துலங்கச் சிம்பந் தாமரைமே
பொன்னின் மணியி னுருக்கொண்டு பூசை புரியுங் கணபதியி
[illegible] வடக்கணைய நயப்ப நோக்கி யெதிர்பணிந்தான்.

(இ - ள்.) நிலைபெறும் இருமையையுடைய திருவிழிகள்மூன்றும், தாமரை மலர்போன்ற திருக்கரங்கள் நான்கும், மிக்க அழகும், செறிந்த பிற அவயவங்களும் விளங்க, சிறப்புவிதிமுறைபிறழாது பொன்னாலும் நவமணியாலும் உருவஞ்செய்து பூசைபுரியுங் கணேசப்பெருமானுடைய நல்ல மலர்போன்ற சிவந்த உபயபாதங்களும் விரும்பத் தரிசித்து எதிரே வணங்கினன் எ - று. (எ)

தண்டமெனவே விழுந்தபடி தரையி னெடிது கிடந்தெழுந்து [யத்
கொண்டன் மழையின் விழிபொழியக் கோடை யெனநெட் டுயிர்ப்பெறி
கொண்டு புரிந்து பரவசனாய்த் தொழுது நிற்ப வவனையெதிர்
கண்டு பெருகன் பினைவியந்து கருணை கூர்ந்து முனிச்செல்வன்.

(இ - ள்) தண்டத்தைப்போல விழுந்தபடியே பூமியின்மேலே நெடுநேரமிருந்து (பின்னர்) எழுந்து, மேகமழையைச்சொரிவதுபோல, கண்கள் (நீரைச்) சொரியவும், கோடைபோலப் பெருமூச்செறியவும் பணிவிடைசெய்து, பரவசனாகிப் பணிந்து (தக்கன்) நிற்க, முனிச்செல்வராகிய முற்கலமுனிவர் அவனை யெதிரேபார்த்து மிக்க அன்பினைவியந்து கிருபைமிகுந்து எ - று (அ)

வேறு

பெயரினைக் கியாது பிள்ளாய் பேணிவாழ் நகரம் யாது
நயமுற மனத்தின் வேட்ட நன்பொரு ளெதுசொல் லென்றான்
றூயவுறு முனிவன் செஞ்சொற் றண்ணமிழ் துண்டு தக்க
னயாவதீர்ந் தங்கை கூப்பி யனைத்தையுஞ் செப்ப லுற்றான்.

(இ - ள்) பிள்ளாய்! உனக்குப்பெயர்யாது? விரும்பிவசிக்கு நகரம்யாது? நன்மைபெற மனதிற்கருதிய நற்பொருள் யாது? அவற்றைச் சொல்லென்றனர். கிருபைபொருந்திய முற்கலமுனிவரது செவ்விய சொற்களாகிய குளிர்ந்த அமிர்தத்தைப்பருகித் தக்கன் சோர்வகன்று அழகியகைகளைக்குவித்து (அவர்வினவியவற்றிற்கு விடையாக) எல்லாவற்றையுஞ் சொல்லத்தொடங்கினன் எ - று (கூ)

வேறு

தேனொழுகு சோலைவளர் தேயங்கரு நாடம்
பானுபுரம் வாழ்பதிய திக்கணர சாளும்
வானுயர் சிறப்புடைய வல்லவனென் றந்தை
கானொழுகு கூந்தலுடை யாள்கமலை நற்றாய்.

(இ - ள்) தேனொழுகுஞ் சோலைகள் வளரப்பெற்ற கருநாடதேயம் - அதில் யான் வாழுநகரம் பானுபுரம் - அப்பானுபுரத்தில் அரசுபுரியும் மிக்க உயர்ந்த சிறப்புகளையுடைய வல்லவராசன் என்பிதா - தேன்சொரியும் அளகத்தையுடைய கமலை யென்பவள் என்னுடைய நற்றாய் எ - று.

நற்றாய் - ஈன்றதாய் (௧௦)

காட்சியொடு கண்ணுமுனை கேள்வியொடு காது
மாட்சிபுரி வாக்குமற வன்குறள னாகி
றூட்சிசெய்பெ ருமபிணியின் மூழ்கிமுடை நாறக்
காடசெய்பவ மாம்பொழுதே நாயடியே னுற்றேன்.

(இ - ள்.) ... டைய விழியும், சொல்லைக் கேட்டலுடன்கூடிய செவியும், மாட்சிமையச்செய்கின்ற பேசுதலுடையவாயுமிலக் கொடிய குன்னனுகி, ...செய்கின்ற பெரிய வியாதியில் அமிழ்ந்து முடைநாற்றம் வீசும்படி, பூர்வத்திற் ...யாவுங்களை அடியேன் பிறக்கையிலேயே யடைந்தேன் எ - று.

குருடுஞ்செவிடும் ஊமைத்தன்மையுங் குறட்டன்மையும தீராநோயும் உடைய ...யிருந்தேன் என்பது கருத்து. (௧௧)

பன்னிருபி ராயமவை பல்வகைதி றத்து
மின்னமொழி விபபமெல்லா மெருந்தைமு பல வுற்றுப
பின்னாமுனி வுற்றிட ஒய பெற்றவளமெகா ளாநதிக
கொன்னகரின வணப்லிகள கொளருமொருநாளின.

(இ - ள்) பன்னிரண்டு வயதுவரையில், பலவகை மார்க்கங்களாலும (எனக்குள்ள) துயரத்தை யொழியச்செயவேண்டுமென்று, என் தந்தையாகிய வல்லவராஜன் முயற்சி செய்து, (அவை பயனற்றமையின்) பின்னாகக் காபங்கொள்ளவும் என்னுடைய தாயார் என்னைக்கொண்டுவந்து இந்நகரத்திலே உண்மைதங்கிய பிச்சைவாங்கி (என்னைக்காத்து) வரும் ஒருதினத்திலே. எ - று.

பல்வகைத்திறமென்றது மணி மந்திர ஔடதாதிகளை (௧௨.)

வீதியிடை நீயிவர மெய்யிமௌழு காற்று
லேத்முழு துமபழிய விவ்வுருவ னானேன
போதகவொ ருத்தனருளா லுபாசகினமனு வெண்ணச்
சோதியெதி ரோனழியெனைத் தூண்டநினை யுற்றேன.

(இ - ள்.) வீதிவழியே தேவரீர் வருகையில, (தேவரீருடைய) தேகத்திலே லுந்த காற்றினால் (அடியேன்) துன்பமுழுதுமொழிய, இவ்வடிவையுடையவனானேன். குருக்களொருவருடைய திருவருளாற்கிடைத்த மந்திரத்தைக் கணிக்க, சோதிசொரு பியாகிய கணேசபெருமான் பிரசன்னராகி என்னைக்தூண்டலால் தேவரீரையடைந் தேன். எ - று.

மனு என்றது அஷ்டாக்ஷர மந்திரம (௧௩)

மழுக்கமல மாலைமலி மோதகமு மேந்தி
வழுக்கறுத னுருவின் வந்தவிறை பின்பு
முழுக்கநும திவ்வுருவின முற்றியெதி ரின்று
னொழுக்கமுடை யீர்க்குமிறை வறவுமுரு வொன்றே.

(இ - ள்.) மழுப்படையும் தாமரைமலர் மாலையும் மிகக மோதகமுந்தாங்கி, ...றமற்ற தன்னுருவுடன் எழுந்தருளிய கணேசப்பெருமான் அதன்பின்னர், தேவரீருடைய இவ்வுருவ முழுவதும் முற்றப்பெற்று எதிரே நின்றனர் (ஆதலின்) நல்லொ ...க்கமுடைய தேவரீருக்கும் இறைவராகிய விநாயகப்பெருமானுக்குந் திருவுருவ ...ன்றேயாம். எ - று.

...னுரு இதில் ஆறு ஆறனுருபு. ஆறனொருமைக் கதுவுமாதுவும் - பன் ...வுருபாம்" என்பது சூத்திரம். (௧௪)

...கைய நம்மருள் ...லகில வாழ்வு
...வீற்றனன்பி றிக்கருணை கல்கிய

பத்தியும ளித்தருள்க வென்றுபணிந் தானப்
புத்திரனை நோக்கியுயர் பூசுரன்வி ளம்பும்.

(இ - ள்.) அத்தன்மையாகிய (சிறப்பினையுடைய) தேவரீருடைய திருவிரு
ளால் உலக வாழ்க்கையையடைய விரும்பினேன். திருவிழிகளாற் கிருபைதந்து புத்
திரமையயுங் கொடுத்தருளவேண்டுமென்று (தககன்) வணங்கினான். அச்சிறுவனா
கிய தக்கனைச்சிறந்த முக்கலமுனிவர் பார்த்துக்கூறுகின்றார் எ - று.

விழிக்கருணை - கிருபாநோக்கம. பூசுரன் - பூலோகதேவன் ; அந்தணன். ()

வேறு

நீயே பெரும்பாக கியமுடையை நீயே யுடம்பின் பயன்பெற்றாய்
நீயே வேண்டுங் காரியத்தை முடித்துக் கொண்ட நிறைதவத்தோ
னீயே மூக்கண் விநாயகனபா னிகரி லாத வனபுடையை
நீயே முற்றத் துறந்தோனு நீயே சிவன் முத்தனுமே.

(இ - ள.) நீயேமிக்க செல்வத்தைப்பெற்றவன். நீயே (மாநுட) தேகததா
லாய பிரயோசனத்தை யடைந்தவன, நீயே செய்யவேண்டிய காரியத்தைச்செய்து
முடித்துக்கொண்ட நிறைந்த தவததையுடையவன்; நீயே திரிநேத்திரங்களையுடைய
விநாயகக் கடவுளிடததில் ஒப்பில்லாத அனபுடையவன். நீயே முறறத்துறந்தவனும்
நீயே சிவன் முததனுமாயினை. எ - ற. (கக)

தேவ வருட மாயிரம்பின் செலல வரிய தவமுடித்தும்
பாவ மகலத் தியானித்தும் பல்வே றான பணிபுரிநது
மேவ வெனக்குத் தெரிசனநதா னீந்தா னிலலை யிமிர்சுருப்புப்
பூவ ரிதழித் தொடைவேய்நத பொலமபூஞ சடிலத் தேரம்பன்.

(இ - ள்.) ஆயிரந் தேவவருடங்கள் கழிபத்தக்க அருந்தவஞ்செய்து முடித்
தும், பாவமொழியும்படி தியானஞ்செய்தும், பல்வேறு வகைப்பட்ட பணிவிடைகளைச்
செய்தும், ரீங்காரஞ்செய்யும் வண்டுகள்பொருந்திய அழகிய கொன்றைமலர்மாலை
யணிந்த அழகிய பொன்னிறம்பொருந்திய சடையையுடைய விநாயககடவுள் எனக்
குப் பொருந்தத் தரிசனங்கொடுததானிலன் எ - று.

மாநுடவருடம் ஒன்றுகொணடது பிதரர்கட்கோர் தினமென்றும் அவ்வகைய
தினங்களாலாய வருடமொன்று கழிவது தேவர்கட்கோர் தினமென்றுஞ் சொல்லப்
படும். அவ்வகைய தினங்களாலாய வருடத்தைத் தேவருடமென்பர். (கஎ)

வேறு

மூவர்க ளுலகத் தார்க்கு முத்தொழில் புரியு மாபோல்
மூவர்க டமக்குத் தானே முத்தொழில் புரியா நின்ற
மூவர்கண் முதல்வனான முதலிலா முதல்வன் பாத
மூவகைக் கரணத் தானு முயங்கினை நினையா ரொப்பார்.

(இ - ள்.) (பிரமனாதி) மூர்த்திகள் மூவரும் உலகத்தாருக்கு (சிருட்டிமுதலிய)
முத்தொழில்களைச்செய்யும் வகைபோல, (அப்பிரமனாதி) திரிமூர்த்திகளுக்கே (சிருட்
டியாதி) முத்தொழில்களைச் செய்கின்ற திரிமூர்த்திகளுக்குமாகிய ஆதியில்லாத முதற்
கடவுளாகிய கணேசப்பெருமானுடைய திருவடியை (மன வாக்கு காயமென்னும்) [illegible]

சனங்களாலும் (முறையே) சிந்தித்துத் துதித்துப் பணிந்தனே. உனக்குச் சமானமானார் யாவர்? (ஒருவருமிலா) எ - று.

மூவர்கள் - பிரமன் விண்டுஉருத்திரன். முத்தொழில்-ஆக்கல் காத்தல் அழித்தல். மூவகைக்கரணம் - மனம் வாக்கு காயம். (௧௯)

அந்தணர்க் கழலின வண்ண மாகியோர் குழப்போர்க் கெல்லா
மந்திர வண்ண மான வள்ளலென் கண்ணுற் றுங்குன்
முந்துறத் தோற்றித் தெல்லா மொழிந்தனை யுதவுங் கைம்மா
றெந்தெனத் தழுவிக் கொண்டங் கிலகுட றைவந் திட்டான்.

(இ - ள்.) வேதியர்களுக்கு யாகாக்கினியின் வடிவமாகி, யோகஞ்செய்வார் யாவர்க்கும் மந்திரவடிவமாகிய கணநாதப்பிரான் என் கண்ணெதிரே பொருந்தினது போல, உன்முன்னே பிரசன்னமானதை முழுவதுங் கூறினை. (உனக்குயான்) செய்யத்தக்க பிரதியுபகாரமியாது ' என்று, (முக்கலமுனிவர்தக்கனுடைய) விளங்குகின்ற உடலைத்தடவினார். எ - று.

வள்ளல் - வரையாது கொடுப்போன். எந்து - எது என்றதன் விகாரமென்றுவது, தெலுங்குபாடையிலிருந்துவந்த திசைச்சொல்லென்றுவது கொள்க. (௧௮)

அளவளா யிருந்த பின்றை யக்கர மொன்றே யாகி
வளமெலா மருளோ ரமபன் மந்திரந் தக்கன் காதிற
கொளவுப தேசித் தெண்ணுங் கொள்கையு மருளிச் செய்தா
னிளவலைக் காணா ளுடி யெய்தினள் கமலை தானும்.

(இ - ள்.) (இவ்வாறு) அளவளாவியிருந்த பிறகு, (முக்கலமுனிவர்) எழுத்தொன்றேயாகி எல்லா நலத்தையுங் கொடுக்கத்தக்க விநாயகப்பெருமானுடைய மந்திரத்தை, தக்கன்செவியிற்கொள்ளும்படி உபதேசித்து, அதனைக்கணிக்கும் முறைமையையும் அருளிச்செய்தனர். கமலையென்பவள் தன் புத்திரனைக் காணாதவளாகித் தேடிக்கொண்டு (அங்கு) வந்தனள் எ - று.

அளவளாவல் - கலந்துபேசல் முதலியன. "மந்திரம்" என்றதை "அக்கரமொன்றேயாகி" என்றதால் ஏகாட்சரமந்திரமென்க. (௨௦)

வணங்கினள் முனிவன் பாதம வழுதகினை ளிருடி நோக்கி
யணங்கனை யிவனு நீயு மருமறை யளந்து மெட்டாக்
குணங்குறி கடந்த நாதன் கொழியருட் கிலக்க மானீர்
பிணங்குபல் வினையும் வென்றீர் பெறுவதென் னினிமே லென்றான்

(இ - ள்.) முக்கலமுனிவருடைய திருவடியைப்பணிந்து துதிசெய்தனள் முக்கலமுனிவர் (கமலையைப்) பார்த்து, பெண்ணே ' இச்சிறுவனும் நீயும் (ஆகிய விருவரும்) அரிய வேதங்கள் தேடியுங் கண்டறியாத குணங்குறிகள் கடந்த விநாயக்கடவுளுடைய மிக்க திருவருளுக்கு இலக்கானீர்கள், துன்புசெய்யும் பலவினைகளையு மொழித்தீர்கள்; இனிப்பெறவேண்டியது யாதுளது? என்று கூறினர். எ - று.

வணங்கினளென்பது முற்றெச்சம். (௨௧)

மந்திர மான வேக வின்னமின் மகற்குச் சொன்னோனு
மிக்கனுயிற் கணித்து முற்றிற் றிகிரியோன் றருட்டி மன்மே

னிந்திரன் முதலோ ரெண்ண விருந்தர சாளும் வாழ்க்கை
தந்திடு மிறைவ னென்று சாற்றின னிதுவு மேலோன்.

(இ - ள்.) (மகா) மந்திரமாகிய ஏகாட்சர மந்திரத்தை உன்புதல்வனுக்குபதேசித்தோம். அவன் மனதாற்கணித்து முடிப்பானாயின், பூமியின் மேலே ஒரே சக்கரத்தைச்செலுத்தி, இந்திரன்முதலிய தேவர்களும் (அவன் போகத்தை) எண்ணும்படி வீற்றிருந்தரசாள்வான். தலைவனாகிய கணநாதப்பெருமான் நல்வாழ்வுதருவான் என்று, மேலோனாகிய முக்கலமுனிவன் இதனையுங்கூறினன். எ - று (௨௨)

என்றுரை யாடும் வேலை யிலங்குவேல் வீமன் றாழ்ந்து
கன்றுநோய் முனிவன் மெய்யிற் காற்றினான் முழுதுந் தீர
வென்றுவல் விரைந்தே ரம்ப னவமொடு தோன்ற வன்னான்
றொன்றுசெய் தவம்யா தென்னச் சொல்லுவான் காதி மைந்தன்.

(இ - ள்.) என்றிவ்வாறு சொல்லுங்காலத்தில், பிரகாசிக்கின்ற வேற்படை தாங்கிய வீமராசன்பணிந்து, துன்புசெய்கின்ற நோயானது முக்கலமுனிவனுடைய உடற்காற்றினால் முழுதுமொழியவும், அக்காலத்தில் விநாயகருளால் அவனுக்கெதிரே மிகவும் விரைந்து பிரசன்னமாகவும் அந்தத் தக்கனென்பவன் பூர்வத்திற்செய்த புண்ணியம் யாது? என (விசுவாமித்திரமுனிவரை)க்கேட்க, காதிராசன் புதல்வராகிய விசுவாமித்திரமுனிவர் கூறுகின்றார். எ - று. (௨௩)

முக்கலர்தக்கனுக்குபதேசித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௨௭௯.

---

## வல்லாளன்வேதவினைநீங்குபடலம்.

மந்தி யுகள மலர்ச்செழுந் தேன் மழையிற் பொழியும் பொழிலுடுத்த
சிந்து தேயந் தனில்வளத்தாற் சிறந்த பல்லி யெனும்புரத்தில்
வந்த வசியன் கலியாண னெனுமப் பெயரான் மனைகற்பி
னிந்து மதியோ டறம்பலவு மியற்றி யினிது வாழ்நாளில்.

(இ - ள்.) மந்திகள் பாய்தலாற் பூக்களிலுள்ள செழியதேனானது மழையைப் போலச்சொரிகின்ற சோலைசூழ்ந்த சிந்துதேசத்தில, பலவளங்களாற் சிறப்புற்ற பல்லிபுரத்திலே பிறந்த கலியாணனென்னும் பெயரையுடைய வைசியன் தன்மனைவியாகிய கற்பினையுடைய இந்துமதியென்பாருடன் பலதருமங்களையுஞ்செய்து இனிதாகவாழுங்காலத்தில். எ - று. (௧)

இந்து மதியென் பாள்வயிற்றி னீட்டுந் தொல்லைத் தவக்குறையான்
மைந்த னொருவன் வந்துதித்தான் வணிகன் சால வினைபலவுஞ்
சிந்தை மகிழ வினிதாற்றிச் செம்பொன் முதலாம் பலபொருளு
மந்த ணர்க்கு ளந்தழைப்ப வளித்து நாளும் வினைபுரிந்தான்.

(இ - ள்.) இந்துமதியென்பவள் வயிற்றில், தான் தேடிய பழையதவக்குறை வினையுடைய புதல்வனொருவன் வந்துதோன்றினன். (அதனைக்) கலியாணவைசியன்

மிக்க பலசெயல்களையும் மனங்களிக்கும்படி இனிதாகச்செய்து, பசும்பொன்முதலாகிய பலபொருள்களையும் வேதியர்களுக்கு மனமடங்கும்படி தானஞ்செய்து தினந்தோறும் நற்கருமங்களைச் செய்தனன். எ - று. (௨)

நின்று மனையி னலங்கரித்து நாண்மூன் றென நற்றினத்தி
லொன்றுங் கணிதர் வல்லவனென் றுரைப்புக் கேட்டு வல்லாள
னென்று பெயரிட் டான்வசிய னிருந்து தவழ்ந்து நடந்தறிவு
துன்ற வெழில்சேர் வல்லாளன் சுடர்வெண் மதிபோல் வளர்நாளில்.

(இ - ள்.) அவ்வைசியன் மிகுதியும் வீட்டில் அலங்காரத்தைச்செய்து மூன்றுந்தினமாகிய நாளில், பொருந்திய சோதிடர்கள் வல்லவனென்று சொல்லக்கேட்டு (அக்குழந்தைக்கு) வல்லாளனென்று பெயரிட்டான். (முறையே) உட்கார்ந்து தவழ்ந்து நடந்து அறிவுடைய அழகு மிக்க வல்லாளன் பிரகாசிக்கின்ற தாவள்யமான சந்திரன் போல வளருங்காலத்தில். எ - று. (௩)

வேறு.

புறவின மல்கிய பொன்னணி மாடஞ்
சிறாருட னாட்டயர் செவ்வியி னீங்கிச்
சுறமலி பூந்தடந் துன்ன வெழுந்த
விறன்மலி சோலையி லெய்தின னோர்நாள்.

(இ - ள்.) புறவின் தொகுதிமிக்க பொன்னாற்செய்த அழகிய மாளிகையினின்றுஞ் சிறுவர்களுடன் நீங்கி ஒருநாள் விளையாடல்செய்யுங்காலத்தில் மகரமீன்கள் மிக்க மலர்த்தடாகங்கள் பொருந்த வளர்ந்த தேன்கூடுகள் மலிந்த சோலையில் அடைந்தனன். எ - று.

செவ்வி - காலம். சுறு - மீன். இறால் - தேன்கூடு. (௪)

நலங்கிளர் முனவினை நண்ணவு மாங்கோ
ருலங்கொடு வைத்தொரு கொம்பின னென்ன
யலங்கிய தீம்புன லாட்டி நறுந்தே
னிலங்கலர் தூய்ப்பணிந் தேத்தின னன்னோன்.

(இ - ள்) நன்மை விளங்கும் பூர்வ புண்ணியமுடையவும, அவ்விடத்திருந்த ஓர் உருண்டகல்லைக் கொண்டுவைத்து ஏகதந்தமுகைய விநாயகக்கடவுளேயென்று (அதனை) அசைகின்ற மதுரமாகிய நீராலபிஷேகித்து நல்லதேனுடன் பிரகாசிக்கும் மலர்களாலருச்சித்து வணங்கித் துதித்து நீங்கினன். எ - று.

ஒருகொம்பினனென்றது விநாயகக்கடவுள் கயமுகனோடு போர்புரிகையில் அவன் எவ்வகையாயுதத்தாலு மிறவாது வரம்பெற்றிருப்பது கருதித் தமதுவலக் கொம்பைமுறித்தெறிந்தனரென்பது சரிதமாதலின. (௫)

மற்றைய நாளு மகாருட னேகிப்
பற்றின் மலர்ப்பசும் பந்தரு மிட்டு
முற்றின மென்ன முடித்தன னண்ணாற்
கற்றமி லர்விளை யாட்டரும் பூசை.

(இ - ள்.) (அதன்பின்னிட்ட) மற்றைத்தினத்துஞ் சிறுவர்களுடன் சென்று மனப்பற்றுடன் பசியமலர்களாற் பந்தருமிட்டு முன்னாளிற்செய்ததுபோலவே விளையாட்டாலாகிய அரியபூசையை விநாயகக்கடவுளுக்குக் குற்றமில்லாது செய்துமுடித்தனன். எ - று. (௭)

வேறு.

இன்ன வாறுவல் லாளன் பூசையி யற்று நாளினி லோர்தினந்
தன்னை நேருமை காரின் வாழ்வுத யங்கி ரும்பதி நின்றுபோ
யன்ன மாடும லர்த்த டங்க ளணிந்து சீதள மார்ந்துகார்
மின்ன ளாவிய சோலை யெய்திமி குஞ்சி றார்களை யேவினான்.

(இ - ள்.) இந்தவகையாக வல்லாளன் பூசைசெய்து வருநாளில் ஒருநாள் தனக்கொப்பான புத்திரர்களுடன் வளந்தங்கிய பெரியநகரத்தினின்றும் புறஞ்சென்று அன்னங்கள் மூழ்கும் பூந்தடாகங்கள் அழகுற்றுக் குளிர்ச்சிபெற்று மேகமும் மின்னலுங்கலந்த சோலையையடைந்து, மிக்கசிறுவர்களை (தொழில்செய்ய) ஏவினான். எ - று.

பலர்கள் காவண நாட்டி னார்பலர் பல்லி யங்களி யம்பினார்
சிலர்செ ழுங்கனி யீட்டி னார்சிலர் தேம லர்த்தொடை யாக்கினா
ரலர்செ ழும்புன லல்கி னார்சில ராணி னைந்துமுய்த் தார்சில
ரிலகு சாந்தமு ரிஞ்சி னார்சில ரின்ன ராயினர் யாவரும்.

(இ - ள்.) பலர்பந்தலிட்டனர்; பலர்பலவகை வாத்தியங்களை முழக்கினர். சிலர் செழுமைதங்கிய பழங்களைச் சேகரித்தனர், சிலர் தேன் சொரியும் மலர்மாலைகள் தொடுத்தனர்; சிலர் மலர்களும் செழிய நீருங்கொண்டுவந்து கொடுத்தனர்: சிலர் பஞ்சகவ்வியங்களைச் சேகரித்தனர்; சிலர் விளங்குகின்ற சந்தனமரைத்தனர்; எல்லாரும் இவ்வகையாக (வல்லாளனுடைய கணேசபூஜைக்கு உபகரணங்களைச் சித்தஞ்) செய்பவரானார்கள். எ - று. (௮)

நிறைக யப்புன லாடி மெய்யில்வெண் ணீறு பூசிவல் லாளனு
நறைம லர்த்தழை யால யத்தினை நண்ணி நாதனை யன்பினான்
முறையின் மெல்புன லாட்டி வண்டுமு ழுங்கு மாலைய ணிந்துபின்
குறைவி லுண்டிக ளல்கி யங்கைகு வித்தி றைஞ்சியி ருந்தனன்.

(இ - ள்.) வல்லாளன் நிறைந்த ஆழமாகிய நீரின்மூழ்கி, உடம்பிற்றிருவெண்ணீற்றினை (உத்தூளனமாக)ப்பூசி, தேனொழுகும் மலர்களால் மிக்குவிளங்குந் திருவாலயத்தை யடைந்து விநாயகக்கடவுளை அன்புடன்முறைப்படி மெல்லிய நீராலபிடேகித்து வண்டுகளொலிக்கு மலர்மாலையைச் சாத்திப்பின்னர் மிகுதியாகிய நிவேதனஞ்செய்து அழகிய கரங்களைக்கூப்பி வணங்கியிருந்தனன். எ - று.

வல்லாளன் ஸ்நானஞ்செய்து திருவெண்ணீறு சண்ணித்துத் திருவாலயமடைந்து அபிடேகித்து மலர்மாலைசூட்டி நிவேதித்து நமஸ்கரித்திருந்தனனென்பது கருத்து. (௯)

காலை யுண்டியொ டுச்சி யுண்டிக டிந்து வெங்கதிர் சாய்ந்திடும்
வேலை யுங்கிர கத்தின் மைந்தர்கண் மேவு றாமையி லின்றவ
ரால மென்னவ ழன்று போய்க்கலி யாண னுக்கறை வார்களின்
சில மைந்தனெம் மைந்த னைக்கொடு சென்று மீண்டில னின்னமும்.

பாவியாகிய கவியாணன் மனமிரங்காமல் வாயைமடித்து உதட்டைக்கடித்து எதிர்நின்று வருந்தும்படி கொடுஞ்சொற்களைக்கூறினன். எ - று. (௧௩)

முட்டி லாமல்வி நாய கன்பணி முற்றி னுய்க்கவ னேயினிக்
கட்ட விழ்த்திடுஞ் சோறு நீருங் கரத்தின வேட்டவு நல்கிடு
மொட்டி யுன்னுயி காக்கு மில்லினு ருதொ ழிந்திடி னுய்ந்தனை
யெட்டின் மாண்டனை யென்று கூறின னேதி லானின கன்றனன்.

(இ - ள்.) இடையூறில்லாமல் விநாயகபூசையை முடித்த உனக்கு அவ்விநாயகனே இனிக்கட்டவிழ்ப்பான், சோறும் நீரும் விரும்பியனவுங் கையிற்கொடுப்பான் தொடர்ந்து உன்னுயிரைக்காப்பான். வீட்டிற்கு வராதொழிந்தாற் பிழைத்தாய, (அவ்வாறின்றி) வந்தால் இறந்தாய என்று கூறி அயலானைப்போல நீங்கிச்சென்றான். எ-று.

முக்கண் யானைமு கத்த வாநினை முற்று நம்பிய நாயினேன்
அக்க டூாந்திடு ன விக்கி னங்கடி ரக்கு நாதனெ னும்பெயா
தக்க தோசுடா கால மாறினுஞ் சார்ந்த வன்பர்த மக்கெலாந
தொகக பேருண் மாறி லாயெனச் சொல்லி மைந்தனி தோதுவான்.

(இ - ள்) மூன்று திருவிழிகளையுடைய யானைமுகம்வாய்ந்த விநாயகக்கடவுளே! தேவரீரை முழுவதும் நம்பிய அடியேன் துக்கமநுபவித்ததால் (தேவரீருக்கு) விக்கினங்களை யொழிக்கும் விக்கினராசப்பெருமானென்னும் பெயர் தகுதியுடையதோ? சுடர்காலமாறினும் (தேவரீரைச்) சார்ந்த அடியவர்களுக்கெல்லாம் பேரருள் புரிதலில் மாறுபடுதலில்லாதவரே! என்று கூறி, வல்லாளன் (மேலும்) இதனைச் சொல்கின்றான். எ - று.

"சுடர்கால மாறினும்" என்றதற்கு, இருசுடர்கள் காலமாறித்தோன்றி மறையினும் என்றாவது, சுடர்களுங் காலமும் நிலைமாறினும் என்றாவது பொருள்கொள்ளலாம். (௧௪)

வேறு.

யாவ னொருவ னாலயத்தை யிறுத்தான கணேசர் திருவுருவை
யாவ னொருவ னெடுத்தெறிந்தா னெளியே னுடனெய்த் தோர்பெருக
யாவ னொருவன் பிணித்திட்டா னிறைவ னுனக்கு நிந்தனைகள்
யாவ னொருவ னன்னுமி சைத்தா னந்தக் கொடும்பாவி.

(இ - ள.) எவனொருவன் (யான் கணேசப்பெருமானுக்கியற்றிய) ஆலயத்தை யழித்தனனோ, எவனொருவன் கணநாதப்பெருமானுடைய திருவுருவை யெடுத்தெறிந்தனனோ, எவனொருவன் அடியேனுடலில் உதிரமபெருகும்படி கட்டிவிட்டனனோ, எவனொருவன் யோசியாமற்படி எம்பெருமானுக்கு நிந்தனைசொல்லினனோ அந்தக் கொடிய பாவியானவன். எ - று.

இதுமுதலிரண்டு பாடல்கள் குளகம்.

இச்செய்யுளிலுள்ள கொடும்பாவியென்னு மெழுவாய்வருஞ் செய்யுளிலுள்ள பிழையுறுகவென்பதைப் பயனிலையாகக்கொண்டது. (௧௫)

குருடாய் மூகை யாய்ச்செவிடாய்க் குறளா யுருவிற் கறைசியும்
பெருகா நிற்கும் புண்ணுமாய்ப் பிழை யுறுக பெருகுமத்

நமக்கப ராதஞ் செய்த நவையினர் நமக்குப் பக்தர்
தமக்கப ராதஞ் செய்த கறுகணா ரிவர்க ளெல்லாங்
குமைக்குமெவ் நிரயத் துன்பங் கூர்வர்கண் மறுமை யிம்மை
யிமைக்குமுன் முடிவு காணு விடும்பைநோ யுழப்ப ரன்றால்.

(இ - ள்) நமக்கு அபராதம் விளைத்த குற்றமுடையவர்களும், நமக்கு அன்பராயுள்ளவர்களுக்கு அபராதஞ்செய்த அஞ்ஞானமாகிய குணமுடையவர்களுமாகிய இவர்கள் யாவரும் குவிக்கின்ற கொடிய நரகவேதனையை மிக அடைவார்கள், மறுமையிலும் இம்மையிலும் விரைவில் ஒழிதலில்லாத துன்ப நோயால் வருந்துவார்கள் எ - று.

இருவர்க ளிடத்துங் குற்ற மிழைத்தக்க லியாணற் கின்னே
வெருவர விட்ட சாப மெய்ப்பயன் விளைத்தேம் மைந்தா
பொருமுத லொழிந்து நீயும் போகரு வரங்கள் கேளாய்
தருகுது மென்றான் கேட்டுத் தழைந்துவல் லாளன் சொல்வான்

(இ - ள்.) (யானும் என் அன்பனுமாகிய) இருவரிடத்துங் குற்றஞ்செய்த (உன் தந்தையாகிய) வல்லாளனுக்கு இப்பொழுது அச்சமுண்டாகும்படி (நீ) கொடுத்த சாபத்தின் உண்மைப்பயனை உண்டாக்கினோம் மகனே! நீயும் துன்பமடைதலொழிந்து அழியாத வரங்களைக் கேட்பாயாக (அவற்றைக்) கொடுப்போமென்று (விநாயகக்கடவுள்) கூறினார். வல்லாளன் (அவ்வார்த்தையைக்) கேட்டு மனங்களித்துச் சொல்கின்றான் எ - று (௨௧)

தாமரை பழித்த நின்பொற் றுணைமலர் நீங்கா வன்பே
மேயுறு மடியேற் கெம்பெரு மானெந் நாளுந்
தோமற விடத்திற் சேவிப்பவர்க் கெல்லாம் வேண்டுங்
காமமு மளிக்க வென்றன் கணபதி மாற்றஞ் சொல்வான்.

(இ - ள்) செந்தாமரை மலரைவென்ற தேவரீருடைய அழகிய உபயபாதங்களிற் பிரியாத அன்பினையே மயக்குகின்ற அடியேனுக்கு எம்பெருமானே! எக்காலத்துங் குற்றமற இவ்விடத்தில் பிரசன்னராக (தேவரீரை) வணங்குபவர்கட்கெல்லாம் வேண்டிய இஷ்டசித்திகளைக் கொடுத்தருள்கவென (வல்லாளன்) கூறினன். வேதியனைக் கண்ட விநாயகமூர்த்தி கிருபையுடன் சொல்கின்றார் எ - று (௨௨)

உனக்குநம் பாதப் போதிற் பிரிவிலா வன்பு தந்தா
மெனக்குநின் பெயர்முன் னூசப் பெயரிட்டிவ் வுலகம் போற்றித்
தனக்குறு வரங்கள் கொள்ளத் தங்கியிங் கிருந்துங் கண்டாய்
மனக்களிப் பொடுமண் விண்ணும் வந்தெமைப் பூசை செய்க.

(இ - ள்) உனக்கு நம்முடைய திருவடித்தாமரையில் (ஒருபொழுதும்) அகலாத அன்பினை யளித்தோம். எமக்கு உன்னுடைய பெயரை முதலாக (வல்லாளகணேசனென்று) பெயரிட்டு இவ்வுலகமானது துதித்துத் தனக்குவேண்டிய வரங்களைப்பெற இங்குத் தங்கியிருப்போம் மனக்களிப்புடன் பூலோகமுந் தேவலோகமும் எம்மை வந்து பூசைசெய்க எ - று (௨௩)

இங்குறு நமது மூர்த்தி யாவரே தெரிசித் தாலு
மங்கவர் தமக்கு வேட்ட வரும்பொரு ளளித்துண் டாக

பூப்பந் தர்புதுக் கியற்றன் மூழ்கித்
தேம்பைம் புனறீங் கனிந றுங்கா
யாம்பன் மலரா திபல விட்டி
யாம்பன் முகனர்ச் சனைதொ டுத்தான்.

(இ - ள்.) அழகிய பந்தரைப் புதிதாக்கி நீரில் மூழ்கி, வாசந்தங்கிய நல்ல சலமும், மதுரமான பழமும்; நறிய காய்களும், அல்லிமலரும் முதலிய பலவுபகரணங்களைச் சேகரித்து, யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் பூசையைச் செய்தனன். எ - று.

முன்செய்த பந்தரை அவன் தந்தையாகிய கலியாணன் அழித்தமையின் அதனை மீண்டும் சரியாக்கினனென்பார் "பூம்பந்தர் புதுக்கி" என்றார். (உ)

இவ்வா றனன்பூ சைசெய் திருப்ப
வவ்வா றிடர்செய் தகலி யாணன்
றுவ்வா ததகலா தருசா பத்
தெவ்வா ருறுநோய் கொடுதி கைத்தான்.

(இ - ள்.) இவ்வகையாக அவன் (கணேசமூர்த்தியைப்) பூசைசெய்துகொண்டிருக்க, அவ்வகையாக (வல்லாளனை முன்பு) துன்புசெய்தகன்ற கலியாண வைசியன், அநுபவியா தொழியாத சுடுசாபப்பகையாற் பொருந்திய நோயினைக்கொண்டு (செய்வதறியாது) திகைப்புற்றனன். எ - று.

சுடுசாபம் - சுடுகின்ற சாபம், அதாவது கொடிய சாபமென்பது பொருள்.

வேறு.

மைந்தனுட னாடியம கார்சிறிய ரோடி
யிந்துமதி கேள்வணிக னெய்தியலை செய்து
பந்தமுற வீக்குமக னைப்பரிவி லானாய்
வந்தனனெ னச்சொலவு மாழ்குமனை யாண்முன்.

(இ - ள்) சிறுவராகிய, வல்லாளனுடன் விளையாடிய பிள்ளைகள் ஓடி, மனம் வருந்தும் இந்துமதியின் முன்சென்று, இந்துமதியே! கேட்பாயாக. (நின்கணவனாகிய) கலியாணன் உன்மகனை யடைந்து துன்புறுத்திப் பந்தப்படும்படி கட்டி மனமிரங்காதவனாய் வந்தனனென்று சொல்ல. எ - று. (ச)

கண்ணறிவு வாக்கறிவு காதறிவு நீங்கிப்
புண்ணுருவ னாகிவளர் புந்தியும்பு ணாகி
நண்ணினவ லக்கடல யாதுவிழு நாய்கன்
பண்ணின்மொழி யிந்துமதி பார்த்துமிக வாடி.

(இ - ள்.) துன்பமாகிய கடலில் விரும்பி விழுந்த கலியாணனென்னும் வைசியன் கட்புலனாகிய அறிவும் வாக்கினாலறியும் அறிவும் காதாலாகிய அறிவுமொழிந்து, புண்ணுடைய வடிவினனாகி, வளர்கின்ற மனமும் புண்பட்டுப் பொருந்தினன். பண்ணைப்போலுஞ் சொல்லையுடைய இந்துமதி யென்பாள் (அதனைப்) பார்த்து மிகவும் வாட்டமடைந்து. எ - று.

"கண்ணறிவு வாக்கறிவு காதறிவு நீங்கி" என்றது, குருடும் மூமையுஞ் செவிடுமாகி யென்பதாம்.

மைந்த புத்திர தருமநீ மதித்துவெப் பகன்று
நுந்தை வெம்பிணி தீருமா றுவலுமந் திரங்கள்
சந்த மாமணி மருந்திவை தம்முள்யா தியைவ
தந்த நல்லுபா யத்தினை யாற்றுதல் வேண்டும்

(இ - ள்) மகனே! நீ புத்திர தருமத்தை யெண்ணிக் கோபமொழிந்து, உன் பிதாவின் தீப்பிணியகலும் வகையாக, சொல்லத்தக்க மந்திரம் - அழகுடைத்தாகிய மணி - மருந்து ஆகிய விவற்றில் எது பொருந்துவதோ அந்த நல்ல உபாயத்தை நீ செய்தல்வேண்டும் எ - று. (கஅ)

கேண்மை மைந்தர்கட் டந்தைதாய் வார்த்தைகீழ்ப் பார்க்க
லாண்மை யீப்பது வென்பார் நான்முக னுணர்ந்தோர்
கண்மை யாத்தகவென் முகத்தைக்கண் டுளை கேளென்
றெண்மை யாத்தகவ ளிப்பம்பா லாளன்பார்த் திசைக்கும்.

(இ - ள்) ஆசைப்புதல்வ! நீ தந்தை தாய் இவர்கள் கூறும் வார்த்தையைத் தாழ்வுபடுத்தாத ஆட்சியே உச்சம தருமென்று வேதமுதலியவற்றை யுணர்ந்தவர் கூறுவர். மைதீட்டிய வென்முகத்தைப் பார் என உறுகிமொழியைக் கேள் என்று, மெலிவையுடைய இந்துமதி யென்பாள் கூற, வல்லாளன் (தன் தாயைப்) பார்த்துச் சொல்லுகின்றான் எ - று. (க௯)

வேறு

கருவாய் வளர்ந்த காலு மகட்டி றக்கழன்று புறக்
குருவாய் வளர்ந்த காலு முயிர்க்குயி ராயெவையுந்
தருவானு மாயத் தந்தை தாயரு மாமொரு தாதனலா
லிருமா நிலத்தினை வாரோ வெனக்கப் பனையுமே.

(இ - ள்) (தாயாயிற்றிற) கருவாகி வளருங்காலத்திலும், வயிற்றினின்றும் நீங்கிப் புறத்தே (உருவாகி) வளருங்காலத்திலும், உயிருக்குயிராகி யெல்லாவற்றையுந் தருபவனுமாய், தந்தை தாயருமாகிய ஏகதந்த விநாயகக்கடவுளல்லாமல், பெரிய பெருமைதங்கியவுலகத்தில் வருந்துபவர்களோ எனக்குத் தந்தையுந் தாயுமாவார்? எ-று

இருமாநிலத்தினைவாரோ வென்பதை இருமாநிலத்து இனைவாரோவென்று வகுத்து, இருமாநிலத்தில் நைவாரென்றுவது பிரிக்க இனைதல் நைதல் இவ்விரண்டும் வருந்துதலென்னும் பொருளுடையன (௨௦)

ஆமே பொருவ ரொருவர்க் கிடரை யகற்றுவது
மாமே பொருவ ரொருவர்க் கிடைநன்மை யாக்குவதுந்
தாமேது செய்தன ரன்னது தாமே புசிப்பதன்றிப்
போமே தலையிற் பொறித்தான பிறழ்ந்து நினைப்பினுமே.

(இ - ள்) ஒருவருக்குற்ற துன்பத்தை விலக்குவது ஒருவருக்கு (சாத்தியம்) ஆமோ? ஒருவருக்கு நன்மையுண்டு செய்வதும் ஒருவருக்கு (சாத்தியம்) ஆமோ? தாம் எதைச் செய்தனரோ, அதைத் தாமே புசிப்பதல்லது, தலையில் எழுதிய பிரமதேவனே மீண்டு கருதினாலும் (அது அவனால்) விடுபடுமோ? எ - று.

பொற்ற நலமெலும் புலோமசை யாதியோ ரிருப்பத்
தற்றை மென்குழ லொருத்தியாற் காவலன் கரந்தான்
பெற்ற தைச்சிறி தாக்கியே பெருந்தி யிச்சை
முற்றி வீக்குமா ணவவலி யகலவோ மொழிவீர்.

(இ - ள்) நல்ல அழகைத்தாங்கிய இந்திராணி முதலிய மங்கையர் (எண்ணிறந்தோர் புலோமசியின்பக்கத்து) இருக்கவும், சிறுமையாகிய மெல்லிய கூந்தலையுடைய ஒரு பெண்ணால் இந்திரன் (சாபமேற்று உடல் ஒளி) ஒளித்தனன் பெற்ற பொருளைச் சிறிதாகமதித்துப் பெறாத பொருளில் விருப்பமுடிக்கும் ஆணவவலிமையை எவர்தாம் நீக்கவல்லவர்? எ - று.

புலோமசையாதியோர் என்றதில் ஆதியோர் என்றது அரம்பை முதலிய எண்ணிறந்த தேவதாசிகளை.

பெற்றதைச் சிறிதாக்கியே பெருந்தியிச்சை முற்றுவித்தலென்றதை,

நீதிநெறி விளக்கம்

"பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளுஞ்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா —என்பதனாலுணர்க. (௬௩)

இன்ப மாதரார் போகமென் றியம்புவ ரறியார்
துன்ப மாகுமோ வின்பமுஞ் சுராதிப னொருமா
தன்பி னாலழி யாத்துய ருழந்தனன் கணேசன்
றன்ப தாம்புய மலர்துவே யின்பெனத் தகுமோ.

(இ - ள்.) சுகமென்பது மாதர் சம்போகமென்று (உண்மை) தெரியாதவர்கள் சொல்வார்கள் (அப்படியாயின்) இன்பமும் துன்பத்தை யுண்டுசெய்யுமோ? (செய்யப்படாதாகலின் அஃதின்பமன்று அதற்குச் சாட்சியாக) தேவர்கட்கிறைவனான இந்திரன் ஒரு பெண் விருப்பத்தால் அழியாத்துன்பத்தை யடைந்தான் (ஆனால் உண்மையாக) கணேசப்பெருமானுடைய திருவடித்தாமரையல்லாமல் வேறொன்றை இன்பமென்று சொல்லத்தகுமோ (சொல்லத்தகாது) எ - று. (௬௪)

இந்திரன் சாபம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௫௦௨

---

## கடவுளர் குருவுக்குக்

# கவுதமருபதேசித்தபடலம்

இந்திர னெய்திய செய்தித்
பகர்ந் ரவன்டி விழிபட்
[illegible] ராசனை தீர்ந்திலர்
[illegible] கரிப்பினைக் கண்டிலார்.

(இ - ள்) இந்திரன் (கவுதமமுனிவர்சாபத்தாற் பெண்குறியுடம்பு) அடைந்தது மட்டுமல் [illegible] (அதனையுணர்ந்து) தேவர்கள் இந்திரனுடைய பாதங்களைப் பணியும்படி

ளெல்லாருக்கும் அதிகரித்த பெருஞ்சுவையுடைய உணவுகளை நாடோறும் (மேகம் போலச்) சொரிந்த செவ்விய கைகளையுடைய கவுதமமுனிவரே! தேவீருடைய பெருமையை யாவர்தாஞ் சொல்லவல்லவர்கள்? எ - று.

வேலை யுண்டனன் குறுமுனி யுலகமும் வேறே
சால விச்சுவா மித்திரன் சமைத்தனன் சிவனார்
கோல விந்திர னோச்சிய கொலைபழுத் தொழுகுஞ்
சீல வச்சிரக் கோடுகைத் தம்பனஞ் செய்தார்.

(இ - ள்.) அகத்தியமுனிவர் சமுத்திரத்தை ஆசமனஞ்செய்தனர். விச்சுவாமித்திரமுனிவர் வேறே யுலகத்தையும் விருதியாகப்படைத்தனர். சியவனமுனிவர் அழகிய இந்திரன் தன்மேலோச்சிய கொலைத்தொழிலின் மிக்கு விளங்குஞ் சிறந்த வச்சிராயுதத்துடன் கையையுந் தம்பனஞ்செய்தனர். எ - று.

இந்திரனுக்குத்தோற்ற விருத்திராசுரன் கடலிலொளிக்க, அவனைக்கொல்ல வேண்டிய இந்திரன் வேண்டுகோளுக்கிரங்கிய அகத்தியமுனிவர் கடலைப்பருகி அவனை வெளிப்படக் காட்டினராகலின் "வேலை யுண்டனன் குறுமுனி" என்றார் இதனை,

திருவிளையாடற்புராணம்.

கைதவன் கரந்து வைகுங் கடலைவெற் படக்குங் கையிற்
பெய்துழுக் கெதலைத் தாக்கிப் பருகினன் பிறைசேர் சென்னி
யையனை தருளைப் பெற்றார்க் கதிசய மிதென்கொன் மூன்று
வையமுந் தொழிலுஞ் செய்ய வல்லவ ரிவரே யன்றோ."—என்பதனாலுணர்

"உலகமும் வேறே சால விச்சுவா மித்திரன் சமைத்தனன்" என்றது—வசிட்டரால் மாறுபட்ட காதிபுத்திரரான விச்சுவாமித்திரமுனிவர் தம்மைச் சரணடைந்த திரிசங்கு என்னும் மன்னனுக்குத் தமது தவவலியால் நூதன சுவர்க்கம் படைத்த பொழுது, அதைச்சூழ மற்றும் பல உலகங்களையும் படைத்தனரென்பது. இது பல நூல்களிலும் பிரசித்தம்.

சையாதி யரசன மகள் மலர்கொய்து விளையாடி வனத்திற்சென் றுலாவுகையில், ஆங்குப் புற்றினுண் மறைந்து தவமியற்றி நின்ற சியவனமுனிவரை யறியாது துன்புவிளைக்க, அதனை யறிந்த சையாதி அம்முனிவரைப் பிரார்த்தித்துத் தன் மகள் செய்த குற்றத்தை மன்னிக்கச்செய்து, தன் குமாரத்தியை அம்முனிவர்க்கு மணம் புணர்த்தினன். சியவனமுனிவர் அம்மங்கையுடன் வாழ்கையில், அவளைக் காணுற்று வந்த அசுவினிதேவர்களால் இளமைப்பருவமுற்று, தன் மனைவியின் கற்பு விசேடத்தையுமறிந்து, அதற்குப் பிரதியுதவியாக அவ்வசுவினிதேவர்க்கு யாகத்தில் அவிப்பாகமளிக்க, அதனைப்பொறாத இந்திரன் போர்க்கோலங்கொண்டேவிய வச்சிராயுதத்தைத் தம்பிக்கச்செய்தனர் என்பது சரிதமாதலின் "கோல விந்திர னோச்சிய கொலைபழுத் தொழுகுஞ் - சீல வச்சிரத் தோடுகைக் கம்பனஞ் செய்தார்" என்றார். இதனை இந்நூலாசிரியரியற்றிய

பூவாளூர்ப்புராணம்.

'பாழி கற்றவ வல்ல வனைபகர் பாக மன்றநி றுதந்து
மூழி யங்கியெ னக்கி ளர்ந்தரு மேறு யர்த்தவன் வேலவியைப்
பூழி செய்திவ ணூவி புண்மியின் போல நன்றிவி டேனெனச்
சூழி வெண்கவி நந்தி வச்சிரஞ் சுற்றி யோச்சின ளுன்றிடே.

கனை மாதவ ரஞ்சியாளிக வாய்ந்த வர்க்கை னற்கவனை
மண்டு மேல்வியின் முன்னி ருந்திடு மாற்ற லர்க்குரு மேறனுன்
மிண்டி மேல்விழும் வச்சி ரத்தினை வெய்து னோச்சின னப்படை
அண்ட ரன்றகு கற்பி னூர்விழிக் கஞ்ச காமுகர் செஞ்சென எனவருஞ்
செய்யுட்களானுணை (௧௦)

வால கில்லியா வலாரியை வேறுற வகுத்தா
ரோது முதக்கம வாகையா ரிருந்தவ மிகுத்த
சீல மலகுறாத தெரிசனம் பரிசனம் வசன
ஞால மைப்பிடை பாவங்க ளவிவன வன்றே.

(இ - ள்.) பொருந்திய உத்தமரே! வாலகில்லிய முனிவர்கள் இந்திரனை வேறாகச் சிருட்டிசெய்தார்கள். ஆகையால், பெருந்தவங்களை மிகுதியாகவுடைய நல்லொழுக்கமிக்க தேவரீருடைய தெரிசனமும பரிசனமும் வசனமு முதலியவற்றால் உலகத்திலே பாவங்கள் அழிவனவல்லவா? எ - று.

வாலகில்லியர்கள் ஒருகாலத்தில் இந்திரனை வேறாகச் செய்தார்களென்பது புராண சரித்திரம். தரிசனம் பரிசனம் வசனமென்பவற்றுள் தரிசனம - பார்த்தல், பரிசனம் - தொடுதல், வசனம் - சொல்லல். "ஆமை மீன் பறவைபோல" என்றா பிறரும். மீன் முட்டையைப்பார்த்தும், பறவை முட்டையை அடைகாத்தும், ஆமை வசனித்தும் காக்குமென்பது. இவற்றைப்போல ஞானி கண்ணாற் பார்த்தும் கையாற் பரிசித்தும் வாயால் ஆசிர்வதித்துந் தன்னை யடைந்தவனைக் கிருதார்த்தனாக்குவ னென்பது. (௧௧)

பார்த மக்குப காரமே செய்வது ——
சரண டைந்தவா தமைமிகத் தாங்குவீ ரென்று
புரவ லன்பொருட் டுமைசா ணடைந்தனம புகலவே
றொருவ ரில்லென வுவப்புறு மிசொலா லிரந்தார.

(இ - ள்) நல்லவர்க்குதவிசெய்வதையே பழகினவரே! அடைக்கலம் புகுந்தவர்களை மிகவும் ஆதரிப்பவரே! எம்மரசனாகிய இந்திரனுக்காகத் தேவரீரைச் சரணமடைந்தோம். அடைக்கலம் புகுதற்கு வேறொருவருமிலரென்று, கவுதமமுனிவர் களிப்புறத்தக்க இனிய சொற்களால் யாசித்தார்கள எ - று. (௧௨)

இரந்த வானவர் முகத்தினை நோக்கினன் றிருடி
பரந்த ஞானநேத் திரங்களாற் பாரதிடப் படுவீர்
சுரந்த வாட்டமோ டெதிருறப் போந்தனிர் சுரர்காள்
கரந்தி டாதுமக் காவன கரையின்க ளென்றான்.

(இ - ள்.) கவுதமமுனிவர் (அவ்வாறு) யாசித்த தேவர்கள் முகத்தைப் பார்த்துக்கொண்டு, விசாலித்த ஞானவிழிகளாற் பார்க்கப்படுவீர்கள்! தேவர்களே! மிக்க மனவருத்தத்துடன் என்னெதிரிற் பொருந்த வந்தீர்கள். ஒளிக்காமல் உங்களுக்கு (என்னால்) ஆகவேண்டுவனவற்றைச் சொல்லுங்களென்றார். எ - று. (௧௩)

உறுவ ரன்றிரு வாரத்தை [illegible] புலவு
முறுகு [illegible]

மறுவில் சிந்தைதன் மதியெதிர் கடலென மகிழ்ந்து
சிறுமை யுண்டுகொல் சேர்ந்தவர்க் கென்றுசெப் புவரால்.

(இ - ள்.) சிரேட்டம் பொருந்திய கவுதமமுனிவர் கூறிய திருவார்த்தை யைக்கேட்டு, தேவர்களெல்லோரும் தீமைசெய்யுந் துன்பமுழுவதையு மொழித்தோ மென்று, குற்றமில்லாத தமது சிந்தைகள் (பூர்ண) சந்திரனைக்கண்ட கடலைப்போலப் (பொங்கி) மகிழ்ந்து, தேவரீரை யடைந்தவர்களுக்குத் தாழ்விருக்கின்றதோ ? (இல்லை) என்று சொல்வார்கள். எ - று. (௧௪)

நீற்று மேனியர் மாரனை நீற்றினாற் போல
வாற்றன் மாதவ வரும்பிழை புரிந்தவா சவனைக்
கூற்றம் வாய்மடுத் துணக்கொளுஞ் சாமபராக் காது
போற்றி வைத்ததும் புண்ணியா வெம்பொருட் டன்றே.

(இ - ள்.) வலிதங்கிய சிறந்த தவமுடையவரே ! திருநீற்றையணிந்த திரு மேனியையுடைய சிவபெருமான் மன்மதனைச் சாம்பர் செய்தாற்போல, செய்தற்கரிய குற்றத்தைச்செய்த இந்திரனை, இயமன் வாய்மடுத்துண்ணும்படி மிக்க சாமபராகச் செய்யாமல் உயிர்காத்துவைத்ததும் எங்கள் நிமித்தமாகவல்லவா ? டணணிய சுரூபி யாகிய கவுதமமுனிவரே ! எ - று. (௧௫)

அடிகள் சிந்தையி னினைத்தவா றேயெமக் காக
முடிகொள் வாசவன் முதிரெழிற் பொன்னக ரிருந்து
வடிகொள் வாளவு ணக்குறும் பறுத்தர சியற்றப்
படியி லாதசா பத்தினைப் பாற்றுக வென்றார்.

(இ - ள்.) தேவரீர் திருவுள்ளத்திற் கருதியவகையே யெங்களுக்காக, கிரீட மணிந்த இந்திரன் மிக்க அழகுவாய்ந்த (அமராவதியென்னும்) பொன்னகரத்திலிரு ந்து, கூர்மைபொருந்திய வாளேந்திய அவுணர்களாகிய குறும்புகளை யகற்றி அரசு நடத்தும்படி, (தேவரீருடைய) எல்லையில்லாத சாபத்தை விலக்கியருள்புரியவேண்டு மென்றார்கள். எ - று. (௧௬)

அறிவி லாதவன் வஞ்சகன் றுட்டனு சாரக
குறியி லாதவன் கொண்டதன் னுயிர்பிற வுயிர்க்குஞ்
செறியு மாதர விரக்கமில் லாதவன் செப்பு
நறுக ணாளனைச் சாற்றலு நினைத்தலு மாகா.

(இ - ள்.) புத்தியில்லாதவனும், வஞ்சகனும், துஷ்டனும், நல்லொழுக்கத் தின் அடையாளமில்லாதவனும், கொண்ட தன்னுடைய உயிருக்கும் பிறருடைய உயி ருக்கும் மிகுந்த ஆசையும் இரக்கமுமில்லாதவனும், சொல்லுகின்ற வஞ்சமைக்குண முடையவனுமாகிய அவனை (வாயால்) சொல்லுதலும் (மனதால்) நினைத்தலுங் கூடாது. எ - று. (௧௭)

தீய னாவ னொருவன்மேற் பகைருள் செலுத்திற
றாய னாகுல னீவிர்கள் கொக்கருள் செயலாற்
பாய பாதகக் குலிசியும் பற்றிலன் புனித
மாய தாவற கருணைய மெனுமுனி புறையுட

(இ - ள்.) கொடியவனை யொருவன்பேணிற் பலர் இருமை வைப்பார்களாயின் அவன் புனிதனாவான். (அதுபோல) நீங்கள் கூடிக் கருணைசெய்வதால், பரவிய பாதகத்தையுமுடைய வச்சிராயுதமேந்திய இந்திரனும் புனிதமாயினன். ஆனபடியால் அவனுக்கருள் செய்வோமென்று கவுதமமுனிவர் கூறுகின்றார். எ - று. (௧௮)

தமனி யப்பெயர்க் குரவனைத் தனித்துற வழையா
னமல முத்தொழி னடைபெற மூவரா யமர்ந்த
விமல மல்கிய விநாயகன் சடக்கர நினக்குச்
சமல வல்வினை விடைகொளச் சாற்றுதுந் தனித்து.

(இ - ள்.) பொன்னென்னும் பெயரையுடைய (தேவ) குருவைத் தனித்து வரவழைத்து, புனிதமான (சிருட்டி முதலிய) முத்தொழில்கள் நடைபெறும்படி (பிரமன் முதலிய) திரிமூர்த்திகளாகப் பொருந்திய புனிதத்தன்மை மிக்க விநாயகக்கடவுளுடைய சடக்கர மந்திரத்தை, உனக்கு மலசமூகமாகிய வலிய வினையினது விடைபெற்றுக்கொள்ளும்படி தனித்துச் சொல்லுவோம். எ - று. (௧௯)

தடித்தி ருமுகி லூர்தியான் றனக்கிருந் தீக்கை
முடித்துத் தொன்மையிம் முதுமனு முற்றிய சாப
மிடித்தி யோனியெ லாம்விழி யெனச்செயும் பவமும்
பொடித்தி டும்பதந் தருமென வருளொடும் புகன்று.

(இ - ள்.) மின்னலையுடைய பெரிய மேகத்தை வாகனமாகக்கொண்ட இந்திரனுக்குப் பெரிய தீக்கை முடித்து, இப்பழமையாகிய மந்திரத்தை உபதேசஞ்செய்ய அது மிக்க சாபத்தை யொழித்து (அவனுடலிற் பொருந்திய) பெண்குறிகளையெல்லாம் விழிகளாக மாறச்செய்யும். பிறவியையு மொழிக்கும். திருவடியைக் கொடுக்குமென்று, அருளையுடன் (அதனை) உபதேசித்து. எ - று. (௨0)

சிவமெ லாந்தருஞ் சடக்கரந் தீக்கையோ டுதவி
யவமெ லாங்கெட வநுட்டிக்கு முறைமையு மறைந்தான்
பவமெ லாந்தெறக் கேட்டவன் பண்ணவ ரோடு
தவமெ லாநிறை முனிவனைத் தாழ்ந்தனன் போந்தான்.

(இ - ள்.) மங்கலங்களை யெல்லாங் கொடுக்குஞ் சடக்கர மந்திரத்தைத் தீக்கை விதியுடன் உபதேசித்து, துன்பங்களெல்லாவற்றையு மொழிக்கத்தக்க அநுட்டான முறையையுங் கூறினர். பாவங்களெல்லாமொழிய (அதனைக்) கேட்டபிரகற்பதி முனிவன் தேவர்களோடும், எல்லாத்தவங்களு நிறைந்த கவுதமமுனிவரைத்தாழ்ந்து (விடைகொண்டு) சென்றனன். எ - று. (௨௧)

வேட்டு ளார்க்கெலா வரமருள் விண்ணவர் வேந்த
னீட்டு தீவினை யிமையவ ரனைவரு முயன்று
வாட்டு வாரெனின் மண்மிசை வைகலும் பாவ
மீட்டு வார்க்கது நீங்குமோ வெழுமையு நிருபா.

(இ - ள்.) உருக்குமாங்கதராசனே! விரும்பியவர்களுக்கெல்லாம (அவர்கள் விரும்பிய) வரங்களைக்கொடுக்குந் தேவேந்திரன் தேடிக்கொண்ட பாவத்தை, தேவர்க

னெல்லோரும் முயற்சிசெய்து அழிப்பார்களென்றால், பூமியில் நாடோறும் பாவஞ் சமபாதிப்பவர்களுக்கு எழு பிறவிகளிலும் அப்பாவமகலுமோ? (அகலாது.) என

கடவுளா குருவுக்குக் கவுதமருபதேசித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௫௨௪.

---

# இந்திரனுபதேசம்பெற்றபடலம்.

---

கவுதம னருள்பெறுங் கடவு ளார்களுஞ்
சவலையின் மதிமிகு தமனி யபெய
ரவனுமென் மொழிப்படி யடுத்து மேருவைத்
தவழ்திரை மாமடுச சார்ந்து கூவுவார்.

(இ - ள்.) கவுதமமுனிவர் கிருபையை யடைந்த தேவர்களும், மயக்கமில்லாத அறிவுமிக்க பொன்னின் பெயராவாய்ந்த பிரகற்பதிமுனிவனும் என்சொற்படி மேருமலையை யடுத்து, தவழ்கின்ற அலைகளையுடைய மகாமடுவைச்சார்ந்து (பின்வருமாறு) கூப்பிடுவார்கள். எ - று. (௧)

ஓஒச தக்கிருது வேயும்பர் வேந்தனே
யோஓ வயிராணி யின்னுயிர்க்குத் தோழனே
யோஓ தயித்தியர் குலமொறுக்கும வீரனே
யோஓ மகவான் வெளியுறுதல வேண்டுமே.

(இ - ள்.) ஓஓசதக்கிருதுவே! தேவர்களுக்கரசனே! ஓஓ இந்திராணியின் இனிய உயிர்த்தோழனே? ஓஓ தயித்தியர்குலத்தைச் சங்கரிக்கும் வீரத்தன்மையுடையவனே! ஓஓமகவானே! (நீ) வெளியேவருதல் (எங்களுக்கு) வேண்டியது. எ-று.

சதக்கிருது - நூறு அசுவமேதஞ்செய்தவன்; சதம்=நூறு, கிருது=யாகம். மகவான் என்பதில் மகம்=யாகம். (௨)

வெச்சென சபித்துனை விடுத்த மாதவன்
பொச்சமில் கழன்மலர் போற்றி நின்னுளத்
தச்சம தறுமவ னருளோ டெய்தினு
நச்சிய நாரதர் தாமு நண்ணினார்.

(இ - ள்.) கோபித்து உன்னைச்சாபமிட்டனுப்பிய பெருந்தவசியாகிய கவுதமமுனிவருடைய பொய்மையில்லாத திருவடித்தாமரையைத் துதித்து, உன்மனதிலுள்ள பயமொழியும்படி அவரருள்பெற்றடைந்தோம். (யாவரும்) விரும்பிய நாரதமுனிவரும் வந்திருக்கின்றனர். எ - று. (௩)

அவரவர் புரிபிழை யகத்தி ராவகைத்
தவவெளி யுரைத்திடற் றக்க மேதையோர்
கவலையு முடனறக் கழுவு வாரதோ
இவ்வுவ துரைத்திடா தொளிப்பின் மன்னனே.

(இ - ள்) அவரவர்செய்த குற்றங்களை மனத்திலிராவகையாக அறியும்படி வெளியிட்டுச்சொன்னால், தகுதியாகிய ஞானமுடையவர்கள் (குற்றத்தையேயன்றி அதனாலான) துன்பத்தையும் உடனே விலகும்படியொழிப்பார்கள். அரசனே! அதனைச் சொல்லாது மறைத்துவைத்தால் அதிகமாகும். எ - று. (௪)

புரிநரம் புளர்ந்திசை பொழியும் வீணையின்
விரிபுகழ் நாரத முனிவர் வேறுறும்
பெரியவ ரிவர்முனம் பேசி நின்பிழை
பிரிவது செயலினிப் பேணத் தக்கதே.

(இ - ள்) முறுக்கமைந்த நரம்புகளைத்தூண்டி இசை (மழை)யைப்பெய்யும் வீணை(யாகிய மேகத்தின்) உடைய பரந்தகீர்த்திவாய்ந்த நாரதமுனிவர் வேறாகவரும் பெரியவர். (ஆதலின்) இவர்முன்னே உன்னுடைய குற்றத்தைச்சொல்லி அதனை யொழிக்கச்செய்வது இனிச்செய்யத்தக்கது. எ - று. (௫)

உருத்திரன் மன்றலி னுமைதன் சீரடி
யுருத்தகு பெருவிர லுவந்து நான்முக
னுருதவெழு பாவமு நாணு மோம்பினு
னுருத்திரன் றிருவரு ளுதவப் பட்டரோ.

(இ - ள்.) சிவபிரானுடைய திருமண மகோற்சவத்தில், உமாதேவியின் சீர்பொருந்திய திருவடியிலுள்ள அழகுவாய்ந்த பெருவிரலை நான்கு முகங்களையுடைய பிரமதேவன்விரும்பிச்சிவகடாட்சமருளப்பெற்று,சினந்தெழுந்த பாவத்தையும் நாணத்தையுங் காத்தனன். எ - று. (௬)

ஆதலா னீயுமின் றகத்தி னீங்கிடப்
போதுவா யீங்கெனப் புலவர் கூறலுஞ்
சீதநீர்த் தாமரைச் செறிமுட் டாளினின்
றேதமோ டிந்திர னிம்மென் றெய்தினான்.

(இ - ள்.) ஆனபடியால், நீயும் இப்பொழுது பாவத்தினின்றும் விலகும்படி இங்கேவருவாயாகவெனத் தேவர்கள் சொல்லவும், குளிர்ச்சிபொருந்திய நீரிலுள்ள தாமரையின் முட்கள்நெருங்கிய தாளினின்று தன் குற்றத்துடனே இந்திரன் விரைந்துவந்தனன். எ - று. (௭)

விண்குடி வாழ்க்கையர் வேந்தன் முந்துறப்
பெண்குறி நோக்குதல் பிழையென் றேசிலர்
கண்களைப் புதைத்தனர் கவிழ்ந்திட் டார்சில
ரொண்கர நாசியி னுறுவித் தார்சிலர்.

(இ - ள்.) விண்ணுலகிற் குடியிருக்குந் தேவர்கள் தமதரசனாகிய இந்திரன் (தமக்கு) நேரில்வர (க்கண்டு, அவனுடலிலுள்ள) பெண்குறிகளைக்காண்பது குற்றமென்று சிலர் கண்களைமூடிக்கொண்டனர். சிலர் தலைகுனிந்துகொண்டனர். சிலர் ஒள்ளியகையை மூக்கின்மேலே வைத்துக்கொண்டனர். எ - று.

இந்திரன் தன்னுடலிற் பெண்குறிகளடைந்திருந்தமை கண்ட தேவர்கள் செயலை இச்செய்யுளாற் கூறினர். (௮)

வலாரியுஞ் செய்பிழை யுரைத்து மந்திரத்
துலாவுமெஃ கறிஞ னுரைத்த மந்திரங்
கலாநிதி கண்டதோர் கயிர வம்போலக்
குலாவிய விதிமுறை கொண்டு வந்தனன்.

(இ - ள்.) இந்திரனுந் தான்செய்த குற்றத்தை (பகிரங்கமாக)க்கூறி, மந்திரத்தாலுலாவுகின்ற எஃகாயுதம்போன்ற அறிஞனாகிய பிரகற்பதிமுனிவன் சொல்லிய மந்திரத்தை, சந்திரனைக்கண்டதோர் ஆம்பன்மலர்போல (க்களித்து)ச் சொல்லிய விதிமுறையாகப் பெற்றுக்களித்தனன். எ - று.

கலாநிதி - கலைகளுக்கிருப்பிடம்; சந்திரன். (௧)

திருக்கரு மந்திரஞ் செவியி னேறலும்
வருத்திய சாபமுன் மருவி னாலெனப்
பொருத்திய பயனதாய்ப் புரையி னல்லதீர்ந்
துருத்தகும் யோனிக ளொளிர்கண் ணாயினான்.

(இ - ள்) திருத்தமாகிய சடக்கரமந்திரமானது தன்செவியிற் புகுதவும். தன்னைத் துன்புசெய்தபாவமானது முன்னே (கவுதமர்கூறிய உடனே) வந்ததுபோல, கூட்டிய பிரயோசனமுடையதாகி விரைவில் குற்றத்தினின்று விலகி, உருவமைந்த பெண்குறிகளெல்லாம் பிரகாசிக்கின்ற கண்களாக மாறப்பெற்றனன். எ - று.

கவுதமரிட்ட சாபம் உடனே தொடர்ந்தாற்போல, பிரகற்பதியினிடஞ் சடக்கரோபதேசம் பெற்றவுடனே அக்குறிகளெல்லாம் கண்களாயினவென்பது கருத்து.

அருந்தவ ரென்னொடு மயில்கொள் வேலனே
திருந்திய வாசிகள் செப்ப விண்ணவர்
சொரிந்தனர் மலர்கடுந் துமிமு ழங்கின
வரம்பையர் நிரைநிரை யாகி யாடினர்.

(இ - ள்) கூர்மைபொருந்திய வேற்படைதாங்கிய உருக்குமாங்கதராசனே என்னுடன் அரியதவஞ்செய்த முனிவர்கள் (பலர்) திருத்தமாகிய ஆசிமொழிகள்கூற, தேவர்கள் மலர்மாரி பெய்தனர். தேவதுந்துமி முழங்கின. தேவதாசிகள் வரிசை வரிசையாகி நடனஞ்செய்தார்கள். எ - று. (௧௧)

கின்னரர் பாடினர் கிளர்ந்த மாகத
ரின்னிசை புகழ்ந்தன ரிறைஞ்சி யேனையோர்
நின்னையில் லாதயர் நிலவி லாவிர
வன்னையி லாமக வாயி னோமென்றார்.

(இ - ள்.) கின்னரர்கள் பாடினார்கள். சொல்லிய மாகதர்கள் இனிய கீர்த்தியைப் புகழ்ந்தார்கள். பிறர் இந்திரனைப்பணிந்து, ஐயனே! உன்னையில்லாமல், சந்திரவொளியில்லாத இரவும், தாயில்லாத குழந்தையுமானோமென்று சொன்னார்கள். எ-று.

மாகதர் - அரசனுக்கும் வைசியமாதுக்கும் பிறந்து பிறர் வீரத்தைப்பாடுவோர்.

அவ்விய மகன்றவெஞ் சுறவா தங்களை
யொவ்வொரு முனிவரே யுலப்பி லும்பரா
செவ்வகைப் பெருமையு மியைந்து ளீரென
தெவ்வடு வச்சிரன் செப்பித் தாழ்ந்தனன்.

(இ - ள்.) பொறுமையொழிந்த மனத்தையுடைய முனிவர்களை நோக்கி, நவ்வொருமுனிவரும், கெடுதலில்லாத தேவர்களுடைய எவ்வகைய புகழையும்பொருந்தினீர்களென்று, பகைவரைக்கொல்லும் வச்சிராயுதமேந்திய இந்திரன்(உபசாரவார்த்தை) கூறிப்பணிந்தனன். எ - று. (௧௩)

தேவரை நோக்கிமெய் செப்ப லுற்றனன்
றுவறு கவுதமன் சாபந் தீர்வகை
யாவது புரிந்தனி ரஃதறிந் திலேன்
மேவுகைம் மாறுமக் கில்லை விண்ணினும்.

(இ - ள்.) தேவர்களை நோக்கிச்சொல்கின்றான்: கெடுதலற்ற கவுதமமுனிவனிட்ட சாபமொழியும்வகையாக யாதுசெயதீர்கள்? அதனையறிகிலேன். உங்களுக்கு (இவ்விடத்திலேயேயன்றி) த்தேவருலகத்திலும் பொருந்திய பிரதியுதவி (செய்வதற்கொன்று) கிடையாது. எ - று. (௧௪)

பண்டைய முகவிழி பாயி ருட்பட
முண்டக நாளத்தின் முழுகி னேற்கொளி
மண்டிய வாயிர மலர்க்க ணல்கினீர்
கொண்டன னலமெலாங் குளிர்ந்த வானுளீர்.

(இ - ள்.) முகத்திலிருந்த பழமையாகிய விழிகள் மிகவும் இருள்பட, தாமரைத்தண்டிலே ஒளித்துக்கொண்ட எனக்குப் பிரகாசம்பொருந்திய (தாமரை) மலர்) போன்ற ஆயிரங்கண்களைக் கொடுத்தீர்கள். குளிர்ச்சிபொருந்திய வானுலகிலுள்ளவர்களே! (உங்களால்) நன்மை முழுவதையுங்கைக்கொண்டேன். எ - று. (௧௫)

இன்னுமே ரம்பனின் னருள்பெற் றின்புற
நன்னர்மா தவங்கணற் றலத்தி னாற்றிய
பின்னர்வா னுலகினைப் பேணு வேனலான்
முன்னர்நான் பேணுதன் முன்னி லேனரோ.

(இ - ள்.) இன்னும், விநாயகக்கடவுளுடைய இனிய திருவருளைப்பெற்று இன்பமடையும்படி நல்ல சிறந்ததவங்களைப் புண்ணிய தலத்திலே செய்தபிறகு, தேவலோகத்தை யரசுசெய்வேனலலாமல், (அதற்கு) முன்னே நான் அரசுசெய்வதைக் கருதினேனல்லேன். எ - று. (௧௬)

நீயிர்க ளனைவரு நெடிய வானிடை
மேயினர் வதிமினோ விரைத்த கற்பக
மாயிரும் பொருள்சிலர் வாந்து நல்குகென்
றாயிரம் விழியின னவரைப் போக்கினான்.

(இ - ள்.) நீங்களெல்லோரும் பெரிய தேவலோகத்திற் பொருந்தி வாசஞ்செய்யுங்கள். (உங்களில்) சிலர் மணமமைந்த கற்பகத்தருகொடுத்த சிறந்த பெருமைவாய்ந்த பொருள்களைக் கொண்டுவந்து கொடுங்களென்று, ஆயிரங்கண்களையுடைய இந்திரன்கூறி, அவர்களைச்செல்லவிடுத்தனன். எ - று. (௧௭)

இந்திரனுபதேசம்பெற்றபடலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — ௪௫௯௪.

# இந்திரன்பூசித்தபடலம்.

இதம்புரியுந் தேவர்களு மிருடியரு நீங்கியபின்
கதம்பவனத் திடையேகிக் காவல்புரி விண்ணவர்கோ
னதம்பலவுந் தீபலவு மொன்றுறாற் போனவையின்
சிதம்புதெறு மொருதீர்த்தந் திகழ்தரக்கண் டதையடுத்தான்.

(இ - ள்.) (அமரருலகைக்)காவல்புரியுந் தேவராசனாகிய இந்திரன், நன்மையைச்செய்யுந் தேவர்களும் இருடியர்களும்(தன்னைவிட்டு)நீங்கிச்சென்றபிறகு, கதம்பவனத்திற் சென்று, நதிகள்பலவுந் தீக்கள் பலவும் ஒன்றுசேர்ந்தாற்போல, குற்றத்தின்றொகுதியை யொழிக்கும் ஒருதீர்த்தம் விளங்குவதைப் பார்த்து, அதனைச்சமீபித்தனன். எ-று.

சிதம்புதல் - குணமின்மை.

அந்தடத்தி லமரர்தரு மாகாய கங்கையுஞ்சேர்த்
துத்தமனத் தடக்கரையி னொளிர்பளிக்கா லயநிருமித்
தத்தனையைங் கைக்களிற்றை யாகமத்தின் வழிநிறுவி
யெத்தகைய பொருள்களினு மினிதுறப்பூ சைகளாற்றி.

(இ - ள்.) புனிதனான இந்திரன் அந்தத் தடாகத்திலே, தேவர்கள் கொண்டுவந்த ஆகாயகங்கையையுங்கூட்டி, அத்தீர்த்தக் கரையிலே பிரகாசிக்கின்ற பளிங்குக் கல்லால் திருவாலயநியமித்து, (யாவர்க்குந்) தந்தையும் ஐந்துகரங்களையுடைய யானைமுகக்கடவுளுமாகிய விநாயகப்பெருமானை ஆகமமுறையாகப் பிரதிட்டைசெய் , எவ்வகைப்பட்ட பொருள்களாலும் இனிதாகப் பூசைகள்செய்து. எ - று.

இதுமுதலிரண்டு பாடல்கள் குளகம். (உ)

வாயிலினிந் தியம்வழங்கா வகையடக்கி நாசிநுனி
காயொளிக்கட் கடைநிறுவிக் கவின்றருமா தனம்வைகி
யாயிரமாண் டாறெழுத்தை யனுட்டிப்பி னொடுங்கணித்தான்
மாயிருமா மறையறியா மதக்கைமுக னடிநினைந்தே.

(இ - ள்.) சிறந்தபெரிய மகாவேதங்களறியாத மதஞ்சொரியும் யானைமுகமுடைய விநாயகக்கடவுள் திருவடியைச் சிந்தித்து, வாயிலின் வழியே இந்தியங்களைப் புறஞ்செல்லா தடக்கி, நாசிநுனியிலே பிரகாசிக்கின்ற ஒளியையுடைய கட்கடையை நிறுத்தி, அழகுசெய்யும் ஆதனத்திற் பொருந்தி ஆயிரவருடகாலஞ் சடக்கரமந்திரத்தை அநுட்டிப்புக் கிரமமாகக் கணித்தனன். எ - று. (௩)

நித்தலும்பூ சனையியற்றி நிராகாரத் தொடுவைகிப்
பத்தியினாற் றியானித்துப் பயன்றருமந் திரங்கணித்துச்
சத்தவுளத் தினனாகிச் சுரராசன் றவம்புரிய
வத்திமுகன் பேரருள்கூர்ந் தவனெதிர்த்தோன் றினன்மாதோ.

(இ - ள்.) தேவராசனாகிய இந்திரன் நாடோறும் (இவ்வகையாகப்) பூசைசெய்து, ஆகாரமில்லாமலிருந்து பத்தியுடன் தியானஞ்செய்து, பயன்தரத்தக்க மந்தி

ரத்தைக்கணித்து, புனிதமான மனமுடையவனுகித் தவஞ்செய்ய, யானைமுகத்தை யுடைய விநாயகக்கடவுள் பேரருள்மிகுந்து அவ்விந்திரனுக் கெதிரே தரிசனந் தந்தருளினர். எ - று. (௫)

தவளமதி புரைநிறமுந் தசதிசைசபோர்த் தொளிர்தேசுங்
கவளமத கரிமுகமுங் கதிர்மணிமா லிகைவளைத்துத்
துவளுமொரு புழைக்கரமுந் தோளுநன்கு மணித்தண்டைத்
திவள்சதங்கை நூபுரப்பொற் சேவடியு மனைநாளும்.

(இ - ள்.) வெள்ளியசந்திரனையொத்த நிறமும், பத்துத்திசைகளையு மூடிப் பிரகாசிக்கும் ஒளியும், கவளங்கொள்ளும் மதயானையின் முகமும், பிரகாசிக்கின்ற முத்துமாலையை வளைத்துத் துவள்கின்ற ஒப்பற்றதுதிக்கையும், நான்குதோள்களும், இரத்தினத்தண்டையும் பிரகாசிக்கின்ற சதங்கைமாலையும் பாதசரமுமணிந்த அழகிய திருவடியும், (பொன்) அரைஞாணும். எ - று.

கவளம் - யானைகொள்ளுமுணவு. அல்லது வாய்கொண்டவுணவு.

இதுமுத லிரண்டு பாடல்கள் ஒருதொடர். (௬)

அங்கதமும் வரைமார்பி னணிகருமுப் புரிநூலும்
பொங்கொளிநித் திலவடமும் பொலிந்தவர கனத்தொடையுஞ்
செங்கதிரி னிருள்சீக்குங் குண்டலமுந் திகழ்முடியுந்
தங்குருவி னெதிர்நின்ற தலைவனைவா சவன்கண்டான்.

(இ - ள்.) அங்கதமும், மலைபோன்ற மார்பிலணிந்த உபவீதமும், ஒளிமிக்க முத்துமாலையும், அழகிய இரத்தினமாலையும், செவ்விய கிரணங்களையுடையசூரியனைப் போல இருளையகற்றுங் குண்டலங்களும், பிரகாசிக்கின்ற கிரீடமும் (கொண்டு)தமது குருவாகிய பிரகற்பதிமுனிவனைப் போல எதிரேநின்ற விநாயகக்கடவுளை இந்திரன் தரிசித்தனன். எ - று.

அங்கதம் - தோளணி. (௭)

மிக்கபெருங் களிப்புமன்பும் வெருவுதலு முடன்றோன்றக்
கொக்கிருகை சிரமேறத் துண்ணெனவா தனத்தெழுந்து
தக்கமுறை யால்வணங்கித் தண்டமுமிட் டெதிர்நடித்துப்
பொக்கமற வலம்வந்து புகழெடுத்துப் பாடினன்.

(இ - ள்.) மேம்பட்ட பெருங்களிப்பும் ஆசையும் அச்சமும் உடனே உண்டாக, இருகரங்களுஞ் சேர்ந்து சிரமிசையேறத்துணுக்குற்றுஆசனத்தினின்றெழுந்து, தக்கமுறைப்படி பணிந்து (சாஷ்டாங்க) தண்டஞ்செய்து, எதிரே (ஆனந்தமேலீட்டால்) நடனஞ்செய்து, குற்றமகலப் பிரதக்கிணஞ்செய்து (அவ்விநாயகருடைய) கீர்த்தியை யெடுத்துப் (பின்வருமாறு) பாடினன். எ - று. (௮)

வேறு.

அறிவாய் விளங்கு மொளியாகி யெங்கு மசைவற்று நின்ற நிறைவாய்க்
குறியாதி யின்ப முதலீ றிலாத குறைவற்ற வின்ப மயமாய்ச்
செறிவான நீரி னிழல்போல நின்ற திறலோனை யாரும் வகைவேன்
வெறுஞான மான திருமேனி கொண்டெ னிழிகாண முன்னர் வரலால்.

(இ - ள்.) அறிவாகி விளங்கும் தேஜோரூபியாய், எல்லிடத்திலுஞ் சலனமின்றிநின்ற பூரணமாய், குறி முதலிய இன்பமுதன் முடிவில்லாத குன்றலற்ற இன்பமயமாகி, நெருங்கிய நீரில்நிழல்போலநின்ற வல்லபமுடைய தேவரீரை, சுத்தஞானமான திருமேனியோடு என்கண்கள் காணும்படி முன்னே யெழுந்தருளியதனால், அடியேனும் பிரதக்கணஞ் செய்வேன. எ - று. (அ)

இருண்மூழ்கு கண்ணின் மலகேவ லத்தி னிதயின்றி நின்ற வுயிர்கட்
குருவாதி மூன்று முனமுய்த்த வற்றி னுளதாம் விகார வகையா
லிருவேறு கன்ம மிசைவித் தருத்து மிறையோனை யானு மொழிவேன்
வெருண்மாயை நீத்த திருமேனி கொண்டெனை விழிகாண முனைவரலால்.

(இ - ள்.) (அஞ்ஞானமாகிய) இருளின்மூழ்கிய கண்களின் மலகேவலத்தினிதயில்லாமல் நின்ற உயிர்களுக்கு உருவமுதலிய மூன்றையுமுன்னளித்து அவற்றுளதாகிய விகாரவகையால், வேறாகிய இருவகைக் கன்மங்களையுமிசைவித்து நுகரச் செய்கின்ற தலைவராகிய கணேசப்பெருமானை, மயக்கம பொருந்திய மாயையையொழித்த திருமேனியோடு என் கண்கள் காணும்படி முனனே யெழுந்தருளியதனால், அடியேனும் (இவ்வகையினரென்று அவனைக) கூறுவேன. எ - று. (௯)

வாதங் கடந்து பலமாயை கன்ம வகையுங் கடந்த வைசெயு
மேதங் கடந்து பொருளொன்று மின்றி யெழுகின்ற மமம ருயிரின்
போதங் கடந்து துரியங் கடந்த பொருளோயை யானு முணாவேன்
வேதங் கடந்த திருமேனி கொண்டென் விழிகாண முன்னா வரலால்.

(இ - ள்.) வாதஞ்செய்தலைக கடந்து, பலவகைப்பட்ட மாயாகன்மவகைகளையுங்கடந்து, அவைசெய்கின்ற துன்பங்களையுங் கடந்து, ஒருபொருளுமில்லாமல் தோன்றுகின்ற மயக்கம்பொருந்திய உயிரின் தற்போதமுங்கடந்து, துரியத்துவமுங் கடந்த பொருளாயுள்ள தேவரீரை, வேதங்கடகதீதப்பட்ட திருமேனியைக்கொண்டு என்கண்கள் காணும்படி என்முனனே யெழுந்தருளியதனால், அடியேனும் (இவ்வகையினரென்று) அறிவேன். எ - று. (௧௦)

வெங்கட் களிற்றின் மகவான் றுதித்து விழிநீ ருகுத்து ளுருகச்
சிங்கஞ் செலுத்தி யெதிர்வந்து நின்ற திகழ்முககண் வேழ முகவ
னிங்குற்று நீசெய் செபமாதி யான மிதயங் களித்த னமினிப
பொங்குற்ற காதல் வரம்வேட்ட தின்று புகலென்ன வோது மவனே.

(இ - ள்.) கோபக்கண்களையுடைய (ஐராவதமென்னும்) யானையை வாகனமாகக்கொண்ட இந்திரன் (இவ்வாறு) தோத்திரஞ்செய்து, கண்ணீர்சிந்தி மனமுருக, சிங்காசனமூர்ந்து அவனெதிரேயெழுந்தருளியிருந்த விளக்கம் பொருந்திய திரிநேத்திரங்களையுடைய விநாயகக்கடவுள் நீ யிங்கேவந்து செய்த செபத்திற்குஞ் சிறந்த தியானத்திற்கும் மனங்களித்தோம். இனி அதிகரித்த காதலையுடைய நீ விரும்பிய வரத்தை யிப்பொழுது கூறுகவென, அவ்விந்திரன் கூறுவான். எ - று. (௧௧)

யோகத்தி னுறு முணரப் படாமை யயர்ஞான யோக நிலையோர்
பாகத்தி னொன்று படுகின்ற பாத பதுமங் கெடாது புரியும்
யாகத்தி னுள பயனுந் திறக்க மெனியேற் களித்தி யதுவும்
யோகத்தின் மலக விடரின்றி நின்று புகழோடு மாளும் வகையில்.

(இ-ள்) யோகத்தினாலும் அறியப்படாமல் உயர்ந்த ஞானயோக நிலையிலுள்ளவர்கள் பாதத்தினாலே ஒன்றுபடுகின்ற பாதத்தாமரை, நீகொடுத்தருளும் யாகத்தினாலான பயனாகிய சுவர்க்கலோகத்தை அடியேனுக்குக்கொடுக்கவேண்டும். அதுவும் போகத்தினை மிகும்படி துன்பமில்லாமலிருந்து, கீர்த்தியுடன் அரசுசெய்யும் வகையோடு (அநுக்கிரகிக்கவேண்டும்) எ-று (௧௨)

முன்னேயெனக்கு மறையோனு மிந்த மொழியா றெழுத்து மனுவைத்
தன்னு ணர்ந்தி னுரைசெய்து நீயித் தனிமந் திரத்தை யொழியின
மன்னு விண்ணி னரசாட்சி யென்று வழிவற புறுத்து மகனைப
பின்னை மறந்து பிழையிற் படாந்து பெரிதான துன்ப மனினேன.

(இ-ள்.) சொல்லுகின்ற இந்தச் சடக்ஷரமந்திரத்தைப் பிரமதேவனும் முன்னேயெனக்குத் தன்னுடைய உபதேசித்து, நீ இந்த ஒப்பற்ற மந்திரத்தை விதித்தால் தேவலோக வரசாட்சி உனக்குப்பொருந்தாதென்று வற்புறுத்திக் கூறியதைப் பிற்காலத்திலே மறந்து, குற்றத்திற்சென்று பெரிதான துன்பமடைந்தேன். எ-று

பொன்னே னுரைபப விடாமுற றகன்று புகழாயி ரங்க ளுடையே
னின்னு றெழுத்தை யுரைசெய்து பூசை நெடிதாற்றி வந்த பரிசா
லுன்னுத் தாகி யுரையாத தாகி யுறலிற படாத பொருணீ
முன்னுகி னின்ற வருளா லெனக்கு முடியாமை யாவ துளதோ.

(இ-ள்) (எனகுருவாகிய) வியாழபகவான உபதேசிக்க, துன்பமுழுவதுமகன்று, புகழத்தக்க ஆயிரங்கண்களையடைந்த அடியேன் தேவரீருடைய சடக்ஷர மந்திரத்தைக் கணித்துப் பூசையை மிகுதியாகச்செய்துவந்த தன்மையால், நினைக்கப்படாததாகியும் சொல்லப்படாததாகியும் பரிசிக்கப்படாததாகியுமுள்ள பொருளாகிய தேவரீர் என்முன்னுகி யெழுந்தருளிய திருவருளால், எனக்கு முடியாதது யாது தோன்றியிருக்கின்றது? எ-று. (௧௩)

கேடா மெனைக்கு முறுகா ரணங்கள் கிழவோய் பதத்தி னிறையன்
பாடாமை யாகு மதனு லெனக்கு னடிவாரி சத்தி லுழுவல
விடாமை வேண்டு மதுவன்றி யுள்ள விழைவுய்க்கு மிங்குன் வடிவுக்
கோடாத சிந்தா மணியென்னு நாம முறலவேண்டு மூர்க்கு முறுக.

(இ-ள்.) துன்பமாகிய எல்லாவற்றிற்கும் பொருந்திய காரணங்கள், யாவுமுடைய தேவரீரது திருவடியில் நிறைந்த அன்பைச் செலுத்தாமையாகும். ஆதலால் அடியேனுக்குத் தேவரீருடைய திருவடித்தாமரையிற் பக்தி அழியாமல் (கொடுத்தருள) வேண்டும். அதுவல்லாமல், மனதில் விரும்பியவற்றைக் கொடுக்கும் இவ்விடத்திலுள்ள தேவரீர் திருவுருவத்திற்குச் சிந்தாமணிவிநாயகரென்னுந் திருநாமமுண்டாக வேண்டும். அப்பெயரே [சிந்தாமணிநகரமென்று] இந்நகரத்திற்கு முண்டாகுக. எ-று.

இந்தத் தனக்கு மிசைபர சிறக்க இகலூர்க் கருன்மி யெவரு
[illegible] கதம்ப நகரென்ற பேரு முறுமிக்க [illegible]
[illegible] தடத்தி னாடுவோ ரோருன் [illegible]
[illegible] சிறந்த பயனுங்கு மார்க [illegible]

(இ-ள்.) இந்நகரத்திற்கும் [illegible]
[illegible]

மென்றமெய்யுரும் பொருள்தச்செய்க இவ்வூரில வசிப்போரும, ஒலிக்கின்ற இத்தீர்த்தத்தின் நீரில் மூழ்குவோரும், இங்கே தேவரீர பாதங்களைப் பணிவோரும் (ஆகியவர்கள்) உலகிற்சிறந்த புருஷார்த்தங்களனைத்தையும் பொருந்துக பகவானே! என இரந்துகூறவும். எ - று. (கசு)

இறைவன் புகன்ற வரமுந் துறக்க மிடரின்றி யாளும வரமு
நிறையக் கொடுத்து மறையக் கதிர்க்கு நெடுவச் சிரச்சை மகவானு
குறையற்று மீட்டு முயர்பூசை யாதி குலவிப் புரிந்து விடைபெற்
றுறையுந் துறக்க நகரெய்தி யன்பொ டரசாட்சி செய்த ருளினனே

(இ - ள்) கணேசப்பெருமான் (இந்திரன்)கேட்ட வரங்களையும்,சுவர்க்கலோகத்தை யிடையூறின்றி அரசுசெய்யும் வரத்தையும் பூரணமாகக் கொடுத்து அந்தர்த்தானமாக, ஒளிவிடும் நெடிய வச்சிராயுதத்தைக் கையிலேந்திய இந்திரன் (யாதொரு) குறையுமின்றி மீண்டும் சிறந்த பூசைமுதலியவற்றை அன்புறச்செய்து விடைகொண்டு, (புகழ்ந்து) சொல்லுறு சுவர்க்க நகரத்தையடைந்து ஆசையோடு அரசாட்சி செய்திருந்தனன் எ - று. (கஎ)

அவ்வாறு பூசை பெயரோடு கொண்ட வமலன பதங்கள் சரணு
மெவ்வாறு மெய்தி வழிபாடு செய்யி னிடரான தீர வாமுந்
செவ்வாய்மை யோடு பெறுகிற்றி யென்று திருவுற்ற வீணை முனிவ
னெவ்வாடு வேற்கை யரசற்கு நன்கு தெரிவித்த கன்றனனால்

(இ - ள்) அவ்வாறாகப் பூசையைத் திருநாமத்துடன் கொண்ட மலரகிதராகிய சிந்தாமணி விநாயகர் திருவடியைச் சரணமெனக் கைப்பற்றி வழிபாடு செய்தால் துன்பங்கள் நீங்கும், செவ்விய சத்தியத்துடன் பெறுவையென்று, தங்குகின்ற வீணையையேந்திய நாரதமுனிவர், பகைவர்களுடைய உடலை யடைந்த வேற்படையையுடைய உருக்குமாங்கத மன்னனுக்கு நன்றாகவும் (அவ் விடத்தினின்று) நீங்கிச்சென்றனர். எ - று.

பெறுகிற்றி என்றதில், கில - ஆற்றலுணர்த்தும் விகுதி. (கஅ)

இந்திரன் பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௫௫௯

---

# உருக்குமாங்கதன் முத்தியடைந்தபடலம்

இருக்கி லாமுனி செல்லு முன்
றருக்கி வாழ்தம ராயினோர்
தருக்க மாதி தரீஇத்தரீஇ
யுருக்கு மாங்கதனை யுற்றனர்

வஞ்சகமில்லாத நாரதமுனிவர் செல்லுமுன்னரே, களித்து வாழும் பற்றையுடைய (உருக்குமாங்கதனுடைய) உறவினராயுள்ளார் தருக்கமுதலியவிடங்களி லெங்கும் மிகத்தேடி, உருக்குமாங்கதன்பால்வந்து சேர்ந்தனர். எ - று.

இ - தருவி, தேடி. தரீஇத் தரீஇ - மிகுதிபற்றிவந்த அடுக்கு. (க)

கவட்டுக் கானிற் கதழ்ந்தமான்
சுவட்டுத் தாரிது ரீஇயது
சவட்டி னுய்க்கிது சார்ந்தெனை
குவட்டுத் தோளவ கூறென்றார்.

(இ - ள்.) கொம்புகளையுடைய வனத்தில் விரைந்தோடிய மானின் சுவட்டு வழியே (தொடர்ந்து) தேடி, அதனை வேட்டையாடிய வுனக்கு இத்தீமைவிளைந்தது யாதுகாரணம்? மலையையொத்த தோளையுடைய உருக்குமாங்கத ராசனே! கூறுக வென்றார்கள். எ - று.

சவடு - மரக்கொம்பு. சுவடு - காலடி. குவடு - மலை. (௨)

வெற்றி வீமன் விறன்மக
னுற்ற துற்றவர்க் கோதினு
னற்ற மில்பொரு ளாங்குறப்
பற்றி யேகினன் பான்மையால்.

(இ - ள்.) வெற்றிவாய்ந்த வீமராசனுடைய வலிதங்கியமகனாகிய உருக்குமாங்கதராசன் நடந்த விர்த்தாந்தத்தைத் தன்னிடம் வந்தவர்களுக்குக்கூறினான். குற்றமில்லாத உண்மைப்பொருள் ஆங்கடைதலால், அதனைத் தகுதியோடு கடைப்பிடித்துச் சென்றனன். எ - று. (௩)

பொதும்பு சூழ்ந்து புகைந்தெரி
வெதும்பு வெங்கடம் விண்டுதேன்
றதும்பு பூம்பொழில் சார்ந்தவக்
கதம்ப மாநகர் கண்டனன்.

(இ - ள்.) பொதும்புசூழ்ந்து புகைந்து தீயானது சுடுகின்ற கொடிய காட்டைக்கடந்து தேன்றுளிக்கும் மலர்ச்சோலை சேர்ந்த அந்தச் சிறந்த கதம்பநகரத்தைத் தரிசித்தனன். (உருக்குமாங்கதன்) எ - று.

பொதும்பு - மரப்பொந்து. (௪)

தீர்த்தர் போற்றுஞ்சிந் தாமணித்
தீர்த்தனைத்தெரி சித்துநோய்
தீர்த்தல் செய்யுஞ்சிந் தாமணி
தீர்த்த நீர்படிந் தாடினன்.

(இ - ள்) புனிதமானவர்கள் துதிசெய்யுஞ் சிந்தாமணிவிநாயகரைத் தரிசித்து, (எல்லா) நோயையுமொழித்தருள்செய்யுஞ் சிந்தாமணி தீர்த்தநீரிலே மூழ்கி ஸ்நானஞ்செய்தனன். (உருக்குமாங்கதராசன்) எ - று. (௫)

கருக்கி வெண்ணிறங் காட்டிமெய்
முருக்கு நோய்கெட முன்பெய
ரிருக்க நல்லெழி லெய்தினு
னுருக்கு மாங்கத வுத்தமன்.

(இ - ள்.) கருகச்செய்து வெண்ணிறத்தைக் காட்டி உடலைத்துன்பு செய்யுந் தொழுநோய் கெடவும், [உருக்குமாங்கதனென்னும்] பழையபெயர் (நிலைபெற்று) இருக்கவும், உருக்குமாங்கதனாகிய உத்தமன் நல்ல அழகை யடைந்தனன். எ - று. (௬)

செயிர றுக்குஞ்சிந் தாமணிப்
பெயர்வி நாயகா பெய்கழற்
கயர்வி லாதமெய் யன்பனாய்
மயரில் பூசைவ யக்கினான்.

(இ - ள்) குற்றத்தை யொழிக்குஞ் சிந்தாமணியென்னும் பெயரையுடைய விநாயகக்கடவுளுடைய வீரகசழலணிந்த பாதங்களில், மயக்கமில்லாத பூசையைச செய்தனன். சோர்வில்லாத உண்மையன்பினையுடைய வீமராசனே ' எ - று (௭)

அந்த ணாளர்க்க ருமபொருள்
சிந்தி னானது செவ்வியின
வந்து ளாரகள்வி மானமேமா
டுந்த ழிறகணத் தோரசிலா.

(இ - ள்.) வேதியர்களுக்கு அருமபொருளகளை (ததானமாரியாக) ச் சொரிந்தனன். அந்தக்காலத்தில் மிக்க அழகினையுடைய கணநாதாகள சிலர் விமானத்துடன (அவ்விடம) வந்தாரகள. எ - று. (௮)

வே று.

அத்தலை நின்ற தேவநதற் கருங்கணத் தலைவா சொல்வா
ரித்தலைக் கணேச குண்டத் திருமடுவ ணேய்ந்து நகன்
வித்தகக் களிற்றின் பூசை விளக்கினை யாத லாலே
வுத்தம வுனது மேன்மை யொருவாககு முரைககொ ணாதே.

(இ - ள்.) அரிய கணநாதர்கள் அவ்விடத்திலிருந்த உருக்குமாங்கதராசனுக்குச் சொல்கின்றார்கள் : உத்தமனே ' இவ்விடத்தில், கணேசதீர்த்தத்திலே மிக்க நீரின்மூழ்கி, திரிநேத்திரங்களையுடைய ஞானசொரூபியாகிய சிந்தாமணிவிநாயகக் கடவுளுடைய பூசையைச்செய்தனையாதலின், உன்னுடைய சிறப்பை எடுத்துச் சொல்ல ஒருவருக்கு முடியாது. எ - று. (௯)

கொங்கவிர் மாலைத் தெய்வக் கோலமார் விமானமேறி
யைங்கர னுலக மெம்மோ டடைமதி யெனறாரகேட்டுச
சிங்கவல் லேற்றி னொன்னார் செருக்கள முழக்குந்திண்டோட
பைங்கழ லரற்று நோன்றாட் பார்த்திபன பணிந்து சொல்வான்.

(இ - ள்.) மகரந்தத்தோடு விகசித்த (கற்பக) மாலையணிந்த அழகுபொருந்திய விமானத்தி லாரோகணஞ்செய்து எங்களுடனே ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமானுலகத்தை யடைகவென்றனர். வலிய ஆண்சிங்கத்தைப் போலப் பகைஞர்களது போர்க்களத்தைக் கலக்குகின்ற வலியதோளையும் பசியவீரக்கழலொலிக்கும் பெருமைதங்கிய தாளையுமுடைய உருக்குமாங்கதமன்னன் அதனைக்கேட்டு (அக்கணநாதர்களைப்) பணிந்து சொல்கின்றான். எ - று

மதி - அசைச்சொல். "மியாயிகமோமதி யத்தையித்தை - வாழியபானவீ யாழமுன்னிலையசை" என்றது சூத்திரம் (௧௦)

வேறு.

சின்மயசிற் குணவகண்டா காரசச்சி தானந்தன் சேர்ந்தோர் தம்மைத்
தன்மயமாக் கிடுமுதல்வன் காரணு தீதனவன் றலைமை சான்ற
நன்மைதரு மருளெங்கே நாளெங்கே நான்புரிந்த தவங்க ளெங்கே
யென்மனமெங் கேயெனது பிறப்பெங்கே யென்னுடைய பத்தியெங்கே.

(இ - ள்.) சின்மயனும், சிற்குணனும், அகண்டாகாரனும், உண்மையறிவா னந்தரூபியும், தன்னையடைந்தவர்களைத் தன்மயமாகச் செய்யும் முதற்கடவுளும், காரணாதீதனுமாகிய அக்கணேசப்பெருமானுடைய முதன்மை மிக்க நன்மைபொருந்திய திருவருளெங்கே அடியேனெங்கே. அடியேன்செய்த தவங்களெங்கே. அடியேன் மனமெங்கே. அடியேன பிறவியெங்கே அடியேன் பக்தியெங்கே. எ - று.

சின்மயம் சிற்குணமென்பவற்றில், சித்=ஞானம். அகண்டம்=கண்டமில் லாதது. ஆகாரம் - தேகம். சச்சிதானந்தம் சத்து+சித்து+ஆனந்தம். கணேசப்பெரு மானுடைய உயர்வைக்குறிக்க "அவன் தலைமைசான்ற நன்மைதருமருளெங்கே" என் றும், தானும் தன்தவம் மனம் பிறப்பு பக்திமுதலியவற்றின் தாழ்வுகுறிக்க "நாளெங் கே * * என்னுடைய பக்தியெங்கே" என்றுங்கூறினர். (௧௧)

பண்டுபுரி தவத்தானு மித்தடத்தி னீராடும் பலத்தி னானு
மண்டாதொழுமபெருங் கணத்தி ருங்கடெரிசனமடியேற்காயிற்றென்னை
மண்டுபெருந் தவமாற்றிச் சாருகா சினியோடு மருவி வீம [னென்றான்.
னுண்டாயி னுயிர்த்தனன்வே றிலையவரை யொழித்தெவ்வா றுறுவே

(இ - ள்.) பூர்வத்திற்செய்த தவத்தினாலும், இக்கணேச தீர்த்தத்தில் மூழ்கிய பலத்தினாலும் உங்களுடைய தரிசனமெனக்குக் கிடைத்தது. தேவர்களும் வணங் கதக்க பெருந்தவமுடையவர்களே! (என்தாயாகிய) சாருகாசினியுடன் வீமராசன் பொருந்தி நெருங்கிய பெருந்தவஞ்செய்து என்னைப்பூமியில் (மகனாகப்) பெற்றனர். (அவர்கட்குத்துணை) வேறொருவருமிலர். அவர்களை யெவ்வாறு விலக்கிவிட்டுவருவே னென்று (உருகதுமாங்கதன்) கூறினன். எ - று. (௧௨)

அறங்கிளரும் பெருங்கணத்தோ ரதுகேட்டுத் திருவுள்ளத் தலர்ச்சிகாட்டிக்
கறங்குதிரைப் பெருங்கடல்சூழ் கண்ணகன் ஞாலம்புரக்குங்காவலோய்கே
ணிறங்கிளர்பன் மலரணிந்த வித்தீர்த்தத் தவர்தம்மை நினைந்துதோய்ந்து
பிறங்குதருப் பணம்புரியி னவருமுடன் வருவரெனப் பேசினாரால்.

(இ - ள்.) தருமம் விளக்கும் பெருமைவாய்ந்த கணத்தலைவர்கள் அதனைச் செவியேற்றுத் தமது நன்மனத்துள்ள மகிழ்வினை வெளிப்படுத்தி, மறிகின்ற அலைகளை யுடைய பெரியகடல்சூழ்ந்த இடமகன்ற உலகத்தைக்காக்கும் உருக்குமாங்கத மன்ன னே! கேட்பாயாக. நிறம் விளங்கும் பலமலர்களையுடைய இந்தத்தீர்த்தத்திலே அவர் களைக்கருதி ஸ்நானஞ்செய்து, விளங்குகின்ற தருப்பணஞ்செய்தால் அவர்களும் உன் னுடனே வருவார்களென்று சொன்னார்கள். எ - று.

கறங்குதல் - சுழலல். (௧௩)

**கணங்களுரைத் தமைகேட்டுக் காவலனு முடிந்தபசுந் தருப்பைவைத்திட்
டிணங்குதருப் பையுமானாய் தருப்பைமக னாயுமிருக் கின்றாய் வேத
னணங்கறுப்பப் படைத்திடப்பட் டாயாரைக் குறித்துன்னை யாட்டினாலும்
பிணங்கறுநன் பயனவர்க்குக் கொடுக்கின்றா யெனப்பேசிப் பெருநீ ராட்டி.**

(இ - ள்.) கணத்தலைவர்கள் கூறியதைக்கேட்டு, உருக்குமாங்கதனும், முடியிட்ட பசியதருப்பையை வைத்து, பொருந்திய தருப்பையுமாயினை, தருப்பைமகனாயு மிருக்கின்றனை, பிரமதேவனால் துன்பமொழியப்படைத்திடப்பட்டனை. எவரை நினைத்து உன்னை நீராட்டினாலும் அவர்கட்குக் குற்றமற்ற நல்லபலனைக் கொடுக்கின்றனை யென்றுகூறி, மிக்க நீராலபிஷேகித்து. எ - று.

தருப்பையு மானாய் தருப்பை மகனாயு மிருக்கின்றாய்"—என்றது நீயே மூர்த்தியும் மூர்த்திமானுமாயுள்ளனை யென்றாற்போலும். (௧௪)

**தந்தைதாய் முதலோரைக் குறித்துநறும் புனற்றீர்த்தந் தானு மாடி
சிந்தையறு மகிழ்வோடுங் கரைபேறி யருள்செய்த திவவு நல்யாழ்
முந்துனனை வியந்து தீர்த்தத்தை மிகப்போற்றி யமல முற்றுன்
வந்துளார் தாமுமதி னுடனாடித் தெய்வவுரு மருவி னாரால்.**

(இ - ள்.) உருக்குமாங்கதனும் தந்தைதாய் முதலானவர்களைக் கருதி நல்ல கணேசதீர்த்தத்திலே மூழ்கி மனத்தினின்றொழியாத களிப்புடன் கரையிலேறி, தனக்கு அநுக்கிரகித்த தடவுகின்ற நல்ல மகதிவீணையையேந்திய நாரதமுனிவரைத் தியானித்து, கணேசதீர்த்தத்தைத் துதிசெய்து புனிதனாயினன் உடன்வந்துள்ள சேனைகாவலர் முதலியவர்களும் அத்தீர்த்தத்தில் (அவ்வுருக்குமாங்கதனை) உடன்மூழ்கித் தெய்வவடிவத்தை யடைந்தார்கள். எ - று. (௧௫)

**மறுவனுமங் கினிதிருந்த கணேசர்திரு வடிப்பூசை வயக்கித் தேசு
முறுகுவிமா னத்தடுத்த சேனையொடு மொருங்கேறி முடிகொண் மன்ன
னுறுதியொடு கவுண்டினிய நகர்சார்ந்து தானபல னுயிர்த்தோ ராதி[தார்.
பெறுமுறையிற் கொளக்கொடுத்தான் சேனைகளு மவரவர்க்குப் பேணியீந்**

(இ - ள்.) கிரீடமணிந்த உருக்குமாங்கத மன்னன் மீண்டும் அவ்விடத்தில் இனிதாக விருந்த சித்திவிநாயகப்பெருமானுடைய திருவடியிற் பூசையைச்செய்து, தன்னையடுத்த சேனையுடனே, ஒளிவீசும் தெய்வவிமானத்தில் ஒன்றாகவேறி, உறுதியோடு கவுண்டின்னிய நகரத்தையடைந்து, பெற்றோர் முதலானவர்களுக்குத் தானபலனைப்பெறுமுறையோடு பெறும்படி கொடுத்தனன் சேனைகாவலர்களும் (தங்கடங்கட்குரிய) அவரவர்களுக்கு விரும்பிக்கொடுத்தார்கள். எ - று. (௧௬)

**எம்பெருமான் றிருவருளால் வெவ்வேறு விமானங்க ளெய்த வந்தப்
பம்புநக ரரசாளும் வீமன்முத லோரெவரும் பணிந்தங் கெய்தி
யும்பர்தொழ வுருக்குமாங் கதனோடுங் கணேசர்திரு வுலகஞ்சேர்ந்தா
நம்பியீசீர் வியாதமுனி யறிவாயென் றலரிருந்தோ னவிற்றி னானால்.**

(இ - ள்) எமது பெருமானாகிய விநாயகக்கடவுளுடைய திருவருளால் வெவ்வேறாகிய விமானங்கள் வந்தடைய, அந்த வளநெருங்கிய கவுண்டின்னியநகரத்தை யரசுசெய்யும் வீமராசன் முதலானவர்களெல்லோரும் வணங்கி அங்கடைந்து, தேவர்

கன் பணியும்படி உருக்குமாங்கதனுடன் கணேசப்பெருமானுடைய சிறந்த உலகத்தை யடைந்தார்கள். மிக்க கீர்த்தியையுடைய வியாசமுனிவனே! அறிவாயாகவென்று, தாமரை மலரிலிருந்த பிரமதேவன் உரைத்தருளினன். எ - று. (கஎ)

அருந்தவத்து விச்சுவா மித்திரனை வீமனுற லாதி யாகத்
திருந்துமக னொடுமுத்தி சேர்ந்திடுத லீறாகத் திகழா நின்ற
பொருந்துபல சரிதமுங்கேட் டனைசோம காந்தவினிப் புகலக் கேளாய் [ன்.
பெருந்தவத்துக்கிருச்சமத னுபாசனையென் றுரைசெய்வான் பிருகுமேலோ

(இ - ள்) அரியதவத்தையுடைய விச்சுவாமித்திர முனிவனை வீமராசன் அடைந்ததுமுதலாகத் திருந்திய தன் மகனாகிய உருக்குமாங்கதராசனுடன் (அவன்) முத்தியடைந்ததீறாக விளங்குகின்ற பொருந்திய பல சரிதங்களையுங் கேட்டனை, சோமகாந்தராசனே! இனிப் பெருந்தவத்தையுடைய கிருச்சமதனுபாசித்த வகையையுஞ்சொல்லக் கேட்பாயாக வென்று, மேலோனாகிய பிருகுமுனிவன் சொல்லாநின்றான். எ - று.

சோமகாந்தன் பிருகுமுனியை யடுத்த படலமுதல் யாவும் பிருகுமுனிவராலேயே சொல்லப்பட்டனவென்றும், பிறசரிதங்கள் இடையிடையே அவ்வவராலே சொல்லப்பட்டனவென்றுங்கொள்க. (கஅ)

உருக்குமாங்கதன் முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஙஎஎ

---

# கிருச்சமதருபதேசம்பெற்றபடலம்.

மருக்கொண் மாமலரி னானைமுக நோக்கி மடமை
முருக்கி மேதகுவி யாதமுனி முன்ன னென்முன
முருக்கு மாங்கதனெ ழிந்தபின்மு குந்தை யுறுநோய்ப்
பெருக்க மெங்ஙனமொ ழிந்ததது பேசு கவென.

(இ - ள்.) வாசம்பொருந்தியதாமரைமலரிலெழுந்தருளியபிரமதேவனுடைய திருமுகத்தைப்பார்த்து, அறியாமையை யொழித்து மேம்பட்ட வியாதமுனிவனாகிய பெரியோன், முன்னே உருக்குமாங்கதன் (இணங்காது) சென்ற பிறகு, முகுந்தையென்பவள் பொருந்திய காமநோய்ப்பெருக்க மெவ்வாறகன்றது? சொல்வாயாகவெனக் கேட்க எ - று.

முகுந்தையுறுநோய்ப் பெருக்கமென்றது உருக்குமாங்கதன் சாபம்பெற்ற படலத்திற் கூறப்பட்டுளது. ஆங்குக் கண்டுகொள்க. (க)

முள்ள ரைக்கமல நாண்மலரி னான்மொ ழிகுவான்
றள்ளு மெல்லிடைமு குந்தையவள் சாப மரசன்
கொள்ள வுய்த்தபினு மம்பூர்குடி கொண்டெ ழுமெழு
கொள்ளெ ரிக்கதுவி யாங்குளமெ கிழ்ந்து ருகினாள்.

(இ - ள்.) முட்பொருந்திய அடியையுடைய புதிய தாமரை மலரிலெழுந்தருளிய பிரமதேவன் கூறுகின்றான்: தள்ளாடிய மெல்லிய இடையையுடைய முகுந்தை

யானவள் உருக்குமாங்கதமன்னவனை சாபத்தைக்கொள்ளும்படி கொடுத்தபின்னரும், மயக்கமானது குடிகொண்டு விளங்க, மெழுகானது ஒளிபொருந்திய அக்கினியிற் பட்டாற்போல மனங்கசிந்து வருந்தினாள். எ - று.

அணை - அடி. நாண்மலர் - அன்றலர்ந்த மலர்; புதியமலரென்க. தன்று மெல்லிடை யென்றது—"உபயதனமசையிலொடியுமிடை" என்றும், "ஏக்காற்றுக் காற்றுவிடை" என்றும், "மருங்கோரிலக்கணம் [நன்னூல்]" என்றும் கூறியவ்வண்ண போலச் சுமையிறுக்காது துவளுமிடையென்பதாம். (௨)

வண்டி ரைக்குமலர நந்தனவ னத்து லவுவா
டண்டி ரைக்குளிர்த டாகமுறு வாள்பி ணைபுறங்
கொண்டி ரைக்குவிரை மான்கலைகள் கண்டு குழைவாள்
பண்டி ரைக்குமணி வேய்ங்குழல்ப ரப்ப வழிவாள்.

(இ - ள்.) வண்டுகளொலிக்கும் மலர்கள் பொருந்திய நந்தனவனத்திலுலாவு வாள். தட்பமாகிய அலைகளையுடைய குளிர்ந்த தடாகத்தை யடைவாள். தமது பிணை யையுடன்கொண்டு இரைக்காக விரைந்துசெல்லும் மான்கலைகளைக் கண்டு உருகுவாள். பண்ணொலி யெழுப்பும் அழகிய வேய்ங்குழலொலியெழுப்ப மனமழிவாள் எ - று.

வேய் - மூங்கில். வேய்க்குழல் - புள்ளாங்குழல். (௩)

மந்த மாருதம ருங்கசைய வன்னி விரவி
வந்த தென்கொல்வளி யேயெனம ருண்டு முனிவ
ளந்தி லான்மணித ழங்கவடு கால னொலியே
சிந்து கின்றதுயி ரென்றுதெரு மந்து கவல்வாள்.

(இ - ள்.) இளந்தென்றற்காற்றானது பக்கத்திலுலாவ, காற்றே! அக்கினி யோடு கலந்துவந்த தென்னகாரணமென்று மயங்கிக்கோபிப்பாள். அவ்விடத்தில், பசு வின் (கழுத்திலுள்ள) மணியொலிக்க, கொல்லுகின்ற இயமனோசையோ உயிரழி கின்றதென்று சுழன்று துன்புறுவாள். எ - று.

அந்தில் என்றதை 'அந்திலாங்கசைநிலை இடப்பொருளாகும்" என்றதால் அசைநிலையெனக் கொள்ளினுமாம். அவ்விடத்திலெனவும். (௪)

சிறுமை யாளர்கள் பிறர்க்குவினை தீங்கு பெருமை
யுறுநர் செய்கலரொ லிக்கடன்ம லிக்கு ழலென
முறுகு வெந்துயர மூட்டுவது னக்கு முறையோ
குறுமு னிகுரிசில் குன்றுளனெ னக்கு ழறுவாள்.

(இ - ள்.) கீழ்மக்கள் பிறர்க்குண்டாக்குந் தீமையைப் பெருமையாளர்கள் செய்யமாட்டார்கள். ஒலிக்கின்ற கடலும் அழகிய குழலும்போலக் கடுமையாகிய வெவ்விய துன்பத்தை யெழுப்புவது உனக்கு நியாயமோ? குறுமுனிவராகிய அகத்தியப்பெருமான் பொதியமலையிலிருக்கின்றனரென்று வாய்குழறிக் கூறுவாள். எ - று. (௫)

வட்டி கைப்பலகை மீதிலவன் மாணு ருவெலா
மொட்டி யொட்டினள்வ ரைந்துறுக ரத்தி னணையு
மொட்டி ளங்கதிர்மு லைத்துணைமு யங்கும் வதனந்
தொட்டு முத்தமிடு மாலையென வேது வளுறும்.

(இ - ள்.) சித்திரப்பலகையின்மேலே அவ்வுருக்குமாங்கதனுடைய மாட்சிமைப்பட்ட வடிவமுழுவதையும் மிகவுமொட்டி யெழுதி, பொருந்திய கையினால் தழுவுவாள். கோங்கரும்புபோன்ற ஒளிவீசும் இரண்டு இளமுலைகளாலு முயங்குவாள். முகத்தைத்தொட்டுமுத்தமிடுவாள். மலர்மாலையைப்போலத் துவள்வாள். எ - று. (௬)

நெட்டு யிர்ப்பெறியு நேர்தளிர்து வண்டு கருகப்
பட்ட பட்டவிட மெங்குமுயர் கொப்புள் பரவக்
கட்டு ணைப்புனல்க விழ்க்குமுரு வெம்மை வெருவி
விட்ட கன்றதென மேகலையொ துங்க விழுமால்.

(இ - ள்.) பெருமூச்சுவிடுவாள். தளிர்கள் துவண்டு கருகும்படி அவைபட்ட விடங்களிலெல்லாம் பெரிய கொப்புளங்கள் பரவவும், இருகண்களினின்றும் நீரைச் சொரிவாள். உருவத்தின் வெப்பத்திற்குப் பயந்து விடுத்துச் சென்றதுபோல மேகலாபரணமானது ஒதுங்கும்படி விழுவாள். எ - று.

நேர்தளிரென்பதற்கு அழகிய தளிரென்றுவது, அவள் மேனியையொத்த தளிரென்றுவது பொருள்கூறுக. (௭)

உற்று ழந்தவவ டன்னினுமு ரைக்க வரிதாய்
முற்றும் வெந்துயரின் மூழ்கிநில மீது முடிசாய்த்
தற்ற முற்றவச மாயினளை னைத்து மறியாப்
பொற்ற விந்திரனவி ழைந்துமயல் பூண்டு வருவான்.

(இ - ள்.) (ஆடவனுடன்) பொருந்திவருந்தியவளைக்கட்டினும் சொல்லமுடியாததுபராய் முழுதும் பெருந்துன்பத்தில் மூழ்கி, பூமியின்மேல் சிரசைச் சாய்த்துப் பரவசமானாள். அதற்றையெல்லா முணர்ந்து மனமழிந்த சிறுமலைபோன்ற இந்திரன் (அவளை) விரும்பிக் காமமயக்கமுற்று (உருவமாறி) வருவானாயினன். எ - று. (௮)

வேறு.

கழல்படுத் திறுக்கிய கமல பாதமுங்
கழலொலி செயுங்கணைக காலு நெஞ்செலாங்
கழலவேள் சாங்களிற் கதுவி மாதராள்
கழலிளங் காய்பொரக் கவின்செய் கச்சுமே.

(இ - ள்) வீரக்கழலைத்துக்கட்டிய தாமரைபோன்றபாதமும், வீரகண்டாமணியானது ஓசையிடுகின்ற கணைக்காலும், மனமுழுதும் கழலும்படி மன்மத பாணங்களாற் சுடப்பட்டுள்ள முகுந்தையின் காலிலணிந்த இளங்காய்போல அழகு செய்யுங் கச்சும். எ - று.

இதுமுதல் மூன்றுசெய்யுள்களால் இந்திரன் முகுந்தைபால் வந்தவகையை வருணிக்கின்றனர். (௯)

விரற்றலைப் புட்டிலும் விளங்கு செங்கையி
னரற்றெறும் நாணடு சிலையு மார்பத
மிரைத்துமென் மலர்த்தொடை யிசைந்த மார்பமு
நிரைத்தடங் கணைப்புதை நிலவு தோள்களும்.

(இ - ள்.) விரலினுனியில் புட்டிலும், விளங்குகின்ற சிவந்தகையிலே ஒலிக்கின்ற வலிமையுடைய நாண்பூட்டிய வில்லும், வண்டுகளொலித்து மெல்லிய மலர்மாலை பொருந்திய மார்பும், வரிசையாகிய பரந்த அம்புகள் புதைந்து விளங்கும் தோளு ளும். எ - று. (௰)

பொற்புரி யாற்புறஞ் சூழ்ந்த குஞ்சியும்
பொற்பமே யுருக்குமாங் கதன்மெய்ப் புலவிய
பொற்பெலாந் தழீஇக்கொடு புலம்பிச் சோர்ந்தவப்
பொற்பினண் மருங்குறப் பொருக்கென் றெய்தினான்.

(இ - ள்.) பொற்புரியினாலே புறத்திற்கட்டிய குடுமியும் அழகு செய்யும உருமாங்கதராசன் தேகத்திற்பொருந்திய அழகு முழுவதையுந் தழுவிக்கொண்டு புலம்பிச் சோர்ந்துள்ள அவ்வழகியாகிய முகுந்தையின் சமீபத்திற் பொருந்தவிரைந்து சேர்ந்தனன். எ - று.

குஞ்சி - ஆண்மகன் தலைமயிர் பெண் தலைமயிரைக் குழலென்றும் அளகமென்றுஞ் சொல்லுவர். (௧௧)

மருக்குழன் மாதரான் மறுத்துப் போந்தவவ்
வுருக்குமாங் கதனுமீண் டுற்றா னாமெனப்
பொருக்கென வெழுந்தனள் புக்க வஞ்சனுந்
தருக்கறு நயமொழி தழுவிக் கூறுவான்.

(இ - ள்) மணந்தங்கிய கூந்தலையுடைய முகுந்தையென்பவள் (தன்கருத்தைத்) தடுத்துச்சென்ற அவ்வுருக்குமாங்கத மன்னனும் திரும்பி (தன்பாலவிருப்புகொண்டு) வந்தடைந்தனனென்று, விரைந்து எழுந்தனள் (உருக்குமாங்கதன்போல வேடங்கொண்டு)வந்த வஞ்சகனாகிய இந்திரனும் அகங்காரமற்ற நயவார்த்தைகளோடு தழுவிச்சொல்கின்றான். எ - று. (௧௨.)

ஏந்திள வனமுலை யிரண்டும் பாய்ந்துதண்
சாந்தகங் கிழிதரத் தழுவிக் கைகளான்
மோந்தனன் புட்குரன் முழக்கங் கேட்டனன்
மாந்தின னிதழ்நறா மருவிப் புல்லினான்.

(இ - ள்.) அண்ணாந்த இளமைவாய்ந்த அழகிய முலைகளிரண்டும் பாய்ந்து குளிர்ந்த சாந்தப்பூச்சானது கிழிடும்படி தழுவிக்கொண்டு கைகளாலே மோந்தனன்; (எண்வகைப்) புட்குரல்களின் (ஒலியைக்கண்ட ததிலே) முழங்ககேட்டனன். இதழூறலாகிய தேனைப்பருகினன், அவளைத் தழுவிக்கூடினன் எ - று

புட்குரலெட்டும் முன் விளக்கப்பட்டன. (௧௩)

வாட்டடங் கண்ணியு மகிழ்ந்தன் னானுங்
கோட்டிளங் குவிமுலை கோட்டு மண்கொள
வூட்டிய காதலின் முயங்கிச் செய்பவா
யோட்டமும் பருகினா ளவ்வியற் றாளரோ.

(இ - ள்.) வாட்படைபோலும் பரந்த கண்களையுடைய முகுந்தையும் மீண்டும் அவன்மார்பிலே ஒட்டமாகிய இளமைதங்கிய குவிந்தமுலையானது கோட்டுமண்

சொன்னும்படி அதிகரிக்கச்செய்த ஆசையுடன் முயக்குற்று, சிவந்தவாயிதழையும் பருகினள். சந்தோஷமுற்றனள். எ - று.

யானையானது மதமுற்றகாலத்தில் நிலத்தைக் கொம்பாற்குத்தி மண்ணைக் கொள்வதுபோல, முலையாகிய யானையும் அவன் மார்பிற் குத்திக் கோட்டுமண் கொள வென்றார். (௧௪)

துடக்கின னிந்திர னென்று சூர்த்தவேள்
முடக்கிய தடக்கையின் முனைகொ ளம்பெலா
மடக்கின னிமிர்த்தகை வரிவிற் றாழ்த்தின
னடக்கினன் முருந்தையோ டமர்ந்த போரினை.

(இ - ள்) இந்திரன் முயங்கினனென்று, அச்சங்கொடுத்த மன்மதன் முடக்கிய பரந்த கையிலுள்ள கூர்மைவாய்ந்த அம்புகளையெல்லா மடக்கினன். தூக்கிய கையிற்றாங்கிய வரிக்கட்டமைந்த வில்லைத் தாழ்த்தினன். முருந்தையோடு செய்த காமப்போரை யடக்கினன். எ - று.

இச்செய்யுளால் முருந்தை காமமயக்கொழிந்தாளென்றபடி. ௧௫)

தருந்தனிக் கலவியாற் றழைத்த நெஞ்சொடு
முருந்தைதன் முனிப்பணி முடிப்பச் சென்றனள்
புருந்தகை தவவுருப் போக்கிப் போந்தன
னருந்தழல் வயிரவே லுதன் விண்ணமே.

(இ - ள்.) தகுதியாகிய ஒப்பற்ற புணர்ச்சிமயக்கத்தால் நிரம்பிய மனத்துடன் முருந்தையானவள் தன் கணவன் பணிவிடையைச் செய்யச்சென்றனள். பிரகாசிக்கின்ற தீயைச்சொரியும் வச்சிரவேலைத்தாங்கிய ஆங்குற்ற தேவராசனாகிய இந்திரன் தான்வந்த வஞ்சகவடிவத்தையொழித்துத் தேவலோகத்தை யடைந்தனன். எ-று (௧௬)

மற்றிழை முருந்தைதன் மோட்டி னிந்திரற்
கறநெறிநாட் கருத்தரித் தையிரண்டெனச்
சொற்றரு மதியிடைத் தோன்ற லீன்றனள்
பற்றிய கருங்கடல்* பரிதி கானறென.

(இ - ள்.) முற்றிய ஆபரணமணிந்த முருந்தையென்பவள் தன்வயிற்றில் இந்திரனுக்கு அந்தினத்திலே கருப்பமடைந்து, பத்தாவது என்று சொல்லத்தக்க மாதத்தில், கருமைபொருந்திய சமுத்திரமானது சூரியனைப்பெற்றாற்போல ஓர்புதல்வனைப் பெற்றனள். எ - று.

ஐயிரண்டெனச்சொற்றருமதி - பத்தாமாதம். (௧௭)

அண்டமு நடுக்குற வார்த்து வந்துவீழ்ந்
தொண்டரை கிடந்தொளிர் கின்ற மைந்தனைக்
கொண்டலூர்ந் தவனுக்கங் குரித்த தோர்கலா
மண்டிய பெருந்தவன் மகிழ்ந்தெ டுத்தனன்.

(இ - ள்.) அண்டமும் நடுங்கும்படி ஆர்ப்பரித்து வந்து வீழ்ந்து ஒள்ளிய பூமியிற் கிடந்து பிரகாசிக்கின்ற புத்திரனை, மேகவாகனனாகிய இந்திரனுக்கு உரித்ததை யுணராத மிக்க பெருந்தவமுடைய கவிமுனிவன் களிப்புற்றெடுத்தனன். எ - று.

கவியெனப் பட்டவக் கருணை மாதவன்
சவிமணி மைந்தற்குச் சாத காதிக
ளவிசொரிந் தமரருக் கன்பு செய்திரும்
புவியவர் புகழ்தரப் போற்றிச் செய்தனன்.

(இ - ள்) கவிமுனிவனென்று சொல்லப்பட்ட அநுக்கிரகமைவாய்ந்த பெருந் தவமுடையவன் நிறமமைந்த மாணிக்கம் போன்ற புதல்வனுக்கு, தேவர்களுக்கு அவி சொரிந்து அன்புசெய்து, பெரிய பூலோகத்தார் புகழும்படி சாதகாதி கருமங்கள் மேம்படச்செய்தனன். எ - று.

அவி - தேவருணவு

வேறு.

குருச்சந் திரனை யென்றமுகக் கோல முகுந்தை தனிமைந்த
னுருச்சசந் தவரி சனவிழுதும் பிறவுந் திமிர்ந்தொண் புனலாட்டித்
தருச்சந் தொகோ ரகிலபுகைத்துத் தனப்பா லூட்டப் பன்னிருநாள்
கிருச்சமதனென வொருநாமங் கிளர்ந்தான மகற்குக் கிளர்தவத்தோன்.

(இ - ள்) நிரந்தங்கிய (பூரண) சந்திரனை வென்றிகொண்ட முகத்தையுடைய அழகிய முகுந்தையென்பவள் ஒப்பற்ற புதல்வனுடலைச் சந்தனமும் அரிசனமும் விழுதுகளும் பொடித்துக் கலந்த ஒள்ளிய நீரால் முழுக்காட்டி, தேவதாரு சந்தனக் கட்டை அகிற்கட்டை முதலியவற்றின் பொடியாற் புகையிட்டு, முலைப்பாலூட்டி வளர்க்க, விளங்குகின்ற தவத்தையுடைய கவிமுனிவன் பன்னிரண்டாந் தினத்தில் கிருச்சமதனென்னும் ஒருபெயராகக் கூறி நாமகரணஞ்செய்தனன். எ - று. (௨௦)

கருப்ப நிலைக்கா றுமாண்டிற் கரிசின் முறையா லுபநயனம்
விருப்பி னியற்றி மறையாதி விளங்கத் தெரித்தான் சவியையான்
கிருச்ச மதனு மொருமுறையிற் கேட்டு முழுதுந் தெரிந்துணர்ந்து
வெருச்செய் பவத்தின் வேரறுக்கும் வெறுப்பிப் படைபோ லாயினனே.

(இ - ள்) கவிமுனிவன் கிருச்சமதன் ஜனித்ததாகு ஆறும் வருடத்தில், குற்றமற்ற முறைப்படி உபநயனத்தை ஆசையோடுசெய்து, வேதமுதலியவற்றை விளங்கும்படி யுணர்த்தினன். கிருச்சமதனும் ஒரேதரங்கேட்டு (மைந்து ஏரிப்பு அறியாமையொழிய) முற்றும் ஆராய்ந்தறிந்து அச்சத்தைச் செய்யும் பிறவியின் வேரையறுக்குமழுப் படைபோலாயினன். எ - று. (௨௧)

ஒழுக்க முதலா கியநெறியி னுறழா தொழுகக் கவிமகிழ்ந்து
வழுக்கி லாத கணநாதா வாவென் மனுவை யுபதேசித்
தழுக்கி லாதா யிம்மனுவை யனுட்டிப் போடு கணிவிகையு
முழுக்க வருள்வர் கணேசரென மொழிந்தா னவனு மதுபெற்றான்.

(இ - ள்.) ஒழுக்கமுதலாகிய வழியிற் பிறழாது நடக்க, கவிமுனிவன் களிப்புற்று, குற்றமில்லாத "கணநாதவா" என்னும் மந்திரத்தை யுபதேசித்து, களங்கமில்லாதவனே! இம்மந்திரத்தை அனுட்டிப்புக் கிரமத்துடன் கணிக்கக்கடவை (அதனால்) கணேசப்பெருமான் உன்விருப்பம் முற்றுப்பெற அநுக்கிரகிப்பாரென்று கூறினன். கிருச்சமதனும் அம்மந்திரத்தைப் பெற்றனன் எ - று. (௨௨)

நாளு நியதிக் கடன்முடித்து நாம வினைக டொக்கெல்லை
யாளு மைங்கைக் கணேசர்திரு வடித்தா மரைக ளுளத்திருத்தி
மூளு மன்பி லவர்மனுவை முறையி னனுட்டிப் பொடுங்கணித்துக்
கேளும் பிறக்கென் றிடவுலகங் கேண்மை கொள்ள விளங்குநாள்.

(இ - ள்.) நாடோறும் நித்தியகருமத்தை முடித்து, அச்சத்தைத்தரும் வினைகளையொழித்து என்னை யனுக்கிரகிக்கும ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமான் திருவடித்தாமரைகளை மனதிலிருக்கச்செய்து அதிகரித்த ஆசையுடன் அவருடைய திருமந்திரத்தை முறைப்படி அநுட்டிப்புடன் கணித்து, உறவினரும் பின்னென்று சொல்ல உலகமுழுவதும் நட்புகொள்ளும்படி விளங்குங் காலத்தில். எ - று.

துள்ளிக் கயல்வா னிடைத்தாவத் துடுமென் றிறங்கி யிளநாகு
வள்ளை குதட்டுந் தடமுடுத்த மகத நாட்டிற் கோனெவர்க்குந்
தள்ளை யனையா னெருங்கொடையா னருள் சூர னெனும்பெயரான்
றெள்ளை யகன்ற வுள்ளகத்துத் தொடுத்த தருமச் சிந்தையான்.

(இ - ள்) சேற்கெண்டைகள் துள்ளி ஆகாயத்திலே தாவவும், இளங்கன்றுகள் விரைந்திறங்கி வள்ளைக்கொடியைக் குதட்டுகின்ற தடஞ்சூழ்ந்த மகதநாட்ட ரசன் எல்லோருக்குந் தாயைப்போன்றவன், மிக்க ஈகைத்தன்மையுடையவன்; தானசூரனென்னும் பெயருடையவன், துன்பமகன்ற மனத்திலே பொருந்திய தருமசிந்தனையை யுடையவன். எ - று. (௨௪)

அன்ன மருட்டு நடைக்கற்பி னன்ற மனைவி யம்பிகையும்
பொன்னை வெள்ளி தனைமருட்டும புத்தியமைந்த வமைச்சர்களுந்
தன்ன துடலு முயிருமெனத் தக்க மரபால் வழியொழுக
வின்ன லறச்செங் கோலோச்சி யிருந்து மகிழுங் காலத்தில்.

(இ - ள்.) அன்னத்தை மயங்கச்செய்யும் நடையையும் கற்பின் மேம்பாட்டையுமுடைய மனைவியாகிய அம்பிகையென்பவளும், பொன்னையும் வெள்ளியையு மயக்கிய மனமமைந்த மந்திரிகளும், தன்னுடைய உடலும் உயிருமென்று சொல்லத் தக்க முறைப்படி நீதிவழியேயொழுகவும் துன்பமகலவும் செங்கோல் செலுத்திக் கொண்டு களிப்புற்றிருக்குங்காலத்தில். எ - று. (௨௫)

பெற்ற குரவன் றனைக்குறித்துப் பிதிரர்க் கூட்டு நாளெய்த
முற்ற வுணர்ந்த வசிட்டனையு முழுத்த தவனத் திரிதனையு
மற்று முயர்ந்த முனிவரையும் வருவித் தான்மற் றவரோடுங்
கற்று மிகுந்த கிருச்சமதன் கலந்து கலைப்போ ராற்றினான்.

(இ - ள்.) பெற்றதந்தை நிமித்தமாகப் பிதிரர்க்கு உண்பிக்குந்தினம் [சிராத்தநாள்] வரவும், முழுவதுமுணர்ந்த வசிட்டமுனிவனையும் முழுமையாகிய தவத்தையுடைய அத்திரிமுனிவனையும், அவரல்லாத உயர்ந்த பிறமுனிவர்களையும் வருவித்தனன். அவர்களுடன் (நூல்களைக்) கற்றுமேம்பாடுற்ற கிருச்சமதமுனிவன் அளவளாவிச் சாத்திரப்போர் செய்தனன். (௨௬)

வாதி னேற்ற வத்திரியவ் வாதின் வெல்ல மாட்டாது
சாத லனைய கொடுங்கோபத் தழல்கொப் புளிக்க வெதிர்நோக்கிப்

பேதை நினது பிறப்பினையும் பெருமை யனைத்துஞ் சுடுசுடுநீ
யோது முனிவன் மகனல்லை யுருக்கு மாங்கன் மகனென்றார்.

(இ - ள்.) சாஸ்திரவாதத்தாலெதிர்த்த அத்திரிமுனிவர் அவ்வாதிலேவெல்ல வல்லபமில்லாமல், இறப்பிலோங்கிக்கிளர்ந்த கொடிய கோபாக்கினியானது கொடபுகைக்க எதிரேபார்த்து, அறிவில்லாதவனே! உன் பிறவியையும் உன் பிரபாவங்களையுஞ் சுடுசுடு; நீ சொல்லிய கவிமுனிவர் புதல்வனல்லை. உருக்குமாங்கதனென்னும் மன்னவன் மகனென்றுகூறினர். எ - று. (உஎ)

இந்தச் சபையி னுடனிருத்த லிலலா தெங்க ளோடொப்பச்
சிந்தைக் கினிய பூசனையுஞ் செய்யக் கூடா தெழுந்தொல்லை
யந்தப் புடையே குதியெனவே யமன்றத் திரிகை மறித்துரைப்பச்
சந்தப் பொடியி னொளிர்மேனித் தவஞ்சால் கிருச்சமதன்வெகுண்டு.

(இ - ள்.) நீ இந்தச் சபையினடுவிலிருத்தல் கூடாது, எங்களோடு சமானமாக மனத்திற்கினிய பூசையையுஞ் செய்யக்கூடாது. விரைவில் அந்தப்பகத்திற் செல்லக்கடவையென்று கோபித்து, அத்திரிமுனிவன் கையை மறித்துச்சொல்ல, சந்தனப்பொடியாற் பிரகாசிக்கின்ற திருமேனியையுடைய தவமிருந்த கிருச்சமதமுனிவன் கோபித்து. எ - று. (உஅ)

விழிகள் சிவப்ப விதழ்துடிப்ப விளங்கு புருவ நுதலேற
வழிவு மருவிற் றெனச்சிலரங் கஞ்சி யகல மூன்றுலகும்
பொழிகட் டழலா லவிப்பானம்போற் பொங்கி யெழுந்து சபைதன்னிற்
குழிய வசிட்டன் முதலான குழுவின் முன்னின் றிதுசொன்னான்.

(இ - ள்.) கண்கள் சிவக்கவும், உதடு (படபடெனத்) துடிக்கவும், பிரகாசிக்கின்ற புருவமானது நெற்றியிலேறவும், அழிவுகாலஞ் சம்பவித்ததென்று அங்குள்ள சிலர் பயந்தோடவும், திரிலோகங்களையும் சிந்துகின்ற கண்ணினெருப்பால் அழிக்கின்ற உருத்திரமூர்த்திபோலக் கோபித்தெழுந்து சபையிற்கூடியுள்ள வசிட்டர்முதலிய முனிவர்கூட்டத்தின் முன்னின்று இதனைச் சொல்கின்றான். எ - று. (உகூ)

அரசன் மகன்யா னல்லனீவி ரவமா னத்தா லவமதித்தீர்
பாவு தவத்துக் கவியென்பான் பால னானே னானக்கால்
விரவி யிருந்த நும்மையெலாம் விழித்துப் பார்க்கு முனமவித்துச்
சுரர்கள் வியப்பப் புகழ்நடுவே னென்று துணுகவென் றேகினான்.

(இ - ள்.) யான் (உருக்குமாங்கத) அரசன் புத்திரனல்லேன்; நீங்கள் அவமானத்தால் (என்னை) அவமதித்துரைத்தீர்கள். துதிக்கத்தக்க தவத்தையுடைய கவிமுனிவனென்பவனுக்குப் புத்திரனாய்ப் பிறந்தேன். யான் பிற்காலத்தில், கூடியிருந்த உங்களையெல்லாங் கணதிறந்து பார்க்குமுன்னரே யழித்துத் தேவர்கள்களிக்கக் கீர்த்தியை நிலைநிறுத்துவேனென்று விரைந்து சென்றனன். எ - று. (கூ0)

மிகுந்த கோபந் தணியாமை வேகக் கொடும்போ யீன்றாளை
முகுந்தாய் மிகுந்த தூர்த்தாயென மனனே வாவென் பிதாயாரே
நிகழ்ந்த துள்ள படியிங்கே நிகழ்த்து வாயென் றன்முகுந்தை
நெகிழ்ந்து மெய்ந்நடுநடுங்கி நிகழ்ந்த படியே யுரைசெய்தாள்.

(இ-ள்.) அதிகரித்த கோபமடங்காமல் விரைவோடுசென்று, தன்னைப்பெற்ற தாயை (நோக்கி) முருந்தாய்! மிக்ககாமமுடையவளே! என்முன்னே வருக. எனக்குத் தந்தையாவன்? நடந்ததை உள்ளபடியே கூறுவாயாகவென்றனன். முருந்தை (அதனைக்கேட்டு) மனந்தளர்ந்து நடுநடுங்கி நடந்த விருத்தாந்தத்தையே (உண்மையாகச்) சொல்லினள். எ - று.

தூர்த்தை - காமமேலீட்டாற் பலரையும் புணர்பவள். (௧௧)

வேறு.

மிருக வேட்டையின் மேவிய வுருக்குமாங் கதனீர்
பருக வந்தனன் படியிலா வழகுகண் டவனுக்
குருகி யுன்றனை யுயிர்த்தனே னுண்கணார்க் கார்வம்
பெருகி னிச்சையா றொழுகநூல் பேசிய முறையால்.

(இ - ள்) மிருகவேட்டைக்காகவந்த உருக்குமாங்கதராசன் (இவ்வாச்சிரமத்திற்கு) நீர்பருகும்படி வந்தனன் (அவனுடைய) ஒப்பில்லாத தேகப்பொலிவைப்பார்த்து மனமுருகி, மையூட்டிய கண்ணையுடைய மாதர்களுக்கு ஆசையதிகரித்தால் மனஞ்சென்றவழி நடக்க நீதிநூற்களிற் சொல்லியமுறைப்படி, (அவனைக்கூடி) உன்னைப் பெற்றேன் எ - று. (௧௨)

விருப்பின மைந்தனே யுள்ளவா றீதுவென விளம்ப
நெருப்பின் மேலொரு நெருப்பினைச் சொரிந்துபெய் தாங்குப்
பொருப்பு நேர்தவன் புகைந்துபுள் ளினங்குறு காத
வருப்ப மாவனத் திலந்தையா குகவெனச் சபித்தான்.

(இ - ள்) ஆசையையுடைய மகனே! உள்ளவகை யிதுவென்று (முருந்தை) கூறவும், நெருப்பின்மேலே வேறொரு நெருப்பை மிகுதியாகப் பெய்தாற்போல, மலைபோன்ற (பெருந்) தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் கோபித்து, பறவைக் கூட்டங்களணுகாத துன்பமமைந்த வனத்தில் இலந்தையாகுகவென்று சாபமிட்டனன். எ - று. (௧௩)

ஒடுங்கி நின்றதா யொருமக னுரைத்தமை கேட்டு
நெடுங்கு ணத்தவ தாயென நினைந்திலை யென்னை
நடுங்கச் செய்தனை யாதலி னீயுமுன் னடுங்கக்
கொடுங்கு ணச்சிறுமை கூடுக நினக்கெனச் சபித்தாள்.

(இ - ள்) அடங்கிநின்ற முருந்தையென்னுந் தாயானவள் ஒப்பற்ற தன் மைந்தன்கூறிய சாபமொழியைக்கேட்டு, மிக்க நற்குணமுடையவனே! என்னைத் தாயென்று கருதினாயில்லை நடுக்கமடையச் செய்தனையானபடியால், நீயும் உன்னை நடுங்கும்படி, உனக்குக் கொடுமையாகிய குணத்தையுடைய சிறுமைத்தன்மை வருகவென்று பிரதிசாபந் தந்தனள். எ - று. (௧௪)

கலந்தை வந்தொளிர் முலையவள் கடுகுசா பத்தா
லிலந்தை வந்தெழு வனத்திடை யிலந்தையா யிருந்தாள்
வலந்தை வந்தோன் மன்னவன் மகன்றனைக் குறித்து
நலந்தை வந்தமா தவனுள நாணியங் கிருந்தான்.

(இ - ள்.) ஆபரணமணியப்பெற்றுப் பிரகாசிக்கின்ற குசங்களையுடைய முகுந்தை யென்பவள் தன்னையணுகிய சாபத்தால், இலந்தைகள் [illegible] இலந்தைமரமாயிருந்தனள். வெற்றிபொருந்திய தோள்கள் பொருந்திய [illegible] கதனுடைய புதல்வனுனமையைக் கருதி, நன்மைபொருந்திய பெருந்தவத்தைச்செய்த இருச்சமதமுனிவன் மனதில் வெட்கங்கொண்டு அவ்விடத்திலிருந்தனன். எ - று. (௬௫)

அழிந்த மானத்தின வாழ்தலி னுக்கையை யொறுத்துக்
கழிந்து போதலே நன்றெனக் கருதிடு மளவில்
வழிந்த மாமத முகத்தவ னருளின்வா னவக்குப்
பொழிந்த தேனெனப் புரந்தரன் மகனெனக் கேட்டான்

(இ - ள்.) அழித்த மானத்துடன் வாழ்வதைக்காட்டிலும் உடலைவெறுத்து இறந்துபோவதே உத்தமமென நினைக்குங்காலையில், மதமொழுகும் யானைமுகத்தை யுடைய விநாயகக்கடவுளுடைய திருவருளால், தேவர்களுக்குச் சொரிந்த தேன்மாரி போல, இந்திரன் மகனென்று சொல்லக்கேட்டனன். எ - று. (௬௬)

சிறிது சிந்தையைத் தேற்றின னவமதி செய்த
வுறுவ ராதியோ ரனைவரு முற்றடி வணங்க
மறுவி னல்வரம் பெறுகுது பெனமதித் தந்தக்
குறுவ னத்தினை விடுத்தொரு கொடுவன மடுத்தான்.

(இ - ள்.) மனதைச் சிறிதுதேறச்செய்து அவமதித்த முனிவர் முதலானவர்களெல்லாரும் பொருந்திப் பாதங்களைப் பணியும்படி, குற்றமில்லாத நல்லவரத்தை யடைவோமென்று யோசித்து, அந்தச் சிறுவனத்தைவிட்டு வேறொரு பெரிய வனத்தை யடைந்தனன் (இருச்சமதமுனிவன்) எ - று.

கொடுவனமென்றதால் புலி சிங்க முதலிய துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கும் பெருவனமெனக்கொள்க.

தேற்றினன் - முற்றெச்சம். (௬௭)

இதுமு குந்தையின் சரிதமென் றிதழ்முருக் கவிழ்ந்த
பதும மென்மலர்ச் சேக்கையான் பகர்ந்தனன் செய்ய
மதும லர்த்திரு மார்பினின் றகழ்மண் போந்து
முதுத வம்புரி வியாதனு முனிவரன் மகிழ.

(இ - ள்.) இதுவே முகுந்தையென்பாளுடைய சரித்திரமென்று, செவ்விய தேனொழுகுந் தாமரைமலரில் வசிக்குந் திருமகளை மார்பினின்று விலக்கிப் பூமியில் வந்து முதிர்ந்த தவத்தைச்செய்த வியாதனென்னும் பெயரையுடைய முனிசிரேட்டர் மகிழும்படி, இதழ்கள் கட்டவிழ்ந்த மெல்லிய தாமரைமலர்ச் சேக்கையையுடைய பிரமதேவன் கூறினன். எ - று. (௬௮)

ஏந்தி தையங்காழ் கினியமந் திரவுப தேசந்
தந்தை தந்திட முகுந்தைத[illegible]யபற்ற துளைத்தா
மந்த மெய்த்தவன் வரம்பெற லறிகெனப் பிருகு
சுந்த ரம்பெறு சோமகாந் தனுக்குரை தொகுப்பான்.

(இ-ள்.) எந்தையாகிய ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமானுக்கு இனிதாகிய மந்திரோபதேசத்தை முகுந்தைமகனாகிய கிருச்சமதமுனிவன் தந்தையாகிய கவிமுனிவனாற் செய்யப்பெற்ற வகையைக் கூறினோம். அந்த உண்மைத்தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் வரம்பெற்றதையும் அறிவாயாகவென்று பிருகுமுனிவர் அழகுபெற்று விளங்குஞ் சோமகாந்தராசனுக்கு உரைசெய்வார் எ-று.

கிருச்சமதருபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௩௧௩

---

# கிருச்சமதர் வரம்பெறுபடலம்.

உலகங்க ளனைத்து கோடிக் குமுன முண்டாக் கியவெம் பெருமானறைநூல், பலவுந் தெளிகின் றகிருச் சமதன் படருற் றவனுற் றவரத் தினையு, மிலகும் படிசொல் லுகவென் றுதவ வெழிலா ரும்வியா தன்வினவு, மலர்மெல் லணையான மகிழ்கூர்ந் தவன்முன் வரம்பெற் றதுமோ தவலித் தனனே.

(இ-ள்.) உலகங்களெல்லாவற்றையும் கோடிக்குமுன்னர்ப் படைத்த எம்பெருமானுலருளிய தலைமையான பலநூல்களையுந் தெளிகின்ற கிருச்சமதமுனிவன் (தவவனஞ்)சென்று, அவன்பெற்ற வரத்தையும்விளங்கும்படி சொல்லவேண்டுமென்று, தவத்தின் அழகுவிளங்கும் வியாதமுனிவர் வினவவும், அம்மெல்லிய தாமரைமலரணையையுடைய சதுமுகன்களிமிகுந்து, அவன் வரம்பெற்றதையுஞ் சொல்லத்தொடங்கினன். எ-று. (௧)

பழிமல் கியகா னமொழிந் தயலே படர்கா னமடுத் தகிருச் சமதன், வழிதண் மதுமல் லிகைமுல் லையிள மயிலைக் கொடிமா தவிபந் தரிடும், பொழிலும் புதுமா மலரோ டைகளும் பொங்கும் புனல்வா வியும்வேள் விமறை, மொழியும் படிசெய் யுமுனிக் கணமு முடிவா னவர்வாழ்க் கையுநோக் கினனே.

(இ-ள்) பழிமிகுந்த வனத்தை விடுத்து, சமீபத்திலே பொருந்திய (பெரு) வனத்தை யடுத்த கிருச்சமதமுனிவன், குளிர்ந்த தேன்சொரியும் மல்லிகையும் முல்லையும் இளமைதங்கிய இருவாட்சிக்கொடியும், குருக்கத்திப் பந்தரிட்டபொழிலும், அன்றலர்ந்த பெரிய மலரோடைகளும், பொங்குகின்ற நீரையுடைய தடாகங்களும்; யாகங்களை வேதங்கூறிய வகையாகச்செய்யும் முனிவர்கூட்டங்களும், கிரீடமணிந்த தேவர்களுடைய இருக்கையுங் கண்டனன். எ-று. (௨)

அங்குற் றமர்மா தவர்தம் மையடுத் தவர்தா டொழுவாங் கவர்நல் வாவேற், றிங்குற் றிருவென் னமகிழ்ந் துதினை மெழிலார் புலியின் வலமானபதந், தங்கும் பெருமெல் விரலூன் றியொரு தந்தப் பெருமா னுருவங் கருதி, முங்கும் பொறியைந் துமடக் கிமனு மொழிகின் றனன்முற் றுதவத் தினையே.

(இ - ள்.) அவ்விடத்திற் பொருந்தியமர்க்க பொருந்தவிசின் மீதிருந்து அவ ரிகள் பாதங்களிற் பணிந்து, அவ்வாறே அவர்கள் நல்வரவாகக்கொண்டு இருவிடத்திற் பொருத்தியிருக்கவென்று கூறக்களித்து, எட்டோறும் வலப்பாகத்திற்பொருந்தியென வியபெருவிசேஷப்பூமியிலன்றி, ஏகதந்தராகிய கணேசப்பெருமானுடைய திருவு வத்தை மனதில் தியானித்து, அன்புசெய்யும் ஐம்பொறிகளையுமடக்கி முதிர்ந்த தவத் துடன் மந்திரத்தைக் கணிக்கின்றனன். எ - று. (௩)

ஓரா யிரதே வர்களாண் டெமக் கொருகால் விழிவிட் டவனிங் ஙன் னம, யீரா யிரமே மூமையா யிரமாண் டெங்குந் தவங் கியெழுந் துசுடத், தாரார் முலைவா னரமங் கையருந் தனிவா னவருந் தருவோ ரவரு, நீரார் குளிர்கங் கைநெடும் பொழிலு நிலவத் தவமாற் றியிருந் தளவில்.

(இ - ள்.) ஆயிரந்தேவவருடங்களுக் கொருமுறை கண்ணிமைத்து, அக்கிருச் சமதமுனிவன் இவ்வகையாகப் பதினாயிர வருடங்கள் எவ்விடத்திலுந் தவாக்கினி யானது எழுந்து, மாலைபொருந்திய குசங்களையுடைய தேவலோகத்துள்ள அரம்பாஸ் திரீகளும் ஒப்பற்ற தேவர்களும் அசுரர்களும் யாவரும் நீர்பொருந்திய குளிர்ச்சிவாய் ந்த கங்கையும், பெரிய (கற்பகச்)சோலையும் விளங்கிச் சுடும்படி, தவஞ்செய்து கொண் டிருக்கையில். எ - று.

விழிவிடுதலென்பது கண்ணைவிட்டு இமை விலகல். (௪)

மனவாக் குறுகா யமுமெட் டரிய வளர்பே ரொளியாய்ப் பரிபூ ரணமா, யினமா மலர்தூ வியிறைஞ் சியெனதியானென் னுமகந் தையி ரித் தெனதுந், தனதே யெனுமெய் யடியா ரவரே தாமா கியிருந் தவிநா யகனார், நனவே யவனுக் குவரம் புரிய நகுபே ரருளா லெதிர்நண் ணின ரே.

(இ - ள்.) மனமும் வாக்கும் பொருந்தியகாயமு மெட்டுதற்கரிய வளர்கின்ற பேரொளிப் பிழம்பாய், எங்கும் நிறைவாய், கூட்டமாகிய சிறந்த மலர்களா லருச்சித் துப் பணிந்து, எனது யானென்னும் அகந்தையையொழித்து, (பரிபூரணவியாபகத்தால்) என்னுடையதுந் தன்னுடையதே யென்றும் உண்மையடியவர்களே தாமாகி விளங் கும் விநாயகப்பெருமான், அக்கிருச்சமதமுனிவனுக்கு நனவிலேயே வரமளித்தருள, களிக்கத்தக்க பேரருளோடு எதிரே பொருந்தினர். எ - று. (௫)

காலைக் கதிர்கோ டியுதிக் கனைய கதிர்செய் திருமே னியும்வா ரிச மமன், மாலைக் குவனப் பமர்மார் பும்விரை மலிகுங் குமமா திமட்டித் துயிரு, சிலைப் பனிநீ ரினைத் தருங்தேய்வப் பியதோ ளொருபத் துயிரு, பாலுற் றொளிர்சித் தியும்புத் தியும்வெண் பாலொத் திடுசிங் கநல் வாகனமும்.

(இ - ள்.) காலையிலுதயஞ்செய்யுஞ் சூரியர்கள் ஒருகோடிய ருதயமானாற் போல ஒளிவீசுந் திருமேனியும், தாமரையாகிய மெல்லிய மலர்மாலைக்கு அழகுபொ ருந்திய திருமார்பும், வாசமிக்க குங்குமப்பூமுதலியன சேர்த்துமிக்கபுனிதமாகிய பனி நீரிலரைத்த வாசந்தங்கிய தேய்வைப்பூசிய ஒருபது திருத்தோள்களும், இருபக்கங் களிலும் பொருந்திய பிரகாசிக்கின்ற சித்திதேவியாரும் புத்திதேவியாரும், வெள்ளிய [illegible] நல்ல சிங்கவாகனமும். எ - று. (௬)

*அசைகா துமதம் பொழிமுக மெழின்மரு வொருகோ டும்விளங் கவிசை*
*மிசையா திரமென் குவிதிக் கொளிர்தரு திருமே னியொளிக் கணுடு*
*பசையா மதியின் னொளிசூ ரியனின் மாய்ந்தா லெனவே குறிச்சமத*
*முனியா தனன்ற னொளிமா யவெதி ருற்றூ னைவிழித் துறநோக் கினனே.*

(இ - ள்.) அசைகின்ற திருச்செவியும், (பரஞானம் அபரஞானமென்னும்) இருமதத்தைச்சொரியுந் திருமுகமும், அழகுபொருந்திய திருவேகதந்தமும் விளங்கும்படி பூமியுந் திசையுமெங்கு நிமிர்ந்து பிரகாசித்து விளங்குந் திருமேனியின் காந்தியில்,நட்சத்திரம் சந்திரன் இவற்றின் பிரகாசமானது சூரிய வொளியால் நசித்தாற்போல,விளங்குங் கிருச்சமதமுனிவன் அழியாத தன்னுடைய நல்ல காந்தியானது நசிக்கும்படி, எதிரே யெழுந்தருளிய கணேசப்பெருமானைக் கண்கள் விழித்துப் பொருந்தப்பார்த்தனன். எ - று. (எ)

ஒளியா லிறைவன் றிருமே னியெழில் யாதுந் தெரியா விழிகூ
சவுளந், தெளியா திதுவென் னெனமம் மர்கொடு தியானித் தவுளத் துவி
நா யகனை, யவமே யா டெதிர்நோக் கியெரர்விக் கினமிங் கணுருற் றதுநீர்
த் ததுசெய் தவமு, பெ ளியேன் வயினமுற் றவிரும் கருணை யிசைவித்
தருளெம் பெருமா னெனலும.

(இ - ள்.) பிரகாசத்தினுல், இறைவராகிய கணேசப்பெருமானுடைய திருமேனியின் அழகுமுழுவதுந் தெரியாமல் கண்கள் கூசவும், மனந்தெளியாமல், இஃதென்னென்று மனமயக்கங்கொண்டு, தியானஞ்செய்த உள்ளத்திலே விநாயகக்கடவுளை அன்புடனெதிரே தெரிசித்தது, ஒரிடையூறு இப்பொழுது சம்பவித்தது. அதனை யொழித்து, அடியேன்செய்த தவமும் என்னிடம் முற்றும்பயன்பெறப் பெருங்கருணையைக் கிருபைசெய்தருள். எம்பெருமானே! என்று கிருச்சமதன் யாசிக்கவும்.எ - று.

வெளிக்கண் விளைசிந் தமெழுந் தபிரான் மிகுபே ரருள்கூர்ந் துமெ
ய்ஞ்ஞா னவிழி, யளிக்கத் தளர்வுற றகிருச சமத னனபோ'டுமெழுந் துப
ணிந் துயறைச்,கொளிக்குந திருமே னியெனகண் ணெதிரே யொளிர்வித்
தனனென் றளநெக் குருகித, துளிக்கு மவிழிநீ கள்பரந் துநிலத் துகண்
மாற் றிடநின் றிதுசொல லுவனால.

(இ - ள்) பகிர்முகத்திலே நிவிளைச்சம்பந்த மகலவெழுந்தருளிய கணேசப்பெருமான் மிககபெருங்கருணை மிகுந்து, உண்மையாகிய ஞானநேத்திரங்கொடுத்தருள, மனத்தளர்ச்சியடைந்த கிருச்சமதமுனிவன் ஆசையுடனே யெழுந்துவணங்கி, தேவர்களுக்குங் காணமுடியாத திருமேனியை என்கண்ணுக்கெதிரே விளங்கச்செய்தனரென்று, மனங்கசிந்துருகி, துளிக்கின்ற கண்ணீர்த்துளிகள் பரவிப்பூமியிலுள்ள தூசினை யகற்ற, (எதிர்) நின்று இதனைச்சொல்லுகின்றனன். எ - று.

ஊனக்கண்ணுற் றரிசிக்க முடியாது வருந்திய கிருச்சமதன் கணேசப்பெருமானுற் கொடுக்கப்பட்ட ஞானக்கண்ணுல் அவர் திருமேனியைத் தரிசித்து மனங்களித்திருப்பானுயினனென்பது கருத்து.

*நித்தியமாய் நின்மலமாய் நிர்க்குணமாய் நிட்களமாய்த்*
*தத்துவமாய்த் தத்துவத்துக் கப்பால யப்பாலு*

[illegible] பொருளே நீயடியேன்
சித்த முவப்பத் திருக்காட்சி தந்தனையே.

(இ - ள்.) நித்தியனாகியும், நின்மலனாகியும், நிர்க்குணனாகியும், [illegible] யுடையனாகியும், தத்துவமாகியும், தத்துவத்துக்கப்பாலாகியும், அறற்கப்பாலும் அத்தன்மை யுடையபொருளே! தேவரீர் அடியேனுடைய மனங்களிக்கும்படி திருக்காட்சி [illegible] தருளினீரே! எ - று.

நித்தியம் - எக்காலமுமுண்மை. நின்மலம் - மலரகிதம், நிர்க்குணம் - குண ரகிதம். (கo)

தண்ணார் மதியந் தயங்குஞ் சடாதாரி
யுண்ணா ரமுதே யுலவாச் சுகக்கடலே
விண்ணோ ரறியாத வித்தகா நீயடியேன்
கண்ணாரக் காணுமா காட்சி கொடுத்தனையே.

(இ - ள்.) குளிர்ச்சிபொருந்திய சந்திரன் பிரகாசிக்குஞ் சடையைத் தரித்தவனே! உண்ணத்தக்க அருமையாகிய அமுதமே! அழியாத [நித்திய] சுகசாகரமே! தேவர்களுங் கண்டறியாத ஞானசொரூபியே! தேவரீர் அடியேன் தரிசிக்கும் வகையாகக் காட்சிகொடுத்தீரே? எ - று.

ஜடாதாரி என்றது வடமொழிப்பிரயோகம்.
காணுமாறு என்றது காணுமா வெனத்தொக்கது. (கக)

ஆக்காமே யாக்கி யளியா தளித்தெவையும்
போக்காமே போக்கிமலம் பொன்றுவித்து மொன்றுந்
தாக்காது நின்ற தனிமுதலே நீயடியேன்
வாக்காரக் கூறுமா வந்தெதிரே நின்றனையே.

(இ - ள்.) படையாமலே படைத்து, காவாமலேகாத்து, எவற்றையும் அழியாமலே யழித்து, மலசம்பந்தத்தைப் போக்கடித்தும், ஒன்றும் தொடப்படாமல் [அதீதப்பட்டு] நின்ற ஒப்பற்றமுதல்வனே! தேவரீர் அடியேன் வாயாரக்கூறும்வகையாகவெழுந்தருளி எதிரே நின்றருளினீரே. எ - று.

"ஆக்காமேயாக்கி யளியாதளித்தெவையும் போக்காமே போக்கி" என்றது, சிந்தனை மாத்திரையானே சிருஷ்டி திதி சங்காரங்களைச் செய்பவனெனக் கூறியதாம்.()

என்று திருச்சமத னேத்தெடுப்பத் தேனெழுதுங்
கொன்றை யலங்கற் குழகன் முடிதுளக்கி
யொன்று தவத்துக் குவந்தோ மினிவரங்க
ணன்று கிளத்தி நனிதருது மென்றனனால்.

(இ - ள்.) என்றிவ்வகையாகத் திருச்சமதமுனிவன் தோத்திரஞ்செய்ய, தேன் [illegible] கொன்றைமலர் மாலையணிந்த விநாயகக்கடவுள் சிரமசைத்து, பொருந்திய [illegible]ற்கு மனங்களித்தோம். இனி (வேண்டிய) வரங்களைச் சொல்லுக. மிகுதி யாகக் கொடுப்போமென்றனர். (கஉ)

[illegible] சிறந்த மகனிரோடு
[illegible] வமல னாகன் கேளாப்

பொங்குமுழுவற் புணரிப் புனையானுஞ்
செங்கை குவித்துத் திருந்தவிது கூறுவான்.

(இ - ள்.) சிங்கத்தின் முதுகிலே மேம்பட்ட (சித்திபுத்திகளென்னும்) தேவிமாருடன் அவ்விடத்திலெழுந்தருளிய மலரகிதராகிய விநாயகக்கடவுளுடையதிருவருளின் றிறத்தைக்கேட்டு, அதிகரிக்கின்ற விடாதுதொடர்ந்த அன்புக்கடலுக்குத் தெப்பமான கிருச்சமதன் செவ்வியகைகையைக்கூப்பித் திருத்தமாக இதனைச் சொல்வானாயினன். எ - று.

உழுவல் - விடாதுதொடர்தல். உழுவலன்பு என்பன வாதியிற்காண்க.
தேளா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (௪௪)

காண்டல் கருத லுரையிவற்றாற் காணுமைக்
காண்டல் கருத லுரையாலுங் கண்டேற்கு
வேண்டும் பொருளின்று மூண்டே விமலாநீ
வேண்டுகே னும்மருளைத் தள்ளாது வேண்டுகேன்.

(இ - ள்) தரிசித்தல் சிந்தித்தல் கூறுதலென்று மிவற்றாற் றரிசிக்கமுடியா தேவரீரைத் தரிசித்தலாலும் சிந்தித்தலாலும் துதித்தலாலுந் தரிசித்த அடியேனுக்கு விரும்பும் பொருள் பின்னுமொன்றுளதோ? நின்மல சொரூபியே! தேவரீரையேவேண்டுகேன. தேவரீர் திருவருளைத் தள்ளாமல் வேண்டுகேன். எ - று.

வேண்டுகேன் - இதில் கு சாரியை. வேண்டுவேனென்பது பொருள். (௪௫)

எண்பத்து நான்குநூறாயிரமா மியல்பிறப்பிற்
பண்புற்ற மானிடமாம பவமரிது மானிடத்து
மெண்பெற்ற நாலவருணத் தியைந்திடல் தரிதவற்று
ணண்புற்ற வேதியராய் நண்ணுவது மரிதாமால்

(இ - ள்) எண்பத்துநான்கு லட்சமாக வியல்கின்ற பிறவியில் அழகுபொருந்திய மானுடமாகிய பிறவி (கிடைப்பது) அரிது. மானுடப்பிறவியிலும், எண்ணுதல் பெற்ற (பிராமணாதி உத்தம) நாற்குலத்திற் பொருந்துத லரிது. அவற்றுள்ளும் யாவரும் நண்புகொண்ட வேதியராகப் பிறப்பதும் அரிதாகும். எ - று.

எண்பத்துநான்குநூறாயிரம் பிறப்பு என்றதை,

"ஊர்வ பதினொன்று மொன்பது மானுடம்
நீர்ப்பறவை நாலகாலோர் பப்பத்து—சீரிய
பந்தமாந் தேவர் பதினான் கயன்படைத்த
அந்தமில்சீர் தாவரநா லைந்து."—என்பதனானறிக.

எண்பெற்ற நால்வருணமென்றது, அநுலோம பிரதிலோம அந்தரான விராத்தியரென்று மித்திறத்தோரை விலக்கி உயர்குடியாகிய பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர வருணங்களை யுணர்த்தியதென்க. (௪௬)

அந்தணரு ளறிவுடைய ராதலரி தறிவருளுஞ்
சிந்தைதமகி ழனுட்டானஞ் செய்குநரா குவதரிது
சிந்தையமகி ழனுட்டானஞ் செய்பவருட் டுரிசிதமாம்
பந்தமறச் சிவஞானப் பற்றுடையா ரரியர்களே.

(இ - ள்.) வேதியர்களினும் அறிவுடையவராதல் அருமை. அறிவுடையவர்களினும் மனமகிழத்தக்க அநுட்டானஞ் செய்பவராதலருமை. மனமகிழத்தக்க அநுட்டானஞ்செய்பவருள்ளும் மூவகைத்தாகிய பந்தங்களறும்படி சிவஞானம் பற்றுடையவர்கள் அரியவர்கள். எ - று. (௧௭)

அத்தகைய சிவஞான மடிகடிரு வடியினுறும்
பத்தியினு வதையன்றிப் பயில்வேள்வி தவந்தான
மெத்திறத்து முயற்சியினு மெய்துவதில் லாமையினால்
வித்தகநின் மலர்ப்பதத்தில் விடாத வன்பருள்க.

(இ - ள்.) அவ்வகைப்பட்ட சிவஞானத்தைத் தேவரீர் திருவடியிற் பொருந்தும் பத்தியினு லடைவதல்லாமல், செய்கின்ற யாகம்-தவம் - தானம்-எவ்வகைமுயற்சி முதலியவற்றாலும் அடைவதில்லாததனால், ஞானசொரூபியே! தேவரீருடைய தாமரைமலர்போன்ற திருவடியில் அழியாத அன்பினை அடியேனுக்கு அருள்புரியவேண்டும். எ - று.

திருவடிப்பத்தியினாலேயே சிவஞானம் வருமன்றி யாகமுதலிய பலமுயற்சியானும் அஃதெய்தாதென்பார் "சிவஞானம் * * * எத்திறத்து முயற்சியினு மெய்துவதில்லாமையினால்" என்றார். (௧௮)

எம்பெருமா னித்தலத்தி லெழுந்தருளி யெஞ்ஞான்று
மும்பர்முத லனைவோர்க்கு முவப்பவரம் வழங்கிடுக
நம்பியபுட் பகவனமும் புட்பகமா நகருமெனா
விம்பரினிவ் வனத்தனக்கு மிந்நகர்க்கும் பெயருறுக.

(இ - ள்.) எம்பெருமானே! தேவரீர் எக்காலமும் இவ்விடத்திலெழுந்தருளியிருந்து தேவர்முதலிய வெல்லோருக்குங் களிப்பெய்த (வேண்டிய) வரங்களை (வேண்டியவகையே) கொடுத்தருள் புரிக மேன்மைதங்கிய புட்பகவனமும் சிறந்த புட்பகநகருமென்று இவ்வுலகத்தில் இவ்வனத்திற்கும் இந்நகரத்திற்கும் (இதுமுதல்) பெயருண்டாகுக. எ - று. (௧௯)

தேவர்முனி வரரசுரர் சித்தர்கள்சாத் தியர்முதலா
யாவர்களு மென்வழியி னெனதாணை கடவாமை
மேவுவதும் வேண்டுமென விழைந்திரப்பப் பொன்ஞாழற்
பூவலங்கன் மணிமார்பிற் புண்ணியன்மற் றிதுபகரும்.

(இ - ள்) தேவர்கள் முனிவர்கள் அசுரர்கள் சித்தர்கள் சாத்தியர்கள்முதலிய வெவர்களும், என்வழியில் என்கட்டளையைக் கடவாமற்பொருந்துவதும் வேண்டுமென்று விரும்பி யாசிக்க, பொற்கொன்றைமலர்மாலையாகவணிந்த அழகிய மார்பையுடைய புண்ணிய சொரூபியாகிய கணேசப்பெருமான் இவ்விதஞ்சொல்கின்றனர். எ-று.

ஞாழல் - குங்குமமலர்க்குங் கொன்றை மலர்க்கும் பெயராயிருப்பினும் பொன்ஞாழலென்றதனால், பொற்கொன்றை யென்றும். இது சரக்கொன்றை. (௨0)

கிக்கிரே தாயுகத்தி னிந்நகரும் புட்பகமா
மிக்கதிரே தாயுகத்தில் விளங்குமணி பூரகமாந்
தொக்கதுவா பரயுகத்திற் றுரிசகற்றும் பானகமாம்
பக்கவெழிற் கலியுகத்திற் பத்திரக மாகுமால்.

(இ - ள்.) இத்தக் கிரேதாயுகத்தில் இந்நகரமானது புட்பகநகரமாம். மேம்பட்ட திரேதாயுகத்தில் விளங்குகின்ற மணிபூரகநகரமாம். நெருங்கிய துவாபரயுகத்தில் குற்றமொழிக்கும் பாணநகரமாம். குறைந்த அழகுடைய கலியுகத்தில் பத்திரநகரமாம். எ - று. (௨௧)

கற்றவர் விழைதருவேலா நவகினமுன் பாற்சிறுவ
னற்றமிலா திருவலியோ டரனொருவா ளியினனறி
மற்றையரா லழியாத வரத்தினனாய் நமதடியன்
புற்றவனா யொருவனுறு மோங்குநம திண்ணருளால்.

(இ - ள்) நல்ல தவத்தையுடைய கிருச்சமதமுனிவனே! நீ விரும்பியவற்றை யெல்லாங் கொடுத்தோம். உன்னிடத்திலேயொருசிறுவன் அற்றமில்லாதபெருவலியுடன், சிவபெருமானுடைய ஒப்பாணைத்தாலல்லாமற் பிறரால் அழியாத வரமுடையவனாய், நம்முடைய திருவடிப் பத்தியுடையவனாய், நமது மிக்க இனிய திருவருளால் ஒப்பற்றவனாகப் பிறப்பான் எ - று.

அற்றம் - துன்பம் - ஆற்றலியாவலி யென்பதற்கு மிக்க வலியெனக். (௨௨)

வேறு

பெருந்திறன் மகனு மாதப் பெலியினு நினைந்த கீர்த்தி
யிருந்தமூ வுலகத் துண்டாந் திருச்சமத முனிவ நம்மைப்
பொருந்துகா ரியங்க டம்மின் முந்துற நினைந்து பூசி
வருந்துத லின்றி வேட்ட வரமெலாம் பெறுவை மாதோ.

(இ - ள்) மிக்க வலியமைந்த துந்தப்பெலியென்னும் உன்மகனைக் காட்டிலும் உனக்குக் கீர்த்தியானது திருத்தமுற்ற திரிலோகங்களிலு முண்டாகும். சிறப்பமைந்த கிருச்சமதமுனிவனே! பொருந்திய காரியங்களெல்லாம் நம்மை முதலிலே தியானித்துப் பூசைபுரிந்து வருத்தமில்லாமல் விரும்பியவரங்களையெல்லாம் பெறுவாய் எ-று.

காரியாரம்பத்திலேயே கணபதி பூசைசெய்வோர் நிர்விக்கினமாக அதனை முடித்துப் பலனுறுவராதலின் "நம்மைப் பொருந்து காரியங்கடம்மின் முந்துற நினைந்து பூசி - வருந்தலின்றி வேட்டவரமெலாம் பெறுவை" என்றார். (௨௩)

நினைத்தெமைப் பூசை யாவர் நிகழ்த்திடினு மவர்க்குப் பொல்லா
வினைத்தொடர் பனைத்து நீங்கி விழுத்தவ நினைந்த நன்மை
யனைத்தையு மெளிதின் வல்லே யடைகுவ ரமைத்தொழாரே
லனைத்துள விடரும் பொல்லா வினைகளு மெய்து வாரே.

(இ - ள்) சிறந்த தவத்தையுடையவனே! எம்மை எவர்கள் கருதிப் பூசை செய்தாலும், அவர்கள் தங்கட்குவரும் பொல்லாவினைத் தொடர்ச்சிமுழுவதையுமொழித்து நினைந்த நன்மைமுழுவதையும் இலேசாகவே விரைவிலடைவார்கள். எம்மைப் பணியார்களாகில், உள்ளனவாகிய எல்லாத் துன்பங்களையும் பொல்லாத வினைகளையும் அடைவார்கள் எ - று.

வல்லே - விரைவுகுறிக்கும் இடைச்சொல். (௨௪)

அருமறை யளந்துங் காணு வமலனா ரருளுக் கொல்கி
யிருவினை மலங்கண் மூன்று மிரித்தவ ரூனக் கோயின

மருவுவான் மறைந்து பெயர்ந்தார் வரம்பெறு முனிவ னங்கோர்
குருமணிக் கோயி லொன்று குயிற்றியக் கோயி லுள்ளால்

(இ - ள்.) அரியவேதங்கள் அளவிட்டுங் காணமுடியாத நின்மலராகிய கணேசப்பெருமான் (இவ்வகையாக) வரங்கள்கொடுத்து, இருவினையையு மும்மலங்களையு மொழித்த பரம பத்தர்களுடைய இதயாலயத்தை யடையும்படி அந்தர்த்தானமாயினர். வரங்களைப்பெற்ற கிருச்சமதமுனிவன் அங்கே ஒப்பற்ற நிறமமைந்த மணிகளாற் செய்த திருக்கோயிலொன்று செய்வித்து, அத்திருக்கோயிலினுள்ளே. எ - று.(௨௫)

வேறு.

சரதமலி பத்தியினுற் சார்ந்தவருள் ளகவரங்கிற்
பரதமிகப் புரிவானைப் பரானந்த பூரணனை
வரதகண பதியென்று வைத்தொருதீர்த் தமுந்தொட்டு
விரதமொடப் புனலாட்டி மேதகப்பூ சித்திருந்தான்.

(இ - ள்.) உண்மைமிக்க பத்தியுடன் பொருந்தியவர்களுடைய மனமாகிய சபையிலே, நடனத்தை மிகுதியாகச் செய்பவனும் பரானந்த பூரணனுமாகியகணேசப் பெருமானை வரதகணபதி யென்று திருநாமமிட்டுப் பிரதிட்டைசெய்து, (அங்கே) ஒரு தீர்த்தமுமெடுத்து விரதத்துடன் அந்நீரா லபிடேகித்து மேம்பாடுறப் பூசைசெய்திருந்தனன். எ - று. (௨௬)

வேறு.

கணேசர் மேனியி லாட்டமக் காமரு தீர்த்தங்
கணேச தீர்த்தமென் றொருபெயர் கலந்ததந் நகருங்
கணேசர் பேரரு ளாற்கலந் திருந்தகா ரணத்தாற்
கணேச மாநக ரெனும்பெயர் கதுவிய தம்மா.

(இ - ள்.) கணேசப்பெருமானுடைய திருமேனியிலாட்டிய அந்த அழகிய தீர்த்தமானது கணேச தீர்த்தமென்று ஒருபெயரைப்பெற்றது. அந்த நகரமும் கணேசப்பெருமானுடைய பேரருளோடு கூடியிருந்த காரணத்தினால், சிறந்த கணேசநகரமென்னும் பெயரை யடைந்தது. எ - று.

அம்மா - வியப்பிடைச்சொல். (௨௭)

சித்தி யாவையும் யாவர்க்குஞ் செறித்திடுந் திறத்தாற்
சித்தி மாநக ரென்னவுஞ் சிறந்ததந் நகருஞ்
சித்தர் மாதவர் தேவர்கண் முதலியோர் தம்முட்
சித்தி மேவின ரளவிலர் சிறந்தவந் நகரில்.

(இ - ள்.) எல்லாச் சித்திகளையும் எல்லோருக்கும் மிகுதியாகக் கொடுக்கும் ஆற்றலால், அந்நகரமானது சிறந்த சித்திநகரமென்றுஞ் சிறப்புற்றது. சித்தர்கள் பெருந்தவசிகள் தேவர்கள் முதலானவர்களில் அந்நகரத்திலே (தமது இஷ்ட) சித்திகளை யடைந்தவர்கள் எண்ணிறந்தவர்கள். எ - று. (௨௮)

கவியு யிர்த்தருள் காமரு கிருச்சம தன்முன்
புவியி யத்தகப் புகர்முகக் களிற்றிறை யருளா

[illegible]

(இ-ள்.) கவிமுனிவர் பெற்றருளிய அழகிய இருச்சமதமுனிவன் முன்னே உவகையானது வளிப்பெய்தத்தக்க, புள்ளிகள் வாய்ந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் திருவருளால், பிரகாசிக்கின்ற வரம்பெற்ற வகையிதுவாகும். படைத்த [illegible] வலிமையினின்று நீங்கிய வியாதமுனிவனே ! என்று நான்குமுகங்களையுடைய பிரமதேவன் கூறினான். எ-று

சேம காந்தனே தூத்தகு கவிமகன் பெற்ற
சேம வான்வர மறிந்தனை யினியவன் சிறுவன்
வாம மாவொரு மருப்பினன் மந்திரங் கணித்த
தேம மார்தர வறிதியென் றியம்புவன் பிருகு.

(இ-ள்.) சோமகாந்த ராசனே ! தக்க புனிதமான கவிமுனிவர் மகனான இருச்சமதமுனிவன் பெற்ற சேமமாகிய சிறந்த வரத்தை யுணர்ந்தனை. இனி அவன் மகனாகிய பெலி அழகுபொருந்திய ஏகதந்தராகிய கணேசப்பெருமானுடைய திருமந்திரத்தைக் கணித்தவகையை அழகுபொருந்த உணரக்கடவையென்று பிருகு முனிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (௧0)

இருச்சமதர் வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - க௯௪௪

# திரிபுரன் வரம்பெறுபடலம்.

கருவி முகிலக ணிரைநிரையாய்க் கவிழ்த்த நெடிய தடஞ்சிலம்பி
னருவி யெனமும் மதமபொழியு மானை முகவ னருள்வரத்தாற்
பொருவி லமரர் முனிவரெலாம போந்து வணங்கிப் பணிபுரிய
மருவு மவிவேள் விக்கிறையாய் வதிந்தா னந்த இருச்சமதன்.

(இ-ள்.) (உலகுக்கு) காரணபூதமான மேகங்கள் வரிசைவரிசையாக(நீரை)க் கவிழ்த்த நீண்ட விசாலமான மலையில், அருவியாறுபோல மும்மதங்களைச் சிந்தும் யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள அருள்புரிந்த வரத்தினால், அத்தகைய இருச்சமதமுனிவனை ஒப்பில்லாத தேவர்களுமுனிவர்களும யாவரும வந்து பணிந்து ஏவல் செய்ய, அவிபொருந்திய யாகத்திற்குத் தலைவனாய் வசித்தனன். எ-று. (௧)

மடங்க லுகைக்குங் களிற்றுமுக வரதன் பாத மலர்த்துணையின்
முடங்கு மதுகாற் சுரும்பினங்கண் மூரலும் பவிமென் [illegible]
முடங்கை கொடுபூசித்தவன்மெய்க் கோல மனைவி [illegible]
மடங்கத் தலஞ்செய் பலவெருநா ளமர்ந்தா னரிய [illegible]

(இ-ள்.) சிங்கத்தை வாகனமாகச்செலுத்தும் யானைமுகத்தையுடைய [illegible] விநாயகக்கடவுளுடைய உபயபாதத்தாமரைகளில் [illegible]
[illegible]

என்வலிமையைப் பின்னறியக்கடவாய்' எனக்கூற, பெரிய கிருச்சமதமுனிவன் தன் மன நடுங்கியதை மறைத்து மகனாகிய பலிக்கு இதனைச் சொல்லுவான். எ - று.

உள் - மனம். இஃதிடவாகுபெயர். (௭)

ஆதி யந்த நடுவின்றி யகண்டா கார மாயொன்றாஞ்
சோதி யான விநாயகர்தந் தொன்மை மனுநா னென்ஞான்று
நீதி யாகக் கணித்துவரு நிகரி லதனை யுரைசெய்வேன்
றீதி லாது கணியுனக்குச் சித்தி யனைத்தும் வருமென்று.

(இ - ள்.) முதலும் இடையுங் கடையுமில்லாமல், அகண்டாகாரமாய் ஒன்றாகிய சோதிசொரூபரான விநாயகப்பெருமானுடைய பழைமையான மந்திரம் நான் எக்காலமும் நீதியோடு கணித்துவருகின்ற ஒப்பில்லாதது. அதனை உனக்குக் கூறுவேன். குற்றமில்லாமற் கணிப்பாயாக. உனக்கு எல்லாச்சித்திகளும் வருமென்று. எ - று.

தந்தை தானே மகனாகிச் சாரு மென்னு முறையானு
மெந்தை பெருமா னருள்செய்த வியலபி னானுங் கிருச்சமதன்
மைந்தன் றனக்குக் கனனாங்நுவா வென்னு மனுவை யுபதேசித்
தந்த மறை நூல் விதியானே யனுட்டிப் பனைத்தும் புகன்றெழித்தான்.

(இ - ள்.) தந்தையே மைந்தனாகி வருவானென்னும் முறைமையாலும், எந்தையாகிய கணேசப்பெருமான் அனுக்கிரகித்த வியல்பினாலும், கிருசசமத முனிவன் தன் மகனாகிய பலியென்பவனுக்கு "கனனாங்நுவா" என்னுமந்திரத்தை யுபதேசஞ்செய்து அழகிய வேதநூல் விதிப்படி (அதனுடைய) அனுட்டிப்புமுதலிய வெவற்றையுங்கூறி விடுத்தனன். எ - று.

கனனாங்நுவா வென்னுமந்திரம் ஆதியிற் கவிமுனிவரால் தனக்கு உபதேசிக்கப்பட்டிருந்தது. அதனையே கிருச்சமதமுனிவன் மைந்தனுக்குரைத்தனன். (௮)

நீற்று மேனிக் கிருச்சமத னெடிய மலர்த்தாள் பணிந்தேத்தி
யாற்றல் சான்ற பலியென்பா னங்கோர் பாங்கா தந்தையைப்போற்
போற்றி யொருதா ணிலத்தூன்றிப் பொறிக ளடக்கி யுணவாதி
மாற்றித் தவஞ்செய் தனன்வருடம் பதினா யிரத்தோ டதிற்பாதி.

(இ - ள்) வலிமைமிகுந்த பலியென்பவன், அவ்விடத்தோர் பக்கலில், திருவெண்ணீற்றையணிந்த உடலையுடைய கிருச்சமதமுனிவனுடைய நெடியமலர்போன்ற திருவடியைப்பணிந்து துதிசெய்து தன்பிதாவைப்போல, துதித்து ஒருபாதத்தை நிலத்திலூன்றி ஐம்பொறிகளையடக்கி ஆகாரமுதலியவற்றை விலக்கிப் பதினையாயிர வருடகாலந் தவஞ்செய்தனன். எ - று.

நீற்றுமேனி யென்பதற்குத் திருநீறணிந்த திருமேனியெனினுமாம். ()

கொடிய தவத்தி னெழுந்தகனற் கொழுந்து பரந்து மிகச்சுடலு
நெடிய விசும்பி னமரரெலா நெடிது நடுங்கி முறையிட்டார்
படியில் கருணை விநாயகனார் பரிந்து பலனுக் கருள்கொடுப்ப
வடியற் கதிரா யிரகோடி விரவி யென்முன் றோன்றினார்.

(இ - ள்) தீக்கொழுந்தானது (அவன்செய்யுங்) கொடிய தவத்தினின்றெழுந்து (எங்கும்) பரவி மிகவுஞ் சுடுதலும், பெரிய ஆகாயத்திலுள்ள தேவர்கள் யாவரும்

மிகவும் மனநொந்து முறையிட்டார்கள். எல்லையில்லாத கிருபாமூர்த்தியாகிய விநாயகக் கடவுள் மனமிரங்கித் தவப்பலனுக் கருள்புரியும்படி, விடியற்காலத் துதிக்கும் ஆயிரங்கோடி சூரியரொன்றுகூடி வந்தாற்போல (பலியின்முன்னே) காட்சிதந்தருளினர். எ - று. (௧௦)

அழல்கொப் புளிக்குங் கதிர்ப்பரிதி யமரன் விழியு மொளிமழுங்கக்
கழல்கொப் புளிக்கும் பேரரவக் காமர் மலர்த்தாள் விநாயகனார்
நிழல்கொப் புளிக்குந் திருமேனி நிகழ்ந்து பரந்த வொளிக்கஞ்சான்
றழல்கொப் புளிக்குங் கொடுந்தவத்துத் தகைசால் பலிகண் மலர்த்தினான்.

(இ - ள்.) தீயைச்சொரியுங் கிரணங்களையுடைய சூரியபகவான் கண்களும் ஒளிமழுங்கும்படி, வீரக்கழலானது சிந்துகின்ற பேரொலியையுடைய அழகிய தாமரை மலர்போன்ற பாதங்களையுடைய விநாயகக்குரிசில், நிழலைவீசுந் திருமேனியினின்று விளங்கிப்பரவிய ஒளிப்பிழம்புக்கு அஞ்சாமல், தீயைச் சிந்துங்கொடுந் தவத்தைச் செய்த தகுதிசான்ற கிருச்சமதமுனிவன் கண்ணைத் திறந்துபார்த்தனன். எ - று.

பரிதியமரன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

அஞ்சான் - எதிர்மறைக் குறிப்புவினை யெச்சம். (௧௧)

திணிச்சித் திரத்தோ ளொருநான்குஞ் செந்தா மரையுங் கழுமுள்ளுங்
கணிச்சிப் படையு மோதகமுங் கணேச னுருவ முழுவதும்பார்த்
தணிச்சித் திரம்போ னின்றபலி யற்ற மரம்போ லெதிர்வீழ்ந்து
பணிச்சித் திரநா கத்தொடையாய் பரமா வருளென் றுரைசெய்வான்.

(இ - ள்.) வலிமைவாய்ந்த அழகிய ஒப்பற்ற நான்கு திருத்தோள்களும், செந்தாமரைமலரும், கழுமுள்ளும், மழுப்படையும், மோதகமும், கணேசப்பெருமானுடைய திருவுருவமுழுவதுந் தரிசித்து, அழகிய சித்திரப்பதுமைபோல (அசைவற்று) நின்ற பலியென்பவன், அடியற்ற மரம்போலத் திருமுன்னே பணிந்து மாலாபரணமாக அழகிய நாகத்தை யணிந்த பரமனே! அருள்புரிகவென்று. எ - று.

கழுமுள்=சூலாயுதம். மோதகம் = உருண்டை. பரமன்=சிரேட்டன். (௧௨)

இமைக்கு மளவிற் பேரண்ட மனைத்தும் புருவச் சிறுநெறிப்பாற்
குமைக்கும் பெருமா னடியேன்பாற் கோப மின்றிப் பெருங்கருணை
யமைக்க வேண்டு மதுவன்றி யடியேன் பிழைத்த குறையினுங்
கமைக்க வேண்டு மெனவிரந்தான் கணேசர் கருணை கூர்ந்தருள்வார்.

(இ - ள்.) கண்ணிமைக்குமுன்னே பெரிய அண்டங்களையெல்லாம் புருவத்தின் சிறிய நெறிப்பினால் அழிக்கின்ற ஐங்கரக்குரிசிலே! அடியேனிடத்திற் கோபமில்லாமல் மிக்க கிருபைசெய்தருளல்வேண்டும் அதுவல்லாமல், அடியேன் தவறுற்றேனாலுந் தேவரீர் பொறுத்தருளல் வேண்டுமென்று யாசித்தான். கணேசப் பெருமான் கிருபைமிகுந்து திருவாய்மலர்ந்தருளுவர். எ - று.

கமைத்தல் - க்ஷமித்தலென்னும் வடமொழிச்சிதைவு. (௧௩)

தண்டா மரைக்க ணமரிருவர் தம்மாற் றழற்க ணுருத்திரனாற்
பண்டா ரணத்தா லளந்தறியப் படாத வொருநாம் பேரன்பு

கொண்டீர்த் திடநீ புரிந்ததவக் கோலினைக் கயிற்று லிறுகுறக்கட்
டுண்டெங் கடுத்தாம் வரங்கேளென் றுரைப்பப் பலியும் வரங்கொள்வான்.

(இ - ள்.) தண்ணிய தாமரைமலர்போன்ற கண்களும், தண்ணியதாமரை மலரிருக்கையும் பொருந்திய (திருமால் பிரமனென்னும்) இருவராலும், தீ விழியை யுடைய உருத்திரனாலும், பழமையாகிய வேதத்தினாலும் அளவிட்டுணரப்படாத வொப்பற்ற நாம், பெரிய அன்பைக்கொண்டீர்க்க, நீ செய்த தவமாகிய வலியகயிற்றால் இறுகுறக்கட்டுண்டு எங்குவந்தனம். வரங்கேட்கவெனக்கூற, பலியும் வரங்கொள்வானாயினன். எ - று.

தண்டாமரைக்கணமரிருவரென்றதை, 'தண் தாமரையாகிய கண் அமர் விண்டு" என்றும், "தண் தாமரைக்கண் அமரும் பிரமன்" என்றும் சொல்வகை செய்க. இரண்டாவதில், கண் - ஏழனுருபு. (௧௪)

மருள்கால் வினைகள் கால்சீத்து வளாமெய்ஞ் ஞானப் பேரொளியே
யருள்கா ணினது திருமேனி யலங்கு மொளியி னிரேணுவினு
விருள்கால் சீத்து வையகத்தி லிலகா நின்றார் மழையாதிப்
பொருள்கால் பரிதி மதியங்கி யெனப்பேர் பூண்ட புலவர்களே.

(இ - ள்) மயக்கத்தைச் செய்யும் வினைகளை யடியோடகளைந்து வளர்கின்ற உண்மைஞான மயமாகிய பேரொளியே! தேவரீருடைய திருமேனி அருள்வடிவே யாம். விளங்குகின்ற அவ்வொளியின் அணுவொன்றால், மழைமுதலிய பொருள்களும் வாயுவும் சூரியனும் சந்திரனும் அக்கினியுமெனப் பேர்கொண்ட தேவர்கள் இருளையடியோடொழித்துப் பூமியில் விளங்குகின்றார்கள். எ - று.

மழையாதிப் பொருள்கால் என்றதற்கு மழைமுதலிய பொருள்களைத்தரும் எனப் பொருளுரைப்பினுமமையும். (௧௫)

வரையாப் பெருமைப் புகழோயிவ் வையமுழுது மற்றனைத்து
விரையாக் கவியா நடக்கின்ற தன்றோ வேத சாத்திரமு
முரையா நின்ற வுலகனைத்து முனது சொரூப மெனவந்த
வரையா நினது தெரிசனமே யனைத்து வரமு மடியேற்கே.

(இ - ள்.) அளவிடப்படாத பெருமையுங் கீர்த்தியுமுடைய கடவுளே! இவ்வுலகமுழுவதுந் தேவரீரது கட்டளையால் நடக்கின்றதல்லவா? வேதசாஸ்திரங்களும் சொல்லுகின்ற வெல்லாவுலகங்களும் தேவரீரது சொரூபமென வந்த எல்லையாம். தேவரீருடைய தெரிசனமே அடியேனுக்கு எல்லாவரங்களுமாம். எ - று. (௧௬)

மூவா முதல்வன் றிருக்காட்சி முகிழ்த்த கருணை யால்யானே
தாவாப் பெரும்பே றுடையேனென் றாதை யவனும் பேறுடையா
னோவாத் தவமும் பயன்பட்ட தொன்று மறியாச் சிறியேனிங்
கர்வா நின்சீர் யாதறிந்திட் டறைகே னறைய மாட்டேனே.

(இ - ள்) அழியாத முதல்வராகிய தேவரீருடைய திருக்காட்சியாகிய அரும்பிய கிருபையால் அடியேனே கெடாத பெரும்பாக்கியமுடையவனாயினேன். என் பிதாவாகிய கிருச்சமதமுனிவனும் பாக்கியமுடையவனாயினான், (என்னுடைய) கெடாத தவமும் பிரயோசனப்பட்டது. யாதுமுணராத சிறியேன் இப்பொழுது

தேவரீருடைய சிறப்பை யாதுணர்ந்து கூறுவேன். ஆ! ஆ! (ஒன்றும்) கூறமாட்டேன். எ - று.

ஒன்று என்பது சிறுமையைக் குறிக்கவந்தது. (௧௭)

மெய்யா வெனக்கு வரந்தருதன் மெய்யே யாலுன் மூன்றுலகும்
பொய்யா தெனக்கு வசமாகப் புணர்க வலாரி முதற்றேவர்
கையாப் புடைய மரபினராய்க் கடைகாத் தடியே னிடுமேவ
லையா தாற்றிச் செவிகளுக்கு நவைதீர் கொற்ற மெய்துறுக.

(இ - ள்.) உண்மையானவனே! அடியேனுக்கு வரதத்தைத் தருதலுண்மையேயாயின் மூவுலகங்களும் உண்மையாக எனக்கு வசமாகப் பொருந்துக. வலாரியாகிய இந்திரன்முதலிய தேவர்கள் கையைக்கட்டிக் கொள்ளுதலுடைய மரபின்வழி வருபவர்களாய், கடைவாயிலிற் காத்திருந்து, அடியேன் கொடுக்குங்கட்டளையைக் கெடாமற் செய்து காதுக்குக் குற்றமொழிந்தவெற்றி என்னையடைக எ - று. (௧௮)

எந்தப் பொருளை யெந்தெந்த வேலை யெளியேன் விழைந்தாலு
மந்தப் பொருளை யந்தந்த வமயத் தெளியேற் கெளிதுறுக
சந்தப் பதும மலர்புரைநின் றாளி லன்பு மிகவுறுக
பந்தப் பவமகிட் டந்தத்திற் பரநா லுறுக வெனவிரந்தான்.

(இ - ள்.) எந்தப்பொருளை யெவ்வெக்காலங்களில் அடியேன் விரும்பினாலும், அந்தப்பொருளே அவ்வச்சமயங்களில் அடியேனுக்கு இலேசாகப் பொருந்துக. அழகிய தாமரைமலரையொத்த தேவரீருடைய திருவடியில் மிகுதியும் அன்புண்டாகுக. இறுதியில், பந்தமாகிய பிறவியையொழித்து அடியேன் பரகதியையடைவேனென்று யாசித்தனன் எ - று. (௧௯)

ஆரா வமுதா யடியினையா மடியா ருள்ளத் தல்லூறும்
பேரா னந்தப் பெருக்கான பெரிய பெருமா னருள்செய்வார்
வாராய் சிறுவா நீவிழைந்த வரங்கள் கொடுத்தா நினதேவ
றீரா தியற்றி மூவுலகுஞ் சேவை புரியு மெஞ்ஞான்றும்.

(இ - ள்.) ஆராவமுதமாய், திருவடியைத் தியானஞ்செய்யும் அடியவர் மனத்தில் ஊற்றெடுக்கின்ற பேரானந்த வெள்ளமும் பெரிய பெருமானுமாகிய கணேசப்பெருமான் அருள்புரிவார்: சிறுவா! வருவாயாக. நீ விரும்பிய வரங்களைக் கொடுத்தோம். மூவுலகினரும் உன் கட்டளையை நீங்காமற்செய்து எக்காலமும் உன்னைச் சேவை செய்வர். எ - று.

ஆராவமுது - தெவிட்டாவமுதம்.

மூவுலகும் என்றதற்கேற்பச் சேவைபுரியுமென அஃறிணை முடிபுதந்தனர்.

இரும்பு வெள்ளி யிரணியத்தா லியன்ற மூன்று புரமுனக்கு
விரும்பிக் கொடுத்தா மவற்றினுக்கு விளம்பு நாமந் திரிபுரமே
யரும்பு புகழோய்க் குலகனைத்து மிறையு நாமந் திரிபுரனே
கரும்பு மொழிய விழிக்கவனேர் கணையா லன்றி யழியாவே.

(இ - ள்.) இரும்பினாலும் வெள்ளியினாலும் பொன்னினாலும் அமைந்த மூன்றுபுரங்களை உனக்கு விருப்புற்றுக் கொடுத்தோம். அப்புரங்கட்குச் சொல்லுகின்ற

பெயருந் திரிபுரமென்பதேயாம். அரும்பிய கீர்த்தியையுடைய உனக்கு உலகமுழுவதுஞ் சொல்லும் பெயருந் திரிபுரனென்பதேயாம். மன்மதனை யெரியும்படி விழித்தருளிய சிவபெருமானுடைய ஒப்பற்ற கணையாலல்லாமல் அவை (வேறொருவராலும் எவ்வகையிலும்) அழியமாட்டா. எ - று.

திரிபுரன் - மூன்று நகரங்களையுடையவன்.

கரும்பன் - கருப்புவில்லை யேந்தியவன் ; மன்மதன். (உக)

நினைத்த விடத்திற் றிரிபுரமு நினக்கு முன்னஞ் செலும்வண்டு
கனைத்து மதுவுண் டெதிரெடுக்குங் கடுக்கைச் சடையா னொருகணையா
லனைத்து மழிக்கு மஞ்ஞான்றே யழியா முத்தி யுறுவையென
வனைத்து மருளி யேரம்ப னிம்மென் றாங்கு மறைந்தனனால்

(இ - ள்.) கருதுமுன்னரே நீ கருதியவிடத்திற்குத் திரிபுரங்களுஞ் செல்லும். வண்டுகளொலித்துத் தேனைப்பருகிச் சுமட்டுகின்ற கொன்றமாலையணிந்த சிவபெருமான் ஒரேகணையால் அவையெல்லாவற்றையுமழிக்கும் அப்பொழுதே அழியாத மோட்சத்தை யடைவையென்று எல்லாவற்றையும் அருளிச்செய்து விநாயகக்கடவுள் விரைந்து அந்தர்த்தானமாயினர். எ - று

தேவர்களணிந்த மலர்மாலைகள் வாடாமையும், அவற்றில் வண்டுகள் மொய்யாமையுமாகிய இயற்கையுடையனவாகவும், "வண்டுகனைத்து மதுவுண்டெதிரெடுக்குங்கடுக்கை" என்றது உலகிலுள்ள கொன்றைமலர்கட்குரிய இயற்கையை யுணர்த்திய விசேஷணமென்க. (உஉ)

பமர மடுக்குங் கரடமதப் பனைக்கைம் முகவ னருள்வரங்கேட்
டமரா நடுங்கிப் பெருங்கவலை யாழி படிந்தார் திரிபுரனும்
விமல தவத்துக் கிருச்சமதன் விரைத்தா ளிறைஞ்சிப் பேறுரைத்துச்
சமரிற் கிளருங் கருத்தினொடு தங்கி னான்புட் பகனத்தில்.

(இ - ள்.) வண்டுகள் மொய்க்குங் கன்னமதத்தையும் பனையைப்போன்ற துதிக்கையையுமுடைய யானைமுகக்கடவுள் அருள்புரிந்த வரத்தைத் தேவர்கள் கேட்டுப்பயந்து பெரிய துன்பக்கடலில் மூழ்கினார்கள். திரிபுரனும் புனிதமான தவத்தையுடைய கிருச்சமதமுனிவனுடைய வாசந்தங்கிய (தாமரைபோன்ற) திருவடியைப் பணிந்து (தான்பெற்ற) பேற்றைக்கூறி, போரில் விளங்கும் எண்ணத்துடன் புட்பகவனத்திலே பொருந்தினான். எ - று.

ஆழி - ஆழமுடையது ; வட்டமாயுள்ளது ; கடல். (உ௩)

புள்ளூ றறியா விதழ்பரந்து பொகுட்டு வாய்ந்த தெய்வமணக்
கள்ளூ றியதா மரைக்கடவுள் கணேசர் கமலத் தாண்மலர்த்தே
னள்ளூ றுளத்து வியாதமுனி னறவாய் பலியை திரிபுரனுத்
தெள்ளூ றியமெய் வரம்பெற்ற செய்தி யிதுவா மெனப்புகன்றான்.

(இ - ள்.) பறவைகளின் துன்பமறியாத இதழ்கள்பரந்து, பொகுட்டமைந்த தெய்வமணம்பொருந்திய தேன்சிந்திய தாமரைமலரிலெழுந்தருளிய பிரமதேவன், கணேசப்பெருமானுடைய பாததாமரையின் தேனாகிய ஊற்றெடுக்கும் உள்ளத்தையுடைய வியாதமுனிவனே! பலியென்பவனே திரிபுரனாகத் தெளிவமைந்த உண்மையாகிய வரத்தைபெற்ற செய்தி இஃதாகுமெனக்கூறினன். எ - று. (உ௪)

அன்று பலிமா தவமாற்றி யமலனருள்சேர் புட்பகத்தை
யின்று புவியோர் வங்காள மென்ப ரவன்கொள் வரமுறைப்ப
நன்று தெரிந்தா யினிச்சோம காந்த வென்கோ னடத்தியது
மன்ற வறிவா யெனக்கிளப்பான் மறுவில் பிருகு மாதவனே.

(இ - ள்.) சோமகாந்தராசனே! அக்காலத்திலே, பலியென்பவன், பெருந்தவஞ்செய்து கணேசப்பெருமானுடைய திருவருளையடைந்த புட்பகவனத்தையே, இக்காலத்தில் உலகினர் வங்காளமெனக் கூறுகிற்பர். அவன்பெற்ற வரத்தை (யான்) சொல்ல நன்குணர்ந்தனை. இனி அத்திரிபுரன் அரசுபுரிந்ததையும் பொருந்த வுணர்வாயென்று பெருந்தவசியாகிய பிருகுமுனிவர் சொல்வாராயினர். எ - று. (உ௪)

திரிபுரன் வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆகந் திருவிருத்தம் - கக௲எ௰.

---

# திரிபுரனரசாட்சிப்படலம்.

அரியுகைத் தருளு நால்வா யைங்கையா றனைய தானைக்
கரிமுகன் கருணை பெற்றுக் களித்தபி னாற்றல் சான்ற
திரிபுரன் யாது செய்தான் செப்பென வியாதன் கேட்பப்
பெரியகுண் டிகைசே ரங்கைப் பிரமன்பே சுனைக்கப் புக்கான்.

(இ - ள்.) வல்லமைமிக்க திரிபுரன், சிங்கவாகனத்தைச் செலுத்தியருளும் தொங்கிய வாயையும் ஐந்துகரங்களையும் ஆறுபோன்ற மதப்பெருக்கையுமுடைய யானைமுக விநாயகக்கடவுள் கிருபையைப்பெற்று மகிழ்ந்தபிறகு யாது புரிந்தனன்? சொல்லவேண்டுமென வியாதமுனிவன் வினவ, பெரிய கமண்டலம்பொருந்திய அழகிய கையையுடைய பிரமதேவன் சொல்லத்தொடங்கினன். எ - று. (க)

கண்டவர் வியக்கு மந்தக் கணேசமா புரத்தி லன்னோன்
கண்டகச் சிலையாற் கோயில் கண்டலங் கரித்துக் கண்ணுற்
கண்டதெவ் வண்ண மந்த வண்ணமே கணேச மூர்த்தி
கண்டகச் சிலையாற் செய்து காதலாற் பதிட்டை செய்தான்.

(இ - ள்.) கண்டவர்கள் களிக்கத்தக்க அந்தச் சிறந்த கணேசபுரத்திலே, அந்தப் பலியென்பவன், வயிரக்கற்களால் திருக்கோயிலமைத்து அழகுசெய்து, தான் கண்ணுற்றறிசித்த தெவ்வண்ணமோ அவ்வண்ணமே கணேசப்பெருமானை வயிரக் கல்லாற்செய்து ஆசையோடு அவ்வாலயத்திற் பிரதிட்டைசெய்தனன். எ - று. (உ)

கண்டகம் - வயிரம்.

நித்தலும் பூசை யாற்றிச் சிலபக னீங்கிப் பின்னர்ப்
பைத்தவா ருதிசூழ் மண்ணிற் பார்த்திபர் தம்மோ டேற்றுப்
பத்தியி னிறைஞ்சி னூர்க்குப் பணிகொடுத் திறைஞ்சா தாரைச்
செற்றுவேந் தாகி னேமி விண்கொளச் செலுத்தி னானே.

(இ - ள்.) நாடோறும் பூசைசெய்து சிலதினங்கள் கழிந்தபிறகு, பசியகடல் சூழ்ந்த பூமியில் அரசர்களோ டெதிர்த்துப் பக்தியோடு பணிந்தவர்களுக்குப் பணி கொடுத்து, பணியாதவர்களைக்கொன்று வேற்றுவடிவுடன் ஆகாயத்தை (இடமாகக்) கொள்ளும்படி அனுப்பினன். எ - று. (௩)

இடங்கொள்பா தலத்தி னேகி யெரிமணிச் சூட்டுப் பேழ்வாய்
விடங்கொள்வா லெயிற்று நாகர்கள் விடங்களி லவர்க ளாகி
மடங்கவெம் போரில் வென்று மணிமுத லான செல்வ
மடங்கலுங் கவர்ந்து கைக்கொண் டவனியின் மீண்டு போந்தான்.

(இ - ள்.) இடங்கொண்ட பாதலத்திற்சென்று, பிரகாசிக்கின்ற மாணிக்கம் பொருந்திய உச்சிக்கொண்டையையும், பிளவுபட்ட வாயையும், விஷத்தையும், வெள்ளிய பல்லையுமுடையவர்கள், விஷமில்லாதவர்களாகி மடங்கும்படி வலிய போரிலவென்று, இரத்தினமுதலிய செல்வங்கண் முழுவதையுங் கிரகித்து உடன் கொண்டு பூமியில் திரும்பவும் வந்தனன். எ - று. (௪)

திக்கினும் பாத லத்துஞ் சிறந்தவா னிலத்துஞ் சாலத்
தொக்கதா னவர்க ளெல்லாந் துன்னினர் வணங்கிப் போற்ற
மிக்கருட் பார்வை நல்கி வேண்டிய சிறப்புஞ் செய்து
தக்கதன் பதாதி யாக்கிக் கொண்டனன் றறுகண் வீரன்.

(இ - ள்.) திசைகளிலும், பாதலத்திலும், சிறந்த ஆகாயத்திலும் மிகுதியாகக் கூடிய அசுரர்கள் யாவரும் ஒன்றுகூடி வணங்கித் துதிசெய்ய, மிக்க கிருபாநோக்கஞ் செய்து, வேண்டிய சிறப்புகளைத்தந்து, தகுதியாகிய தன் சேனையாகச்செய்து கொண்டனன் அஞ்சாமைத் தன்மையுடைய அசதிரிபுரன். எ - று.

பதாதி - காலாட்சேனை. தறுகண் - அஞ்சாமை. (௫)

விசிமுர சியம்ப வேலும் விசிகமு மழுவுந் தண்டும்
மசியுமற் றனைத்து மேந்தி யவுணர்க டிங்க ளில்லா
நிசியென மருங்கு மொய்ப்ப ஞெரேலெனப் புவிநின் றேகிப்
பசியபொன் னகரிற் கற்பப் பனிமலர்ச் சோலை புக்கான்.

(இ - ள்.) இழுத்துக்கட்டிய பேரிகை யொலிசெய்யவும், வேலாயுதமும், அம்பும், மழுவும், தண்டமும், வாளும், மற்றெல்லா ஆயுதங்களுந் தாங்கி, அசுரர்கள் அபரபக்கத் திரவுபோலப் பக்கலில் நெருங்கிவரவும், விரைவாகப் பூமியினின்று சென்று, பசிய பொன்னகரத்திலே குளிர்ந்த கற்பகமலர்ச்சோலையிற் புகுந்தனன். எ - று.

திங்களில்லா நிசி - சந்திரன் இல்லாத இரவு. இஃதிருளை விசேடிக்கக் கூறியது. அமாவாசியையென்க. ஞெரேல் - விரைவுகுறிப்பிடைச்சொல். பொன்னகர் - தேவநகரம். (௬)

மைந்துறு வீர ராங்கு வைகிய சிலத ரோடு
நந்தன வனத்தைச் சாட நவையறு தேவ தூதர்
சித்திரற் கோடிச் சொன்னா ரெய்திய வவுணர் சேனை
முந்தினன் றூதர் தம்மை யவருமப் போ யுடைக்க லுற்றார்.

அற்றன படையோ டங்கை யறுந்தன தாரோ டாகம்
மிற்றன கழலோ டாள்க ளிறந்தன முடியோ டுச்சி
செற்றின குடரோ டீரல் சிந்தின வலியோ டூக்க
முற்றிய வமரர் சேனை முரிந்தன வவுணன் றாக்க.

(இ - ள்.) அவுணனாகிய திரிபுரன் தாக்குதலால், ஆயுதத்தோடு அழகிய கைகளற்றன. மாலையோடு மார்புகள் அறுந்தன. வீரகண்டாமணியோடு ஒள்ளிய கால்கள் இறுபட்டன. கிரீடத்துடன் சிரங்கள் அழிந்தன. குடலுடன் ஈரல்கள் விழுந்தன. வல்லமையுடன் விடாமுயற்சிகள் சிதறின. தேவசேனைகள் (இவ்வகையாக) முடிவுற்றன. (தப்பினவை) முரிந்தோடின. எ - று. (௧௫)

மந்தரங் கலக்கப் பட்ட வாருதி யனைய சேனை
யிந்திர னுக்கி னோனு னெரியெழ விழித்துச் சீறிக்
கந்தடு களிநல் யானை காலெனக் கடுக வுந்தி
வெந்திற லவுண னோடு வெய்யபோ ரிழைத்தா னன்றே.

(இ - ள்.) மந்தரகிரியால் கலக்கப்பட்ட பாற்கடலைப்போன்ற (தேவர்) சேனையை இந்திரன்கண்டு மனம்பொருதவனாகி, (கண்களில்) தீசொரியக் கோபித்து, கட்டுத்தறியைக் கோபிக்கின்ற நல்லமதச் செருக்குடைய ஐராவதமென்னும் பட்டத்து யானையைக் காற்றுப்போல விரைந்துசெலுத்தி, வெவ்விய வலியுடைய திரிபுரனுடன் கொடும்போர் புரிந்தனன் எ - று. (௧௬)

தொடுத்தபல் வாளி விட்ட தோமரங் குந்த நேமி
விடுத்திடும் பாச மோச்சும் வெய்யவாண் முசலந் தண்டுந்
தடுத்துறு மத்தி ரங்க டமையுநேர் விடுத்துத் தளரி
யுடுத்திரள் சிந்த வார்த்திட் டுந்தினன் பரியைத் தீயோன்.

(இ - ள்.) பலபாணங்களைத் தொடுத்தனன் இருப்புலக்கை ஈட்டி சக்கரம் இவற்றைவிட்டனன் பாசத்தை வீசினன் கொடியவாள் முசலம் தண்டம் இவற்றைச் செலுத்தினான் கொடியோனாகிய திரிபுரன் நட்சத்திரத்தொகுதி சிந்தும்படி ஆர்ப்பரித்து, இந்திரனேவிய அஸ்திரங்களைத் தடுத்து அஸ்திரங்களையு நேரேவிடுத்துச் சாய்த்து, குதிரையைத் தூண்டினன் எ - று. (௧௭)

பாய்பரி தனது முன்கால் பணைக்கைமால் யானை நெற்றித்
தோய்தர நாட்ட லோடுந் துணைவனை யவுணர் கோமான்
காய்கதிர் வாளா லோச்சிக் கடவுளர் கோமான் செங்கை
வாய்தரு வயிர வேலு மானமு நிலத்தில் வீழ்த்தான்.

(இ - ள்.) பாய்ந்துசெல்லுங் குதிரையானது தன்னுடைய முன்காலை, பனை போன்ற துதிக்கையுடைய பெரிய ஐராவதத்தின் நெற்றியிற்படும்படி வைத்தவுடனே, அவுணர்தலைவனான திரிபுரன் காய்கின்ற கிரணத்தையுடைய வாட்படையால் வெட்டி, தேவராசனாகிய இந்திரனுடைய செங்கையிலுள்ள வச்சிரவேலையும் மானத்தையும் நிலத்தில் வீழ்த்தினான். (௧௮)

கந்தரங் கழிய விட்டக் கந்தக நெளிந்து தாழ
வந்திடி நிலத்தில் வீழ்ந்த வுருப்பவிர் குலிசங் கைக்கொண்

டந்தின்மேல் வந்த வேழ மத்தகந் தடிந்து வீரங்
கிடந்திலன் றீயோன் வல்லே தேவர்கோ னிலத்திற் பாய்ந்தான்.

(இ - ள்.) கொடியோனாகிய திரிபுரன் குதிரையை விரைந்து திருப்பி, அக் குதிரையை நெரித்து தாழ்ச்செலுத்தி, நெடியபூமியில் விழுந்த அழகுற்று விளங்குகின்ற வச்சிரத்தைக் கையிற்கொண்டு, அவ்விடத்தில் மேலுற்றுவந்த ஐராவதமென்னும் யானையின் மத்தகத்தை வெட்டி வீரத்தை யழித்தனன். உடனே தேவர்கள் தலைவனான இந்திரன் பூமியிற் குதித்தனன். எ - று.

குலிசம் - வச்சிராயுதம். (கக)

உழுந்துகண் ணடியின் மேலா லுருளுமு னெழுந்து தாவிக்
கொழுந்துகொள் வீரத் தோடுங் குதிரைமே லிருந்தான றன்னைச்
செழுந்தனிக் கடகக் கையாற சென்னியிற் புடைத்தான் றேவர்
விழுந்துவந் தனைசெய் நோன்றாள் வேந்தன்மூர்ச சித்தான் றீயோன்.

(இ - ள்.) தேவர்கள்பணிந்து வணக்கஞ்செய்யுஞ் சிறந்த பாதங்களையுடைய தேவேந்திரன், உழுந்தானது கண்ணடியினபேரிலே உருளுதற்கும் முற்பட எழுந்து பாய்ந்துசென்று, மிகுந்தவெற்றியோடும் புரவியினபேரிலிருந்த திரிபுரனை, செழியவொப்பற்ற கடகமணிந்த கையினாலே தலையிலடித்தனன் கொடியோனாகிய திரிபுரன் மூர்ச்சித்தனன். எ - று.

புடைத்தல் - மோதுதல்.

உழுந்துகண்ணடியின் மேலாலுருளுமுன் னென்றது சீசுச்சியின் விரைவினை விளக்கக்கூறியதாம். (உ0)

மூர்ச்சைவிட் டொழிந்த பின்னர் முடிகெழு பமரர் வேந்தன்
றார்ச்சிறை மார்பத் தோடித் தாக்கின னவனு மூர்ச்சித்
தோர்ச்சியுற் றனியென் னோடு மொன்படை யொழித்து மல்லுப்
போர்ச்செயல் விளைகக வென்றான பொருக்கென வவுணன் சொல்வான்.

(இ - ள்.) (திரிபுரன்) மூர்ச்சைதெளிந்தெழுந்தபிறகு, விளங்குகின்ற கிரீடமணிந்த தேவேந்திரனுடைய மாலையணிந்த மார்பிற்பாய்நது மோதினான். அவ்விந்திரனு மூர்ச்சையடைந்து அதுதெளிந்து யோசிதது நீ யென்னோடும் ஆயுதப்போரை யொழித்து மற்போற்புரிக வெனறனன் அவுணனாகிய திரிபுரன் (அதற்குவிடையாக) விரைந்து கூறுகின்றான். எ - று. (உக)

பதங்கமோ வடவைத் தீயைப் பட்சிறைக் காலிற் சிந்துங்
கதங்கடா அமெனக்கு நீமன் கருததிலு ளழிந்தா யஞ்சே
லிதங்கெடா திருக்க வேண்டி னிருநிலத திருக்கை யீநதேன்
[illegible]கொளா தங்குச் சென்று வாழ்கநின் கிளையோ டென்றான்.

(இ - ள்.) வடவாமுகாக்கினியை ஒருபதங்கமோ தன்னுடைய சிறகின் காற்றினாலழிக்கும். கோபத்தைச் சிந்தும எனக்கு நீ மிகவும் மனதில் வருந்தி னும் அஞ்சவேண்டாம். நன்மையழியாதிருக்க வேணமோயின், பெரியபூமியில் (உன திருக்கை)யை [illegible] [illegible] உன் [illegible] [illegible] வாழக்கடவையென்று [illegible]னன். எ - று.

புதைக்கம் - வீட்டுதல்; விளக்கலிக்கும் ஓர் இறப்புச்சி.

கட்டளைத்தீ - பெண்குறியோ முக்கம்போல வடிவுள்ள பெருநெருப்பு. இது கடவுளாணை எல்லைகடவாதிருக்க இறைவனால் ஆங்கு நியமிக்கப்பட்டது. (௨௧)

கூறுதா வலவனை வாளிற் கொற்றவ னொருகை புனலை
வேறுபோர்க் கழைத்தல் பற்றி மெலிந்துளோ னாகக் கொண்டிவ்
வாறுநீ யுரைத்தா யுன்றன் வடிவெலா மீர்ந்து சுற்றும்
பாறுண வளிப்பே னென்று பகர்ந்துதோள் புடைத்தார்த் திட்டான்.

(இ - ள்) அவ்வாறு சொல்லிய திரிபுரனைத் தேவேந்திரன் பார்த்து, உன்னை வேறுவகைப்பட்டபோருக்கு அழைத்ததுபற்றி (என்னை)த் தளர்ந்தவனாகக்கொண்டு இவ்வண்ணமாகச் சொல்லினை. உன்தேக முழுவதையுமரிந்து, சுற்றிலும் பருந்துகளுண்ணும்படி (இரையாகக்) கொடுப்பேனென்று கூறி, புயத்தைத்தட்டி ஆரவாரித்தனன் எ-று. (௨௨)

செருவினிற் கிளருந் திண்டோட் டிரிபுரன் மலைந்து நேர்ந்து
குருதிக்கொப் புளிப்பத் தாக்குங் கோவமா கோவைத் தாக்கிப்
பொருதழிந் தானைப் பற்றிப் பொருக்கெனக் கரத்தாற் றூக்கி
யிருவிசும் பிடைவட் டித்து விட்டன னிமைக்கு முன்னர்.

(இ-ள்) போரிற் பொங்கும் வலியதோளையுடைய திரிபுரன் றப்போர்செய்ய விணங்கித் தானும் உதிரங்கொப்புளிக்கும்படி தேவேந்திரனையடித்துப் போர்செய்கையில், அவன்காலைப்பிடித்து இமைப்பொழுதின் முன்னரே விரைந்துகையினாலெடுத்து, பெரிய ஆகாயத்திற் சுழற்றிவிடுத்தனன் எ-று.

கோவமாகோவென்றது தேவலோகத் தலைவன், இந்திரன்.

செருவினிற்கிளருந் திண்டோள் - போரென்றுற்ற பூரிக்குந்தோள் (௨௩)

அந்தர நிவந்த சோலை யலர்பசுங் கோட்டி றாலை
மந்திக ளுகளுந் தோறுங் கிழிந்துவார் மதுநீர் பாய்ந்து
செந்தினை விளைக்குஞ் சாரற் சிலம்புசூழ் இமையப் பாங்க
ரிந்திரன் வீழ்ந்து மூர்ச்சித் திருந்தவன் போற்கி டந்தான்.

(இ - ள்) ஆகாயமளாவிய சோலையிலே பரந்த பசிய கொம்புகளிலுள்ள தேன்கூடுகளை குரங்குகள் புரளுந்தோறுங் கிழிபட்டு, ஒழுகுகின்ற தேனொழுக்கானது பாய்ந்து செவ்விய தினைப்பயிரை விளைக்கும் சாரலையுடைய மலைகள்சூழ்ந்த இமயமலையின் பக்கலில், இந்திரன்விழுந்து மூர்ச்சையுற்றுச் செத்தவன்போலக் கிடந்தனன் எ-று.

இறால் - தேன்கூடு (௨௪)

தெம்முனை சாயக்குந் தனிக்கோன் றிரிபுரற் குடைந்த லோட்டப்
பொம்மன்மென் குழல்கள் சோரப் புலோமசை நிலத்தில் வீழா
வம்மவோ வம்ம வோவென் றழுதுயர் பூர்ந்து தேவர்
தம்மொடு மிரியல் போகு டமரிய வுலக நீத்து.

(இ - ள்.) பகைவரைப் போரில் வெல்லும் தனக்கணவனாகிய இந்திரன் திரிபுரனுக்குத் தோல்வியுற்றலைக் கேள்விப்பட்டு, பூரித்தமெல்லிய கூந்தலினின்று தேன்

சொரிய இந்திராணி பூமியின்மேல்விழுந்து, அம்மவோ ! அம்மவோ ! என்று புலம்பித் துன்புற்று, தேவர்களோடும் பொன்னுலகத்தை விடுத்து (அவன்வீழ்ந்த விடத்துக்கு) ஓடிப்போயினள். எ - று. (உசு)

நிலைப்பொழி யமர ரெல்லா நேரிழைச் சசிதன் னோடு
மிலைப்புடன் களைத்துப் போகி யிந்திரன் கிடப்பக் கண்டு
தலைப்படி மெழுத்தோ வென்று தளர்வுதீர்த் தவனோ டக்
மலைப்புழை முழைக டோறும் வைகினர் கரந்து மாதோ.

(இ - ள்.) இருக்கையைவிடுத்த தேவர்கள் யாவரும், இந்திராணி தேவியோடும்சென்று, இந்திரன் இளைப்புடன் களைத்துக்கிடக்கக் கண்டு, தலையிலெழுதிய வெழுத்தோவென்று, அவன் மனத்தளர்ச்சியை யொழித்து, அவ்விந்திரனுடன் அந்த இமயமலையின் புழைகளாகிய குகைகளிலெல்லாம் ஒளிந்து வாழ்ந்தார்கள். எ - று. ()

செங்கள நீங்கி யந்தத் திரிபுர னன்கு கோட்டு
வெங்கயத் திவர்ந்து வெற்றி முரசொடு * வளைகள் விம்மப்
பொங்கெழின் மாட மேடைப் பொன்னகர் புகுந்து வேந்தன்
றங்கிய கோயில் சார்ந்து தவிசின்வீற் றிருந்தா னன்றே.

(இ - ள்.) அந்தத் திரிபுரன் போர்க்களத்தையொழிந்து, வெவ்விய நான்கு கொம்புகளையுடைய ஐராவதத்தின்மேலேறிக்கொண்டு வெற்றிமுரசும் (வெற்றிச்) சங்கமும் ஒலிக்க, மிக்க அழகையுடைய மாடங்களும் மேடைகளும் பொருந்திய பொன்னகரத்திற் பிரவேசித்து, இந்திரன்வசிக்குங் கோயிலையடைந்து, சிங்காசனத்தில் வீற்றிருந்தனன். எ - று. (உஅ)

நிரம்பிய களிய னாகி தொல்வான் குடிக ளெல்லாம்
பரம்புதன் னாணைக் குள்ளே பயிலுமா முரசிற் சாற்றி
யரம்பையர் நடனஞ் செய்ய வமைத்துக்கின் னரர்கள் வீணை
நரம்புளர்ந் திசைக டேக்க நலத்தக வரசு செய்தான்.

(இ - ள்.) நிரம்பிய களிப்புடையவனாகி, தொன்மைவாய்ந்த சிறந்தகுடிகள் யாவரும் பரவிய தன்கட்டளைக்குட்பட்டு வாழும்படி பேரிகையறைந்து, அரம்பா ஸ்திரீகள் நடனஞ்செய்யவும், கின்னரர்கள் வீணையின் நரம்புகளைத் தடவி இசைப் பாட்டுகளை யெழுப்பவுங் கட்டளையிட்டு, நன்மையாக அரசுபுரிந்தனன். எ - று.

களியன் - களிப்புடையவன. (உகூ)

சிலபகல் கழிந்த பின்னர்த் திசைமுக னுலகஞ் சார்ந்தா
னலரவன் வருவ தெண்ணி யாழியா னுலகம் புக்கான்
மலரவன் றன்னைக் கொண்டு மாலும்வை குந்த நீங்கிப்
புலவர்கள் கரந்து வைகும் பொன்னிம யத்தைச் சார்ந்தான்.

(இ - ள்.) சிலதினங்கள் சென்றபிறகு, (திரிபுரன்) பிரமனுடைய சத்தியலோகத்தை யடைந்தனன். பிரமதேவன் (அவன்) வருவதை யோசித்து, சக்கராயுத

முரசொடுவளைகள் விம்மவென்றும் பாடம், வளைகள் - மலைகள். தம்மைச் சேகரிக்க இந்திரனின்மையின் தாம் சுகப்பட்டனவென மலைகள் பரிக்கனவென்

மேந்திய விண்மூர்த்தியின் வைகுந்தலோகத்திற் சென்றனன். அந்தத் திருமாலும் பிரமதேவனை யுடன்கொண்டு வைகுந்தத்தைவிட்டு, தேவர்கள் மறைந்துவசிக்கும் பொன்மயமான இமயமலையை யடைந்தனன். எ - று. (௯௦)

சார்ந்தவன் பிரம னில்லாச் சத்திய வுலகை நோக்கி
யார்ந்ததன் ளுணை யங்கு மமைத்துவை குந்தத் தெய்தி
யூர்ந்திடு மணையி னுனு மொழிந்தமை யுணர்ந்திட் டாங்குங்
கூர்ந்ததன் னுணை வைத்துக் குவலயத் திறங்கினனே.

(இ - ள்.) (அவ்வாறு) சேர்ந்த திரிபுரன் பிரமதேவனில்லாத சத்தியலோகத்தைப் பார்த்து, பொருந்திய தன் ஆக்கினையை அங்கே (நடக்கும்படி) நிறுத்தி, வைகுந்த நகரமடைந்து, திருமாலுஞ் சென்றமையை யறிந்துகொண்டு, அவ்விடத்துங் கூர்மையான தன் ஆக்கினையை நிலைநிறுத்திவிட்டுப் பூமிக்குவந்தனன். எ - று.

ஊர்ந்திடுமணையினுன் - நகர்ந்துசெல்லும் பாம்பைச் சயனமாகவுடையவன்; திருமால். (௯௧)

வரம்பல கொடுத்த கைந்நகை வள்ளலைப் பூசை யாற்றிய
பரம்பர வரமுன் றந்த பாழியம் புரிசை மூன்று
முரம்பெற வின்று நாயேற் குதவுக வென்று நின்றான்
புரம்பல வளத்தி னேடும் பூத்தன விசும்பி னம்மா.

(இ - ள்.) பலவரங்களை யருளிய ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகப் பெருமானைப் பூசைசெய்து, பரதுக்குமபரமானவனே! முன்னே (எனக்கு) வரமாகக்கொடுத்த பெரிய அழகிய மும்மதில்களையும் வலிமையோடு இப்பொழுது அடியேனுக்கு அருள்புரிகவென்று நின்றனன (திரிபுரன்) அப்பொழுது ஆகாயத்திற் பலவளங்களோடும் முப்புரங்கள் தோன்றின எ - று. (௯௨)

வேறு.

கற்பகப் பொதும்பருங் காம தேனுவும்
பொற்பமா நிதிகளும் பொருவி லாதபல
லற்புதப் பொருள்களு மளவில செல்வமு
முற்பவித் தனவுறு புரங்கண் மூன்றுமே.

(இ - ள்.) கற்பகச்சோலையும், காமதேனுவும், அழகுபொருந்திய (சங்கநிதி பதுமநிதிமுதலிய) நிதிகளும், ஒப்பில்லாத பல அற்புதப்பொருள்களும், எல்லையில்லாத செல்வமும், பொருந்திய முப்புரங்களிலும் உற்பவித்தன. எ - று.

நிதி - எடுக்குந்தோறுங் குறைபடாதது. (௯௩)

இந்திர னுலகமு மெனைத்து மாக்கிய
வந்தண னுலகமு மாழி யேந்திய
சுந்தர னுலகமுந் துணையு றாவெனின்
மிங்கொரு புரநிகர் பேசற் பாலதோ.

(இ - ள்) இந்திரலோகத்தையும்பிறலோகங்களையும் படைத்தபிரமனுடைய சத்தியலோகமும், சக்கராயுதமேந்திய அழகுவாய்ந்த திருமாலினுடைய வைகுந்த

லோகமும் (மும்புரங்கட்குச்) சமானமாகாவெனின் வேறொரு நகரமானது எப்படிச் சொல்லுந் தன்மையையுடையதோ? எ - று.

அந்தணன் - பிரமன் அழகிய தன்மையையுடையோன். (௯௪)

> தடையற வெங்கணுஞ் சாரலல்லவா
> யுடையவன் முத்திலையை யுறுமப் போதலா
> லிடையழி வின்மையி னெயிலகளை மூன்றுமுன்
> னடைதரு சூக்கும வாகமை போன்றவே.

(இ - ள்) எல்லாவிடங்களிலுந் தடையின்றிச் செல்லவல்லமையுடையனாகிய திரிபுரன் முத்தியையடையும் அக்காலத்திலல்லாமல், இடையிலே அழிவில்லாமையால், மும்மதில்களும் முன்னேயடைந்த சூக்கும தேகத்தை யொத்தன. எ - று.

வாய - வழி. வல்லவாயென்றதால் வல்லமையென்றும் (௯௫)

> கருமபொனின் வெண்பொனிற காமா செம்பொனிற்
> றருமபெரு முப்புர முயிர்த மக்கெலாம்
> விருமபிய போகங்கள் விளைத்து நல்வித
> மருமபுதல செய்யுமுன் றூக்கை யுமபொருவ.

(இ - ள்.) கரும்பொனனினாலும், வெண்பொன்னினாலும், அழகிய செம்பொன்னினாலுஞ் செய்துள்ள பெரிய திரிபுரங்களும், உயிர்கட்கெல்லாம் இச்சித்த போகங்களையுண்டுசெய்து, நல்ல இதத்தையும உண்டாக்குகின்ற மூவகைத் தேகத்தையும ஒத்திருக்கும். எ - று.

கருமபொன வெண்பொன செம்பொன் என்பன முறையே இரும்பு வெள்ளி பொன் என்பனவாம். மூன்றுக்கைகள் - தூலதேகம் சூக்குமதேகம் காரணதேக மென்பன. (௯௬)

> திண்டிற லுடையவன் றிரிபுரப்பெயர்
> கொண்டவன திரிபுரங் குலவி நிறைமை
> கண்டனன் களையறு களிப்பி னீடிறு
> னண்டர்கள் பிரான்றிரு வருள்வ ழுத்தினன்.

(இ - ள்) மிக்கவல்லமையுடையவனாகிய திரிபுரனென்னும் பெயருடையவன் திரிபுரங்கள் சமைந்து நிறைவையடையக் கண்டனன், எல்லையற்ற ஆசையதிகரித்தனன். தேவர்களுக்குத் தலைவராகிய கணேசப்பெருமானுடைய திருவருளைப் பணிந்தனன். எ - று. (௯௭)

> தனையர்கண் மூவரைத் தன்ம னத்திற
> னினையுமுன் றோற்றின னவர்க்கு நீடிய
> வனையமுப் புரமுமூன் றுக வைகிய
> வனைபுக ழுலகமும் வழங்கி னனரோ.

(இ - ள்.) மூன்று புத்திரர்களைத் தன் மனத்தினாலே நினைக்குமுன்னே படைத்தனன். அவர்களுக்குப் பெரிய அந்தத் திரிபுரங்களையும் மூன்றாகவிருந்த புகழ்பொருந்திய உலகத்தையுங் கொடுத்தனன். எ - று.

மூன்றுக வைகிய வுலகமென்றது சுவர்க்க மத்திய பாதலமென்னுந் திரிலோ [illegible]. (௯௮)

செய்பவர்கள் மனத்தில் விரும்பிய எல்லாப்பொருள்களையும் (விரும்பியவண்ணமே) கொடுத்து, அவர்கள் செல்லவிரும்பிய விடத்திற்குச் சென்று (இவ்வண்ணமாக) இருந்து, நீங்காத பகைஞர்களைக் குலத்தோடும் அழியும்படி வழித்து, ஆகாயத்திலிருக்குந் தேவர்களஞ்சும்படி யிருந்தன. எ - று. (௬[illegible]

மீட்டுமிரு வரைச்சண்டன் பிரசண்ட னெனமனத்தின் வேறுண் டாக்கிக்
கோட்டமில்சண் டனைப்பிரம வுலகத்து மாதவன்வை குந்தந் தன்னி
லீட்டுபுகழ்ப் பிரசண்டன் றனையுமவா போலிருப்ப வேவிப் பின்னர்
மோட்டிளமென் முலைமனைமா துடன்கூடி யொருமகனை மகிழ்ந்தானன்றே

(இ - ள்) சண்டன் பிரசண்டனென்று மீட்டுமிவ்விருவரை மனதாற்பண்டைத்து, கோணுதலில்லாத (வலியுடைய) சண்டனைப் பிரமலோகத்திலும், தேடிய பிரதபத்தையுடைய பிரசண்டனை விஷ்ணுமூர்த்தி வசிக்கும் வைகுந்தலோகத்திலும், அவனைப்போன்றிருக்கக் கட்டளையிட்டு, பிறகு, பூரித்த இளமைதங்கிய மெல்லிய முலையையுடைய மனைவியுடன் சேர்ந்து ஓர்புதல்வனைப் பெற்றனன். எ - று.

பிரசண்டன்றனையு மென்பதிலுள்ள உம்மையைப்பிரித்து வைகுந்தத்தன்னிலென்பதனோடு கூட்டிக்கொள்க. (௬[illegible]

திரிபுரனிவ் வாறுலக முழுவதுந்தாட் படுத்துமிகு செல்வ மல்க
வரிமதர்க்கண் மடமாதர் பெரும்போகக் கடலழுந்தி யறங்கள் பேணி
விரிபுகழெண் டிசைபோற்ற விநாயகபூ சனையோடு விமலை பாக
ருரிமைகொளுஞ் சிவலிங்க பூசனையும் புரிந்தலப்பில் காலம்வாழ்ந்தான்

(இ - ள்) திரிபுரன் இவ்வகையாக உலகமுழுவதையுந் தன்னடிப்படுத்தி மிக்க செல்வமதிகரிக்க, அரிபரந்து மதர்த்த கண்களையுடைய இளமை வாய்ந்த மங்கையர்களது மிக்க போகசாகரத்தின் மூழ்கி, தருமங்கள் (எல்லாவற்றையுங்) காத்து பரந்த கீர்த்தியானது எட்டுத்திசைகளையு மறைக்கும்படிவிநாயகக்கடவுள்பூசையுடன் விமலையாகிய உமாதேவியாரைப் பாகமாகவுடைய சிவபெருமானுக்கு உரிமையாகக் கொள்ளத்தக்க சிவலிங்கபூசையையுஞ் செய்துகொண்டு,எலலையிலலாத (நெடுங்)காலம் வாழ்ந்திருந்தனன். எ - று. (௬௫)

தேக்குறுபுகழ்த் திரிபுரன்முன் னரசாட்சி புரிந்ததிது தெளிக நீயென் [று
றாக்கமிகு வியாதமுனிக் குரைத்தனனான் முகனதனை யுனக்குச் சொன்னே
னீக்கியபூங் கழற்சோம காந்தவினி விண்ணோர்கள் விமலற் போற்றிப்
பாக்கியஞ்சேர் வரம்பெற்ற தறிகவெனப் பிருகுமுனி பகர லுற்றான்.

(இ - ள்.) தேக்கிய கீர்த்தியையுடைய திரிபுரன் முற்காலத்தில் அரசாட்சி செய்ததனை இதுவாகும். நீ யறிகவென்று மனஞ்சோராமை மிகுந்த வியாதமுனிவருக்கு, நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் கூறினன், அதனை யுனக்குக் கூறினேம். (காலிற்) கட்டிய அழகிய வீரக்கழலையுடைய சோமகாந்த ராசனே! இனி, தேவர்கள் விமலப்பெருமானைத் துதிசெய்து பாக்கியம்பொருந்திய வரத்தினைப்பெற்ற [illegible]களையும் அறிவாயாகவென்று பிருகுமுனிவர் சொல்லத்தொடங்கினார். எ - று.

திரிபுரன்அரசாட்சிப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - [illegible]

---

# தேவர்கள் வரம்பெறுபடலம்.

இமய மால்வரைக் கந்தரத் தெய்திய
வமரர் யாதுசெய் தாரரு ளாயெனுந்
திமில மாமறை செய்தவி யாதனுக்
கிமிழு மார்வத் தியம்புவ னன்முகன்.

(இ - ள்.) பெரிய இமயமலைக்குகையி லடைந்த தேவர்கள் யாது செய்தனர்? அருள்வாயாகவென்று வினவும், திமிலமாகிய வேதத்தை யருளிச்செய்த வியாதமுனிவருக்கு, பிரமதேவன் அரும்பிய ஆசையோடு சொல்வானாயினன். எ - று

திமிலம் - பேரொலி. (க)

புகலி டம்பிறி தின்றிப் பொருப்பினு
ளகனு டைந்தழி வெய்து மமரர்முன்
மகதி யாழ்முரன் மாதவ னண்ணினன்
முகம லர்ந்தவர் தாழ்ந்து மொழிகுவார்.

(இ - ள்.) புகலிடம் வேறில்லாமல், இமயமலையில் மனங்கசிந்து துன்புறும் வானவர்களுக்கு முன்னே, மகதிவீணையை வாசிக்கும் பெருந்தவசியாகிய நாரதமுனிவர் வந்தனர். (அவரைக்கண்ட) அத்தேவர்கள் முகமலர்ச்சிகொண்டு பணிந்து சொல்பவர்களானார்கள். எ - று.

புகல் - அடைக்கலம். அகன் - அகம் என்பதன் போலி. (உ)

வெய்ய முப்புரன் வெற்றிமி குந்தனன்
வைய மூன்றுந்தன் னாணைவ யக்கினன்
ஐய னையவ னாலலை புண்டியா
மைய நெஞ்சொடு நாளுமி னைந்துளேம்.

(இ - ள.) ஐயனே! கொடிய திரிபுரன் வெற்றியில் மிகுந்திருக்கின்றனன், மூவுலகங்களிலுந் தன்னுடைய ஆணையைச் செலுத்தினன். யாங்கள் அத்திரிபுரனால் அலையுண்டு வருந்திய மனத்துடன் நாடோறுந்துன்புறுகின்றோம். எ - று. (௩)

யாவ னால்வர மெய்தின னன்னவன்
யாவ னாலிறும் யாங்களி னிச்செயல்
யாவ தோதுக வென்றனர் நாரதன்
யாவ துந்தெரிந் தேயினி தோதுவான்.

(இ - ள்.) அந்தத்திரிபுரன் யாரால் (அத்தகைய) வரமடைந்தனன்? (அவன்) யாரால் அழிவுறுவான்? யாங்கள் இனிச்செய்யத்தக்கது யாது? (அவற்றை யெல்லாம் தெளிவாக எங்கட்குக்) கூறுகவென்று கேட்டனர். நாரதமுனிவர் எல்லாவற்றையும் (ஞானநோக்கால்) அறிந்து இனிதாகச் சொல்கின்றனர். எ - று. (௪)

நோக்குங் கையுடை முன்னவன் பூசையா
லாக்கங் கொண்டன னற்றலை டியாவையு

மூக்க மிக்கவனை ஞானையோ ரம்பினாற்
றாக்க வல்லவன் சங்கர னேயரோ.

(இ - ள) (தேவர்களே ! அத்திரிபுரன்) தொங்குகின்ற கையையுடைய மூன்னோனாகிய விநாயகக்கடவுளுடைய அர்ச்சனைப்பலனால் வல்லமையுடன் எல்லாவற்றையுந் தேடிக்கொண்டனன். செய்தொழிலில் மனச்சோர்வின்மையை மிகுதியாகவுடைய அத்திரிபுரனை ஒரேகணையால் அழிக்கவல்லவர் சங்கரபகவானேயாவர். எ - று.

மோக்கும - முகந்துகொள்ளும். இதனைத்தொங்குமென்றும் (௫)

அந்த வீச னவனொடு முப்புரஞ்
சிந்து தறகுந திருக்கர மைநதுடை
மைநதன் சூட்சியும வேண்டும தக்களிற்
றெநதை யைசசர ணைய்துக நீயிரே.

(இ - ள.) அநதச சிவபெருமான் திரிபுரனுடன் முப்புரங்களை யழிததற்கும் ஐந்து திருககரஙகளையுடைய மூததபிளளையாருடைய யோசனையும் வேண்டும (ஆனபடியால),நீவகளும் மதநீாபொழியும் யானைமுககடவுளை (அதுகருதி)ச் சரணமடையுங் எ று (௬)

சேடடைத தேவாதந் தேவாபி ரான்கழ
லோடடை நெஞசுடை யோமுறல் யாதென
வேட்டை யெய்தியி ரங்கலிா மந்திரங்
கேட்டு நன்குகி ளாநதனுட் டிககவே

(இ - ள) சேட்டை தங்கிய தேவாகட்கெலலாந் தேவநாயகனாகியகணேசப் பெருமானுடைய திருவடியை ஒட்டையாகிய மனதையுடைய நாமடைதல் யாங்ஙனமென்று தளாசசியுற்று வருந்தாதீாகள். (கணேசபபெருமானை மகிழ்விக்கும்) மந்திரத்தைக் கேட்டுணர்நது நன்றாக உசசரித்து அநுட்டிகககடவீாகள. எ- று.

சேட்டை - குணககேடு. ஓட்டை நெஞசு - நிலையில்லாதமனம். எட்டை - தளர்ச்சி. (௭)

வாச நீர்படிந் தாடி வருகெனப்
பேசி னனபெருந் தேவர்கள் யாவரும்
வீச தெண்டிரை மென்புன லாடினார்
பூசி வெண்பொடி போந்துவ ணங்கினார்.

(இ - ள்.) மணமமைந்த நீரில் மூழ்கிவரக்கடவீர்களென்று கூறினன் (அதனைக்கேட்ட) பெருமைபொருந்திய தேவர்களெலலோரும், எறிகின்ற தெண்ணிய அலையையுடைய மெல்லிய நீரில் மூழ்கினவர்களாய், வெள்ளிய திருநீற்றைப் பூசிக்கொண்டு (நாரதமுனிவர்பால்) வந்து பணிந்தார்கள். எ - று.

வணங்கு தேவர்க்கு மாதவ னாதர
விணங்க வோரெழுத் தாலியை மந்திர
மணங்கு தீர்தர வஞ்செவி யோதினன்
குணங்கொள் பண்ணவர் கூறவிட் டேகினன்.

(இ - ள்.) (அவ்வாறு) பணிந்த தேவர்களுக்குப்பொருந்த,பெருந்தவசியாகிய நாரதமுனிவன் ஏகாட்சரத்தாலாகிய மந்திரத்தை, துன்பமொழிய அவர்கள்செவியிற் பொருந்தக்கூறினன். (அதன் அநுட்டிப்புக்) கிரமத்துடன் அவர்கள் அதைச் சபிக்கச் செய்து (இச்சையின்படி) சென்றனன். எ - று. (க)

ஒற்றைத் தாளினின் றும்பர்க ளன்பினால்
வெற்றி யானை முகத்து விநாயகன்
பொற்ற சேவடி புந்திவைத் துத்தவ
முற்று மாமனு வோதினர் பல்பகல்.

(இ - ள்.) தேவர்கள் ஆசையோடு ஒற்றைத்தாளிலே நின்று, வெற்றிபொருந்திய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளுடைய அழகிய சிவந்த திருவடியில் மனதைச்செலுத்திப் பலகாலந்தவஞ்செய்து சிறந்த மந்திரத்தைக் கணித்தார்கள். எ - று.

ஒன்று+தாள்=ஒற்றைத்தாள். (கo)

அன்பி னர்க்கவர் தம்மினு மன்பின
னென்ப ணிக்கு மிரங்கும் பராபரன்
வன்பு நெஞ்சுடை யார்க்கொரு வைகலு
முன்பு றுதவன் முன்புநின் றனரோ.

(இ - ள்.) அன்புடையவர்களுக்குத் தம்மைக்காட்டிலும் அன்புடையவரும், என்னுடைய பணிவிடைக்கும் (திருவுள்ளம) இரங்கும் பராபரனும், கடின சித்தமுடையவர்களுக்கு ஒருநாளுங் காட்சியளிக்காதவருமாகிய கணேசப்பெருமான் (அத்தேவர்களுக்குக்) காட்சிதந்தருளினர் எ - று.

என்பணிக்குமென்றது பக்திமுதிர்ச்சியில்லாத என்னுடையவென்று குறித்தது டன், பணிக்கும் என்றதிலுள்ள உம்மை இழிவு சிறப்புகுறிப்பதாம். (கக)

வேறு.

பொன்முடியு மதனருகே பொழிகிரண விளமதியும்
பன்மணிச்செய் குண்டலமும் பணைத்தோளி னங்கதமு
மின்மழியுந் திருமேனி விளங்கொளியு மனைநாணும்
வன்மருப்பி னிடைச்சுற்றும் வார்ந்துதிரள் புழைக்கரமும்.

(இ - ள்.) பொன்னாலாகிய கிரீடமும், அக்கிரீடத்தருகே கிரணங்களைச் சிந்தும் பாலசந்திரனும், பலரத்தினங்களா லிழைத்த குண்டலமும், பூரித்ததோள்களில் வாகுவலயமும், மின்னலைத் தோற்கச்செய்யுந் திருமேனியின் விளங்குகின்ற பிரகாசமும், அரைநாணும், வலிய தந்தத்தினிடையே சுற்றிலும் வடிந்து திரண்ட துதிக்கையும். எ - று.

துதிக்கை இருதந்தங்கட்கிடையிலுள்ள உறுப்பாகலானும்,அஃது திரண்டிருப்பதொன்றாகலானும், 'வன்மருப்பினிடை * * * திரள்புழைக் கரமும்" என்றார்.

பரித்தை மிகப்பழிக்கும் பதசமுந்து ணியுமழுவும்
வாசத்தி னறுங்கமல மலருமணி ஈாற்கரமுந்
தேசத்தி னில்லாத திருவழகுந் திகழ்வெய்த
கேசத்தி னெதிர்நின்ற நிமலனையா வருங்கண்டார்.

(இ - ள்.) பாசபந்தத்தை அடியோடு பறிக்கும் பாசக்கயிறும், துணியும், மழுப்படையும், வாசத்துடன் கூடிய நல்ல தாமரைமலரும், அழகிய திருக்கரங்களும், உலகத்திலில்லாத சிறந்த பொலிவும் விளங்கும்படி அன்போடு எதிரேவந்த புனிதராகிய கணேசப்பெருமானை எல்லோருந் தரிசித்தார்கள். எ - று. (௧௧)

பருதியெதிர் வரமலர்ந்த பங்கயம்போன் முகமலர்ந்து
வெருவுதலோ டன்புளத்தில் விரவலம ரர்கள்வல்லே
திருவடியி னெதிர்வீழ்ந்து சென்னியிரு கரமேற
வருவிவிழிக் துணைகாட்ட வள்ளுறப் பழிச்சுவார்.

(இ - ள்.) சூரியன் எதிரே தோன்றலால் விகசித்த தாமரைமலர்போல முகமலர்ச்சிகொண்டு, அச்சத்துடனே ஆசையும் மனத்திலுண்டாகத தேவர்கள் விரைந்து, (கணேசப்பெருமானுடைய) திருவடியிலே நேராகப் பணிந்து, சிரமிசை யிருகரங்களும் ஏறவும், இருகண்களில் (ஆனந்த) அருவிதோன்றவும், பக்தியதிகரிக்கவும் (பின்வருமாறு) துதிக்கலானார்கள். எ - று. (௧௨)

வேறு.

தத்துவா தீத போற்றி தத்துவப் பொருளே போற்றி
தத்துவ முதலே போற்றி தத்துவ சொரூப போற்றி
தத்துவத் தியன்ற தாத்து விதங்களு மானாய் போற்றி
தத்துவ வறிவுக் கெட்டாத் தயங்குபே ரறிவே போற்றி.

(இ - ள்.) தத்துவாதீதனே! போற்றி. தத்துவப்பொருளாயுள்ளவனே! போற்றி. தத்துவங்கட்கு ஆதியே! போற்றி. தத்துவங்களின் சொரூபியே! போற்றி. தத்துவத்தியன்ற அத்துவிதங்களும் ஆனவனே! போற்றி. தத்துவவுணர்ச்சிக்கு எட்டாது விளங்கும் பேரறிவானவனே! போற்றி. எ - று.

திருமூலர் திருமந்திரம்.

"அறிவு சிவமிரண் டென்ப ரறிவிலார்
அறிவு சிவமாவ தாரு மறிகிலார்
அறிவு சிவமாவ தாரு மறிந்தபின்
அறிவே சிவமா வமர்ந்திருப் பானே."—என்றபடி, இறைவன் அறிவுமயமாயிருத்தல் கருதி "பேரறிவே" என விளிக்கலாயிற்றென்க. (௧௩)

உடலினுக் குயிரே போல வுயிர்க்குயி ரானாய் போற்றி
யுடலுயிர்க் கறிவு நல்கி யுடலினைக் கழிப்பாய் போற்றி
யுடலுயி ரெனப்பி ரிங்கா வொற்றுமைப் பொருளே போற்றி
யுடலுறை யுயிர்க்கு மெட்டா வொளிர்பெருஞ் சோதி போற்றி.

(இ - ள்.) தேகத்திற்குச் சீவனேபோல உயிர்களுக்குயிரானவனே! போற்றி. உடலிலுள்ள உயிர்கட்கு அறிவைக்கொடுத்து சரீர வாஞ்சையைக் கழிப்பவனே! போற்றி. உடலும் உயிரும்போலப் பின்னமாகாத ஒற்றுமைப்பொருளாயுள்ளவனே! போற்றி. உடலுறைகின்ற உயிர்கட்கும் அதீதப்பட்ட பிரகாசிக்கின்ற பெருஞ்சோதி சொரூபனே! போற்றி. எ - று. (௧௪)

விரவுதத் துவத்தி னீங்கி மேனிலை நின்ற வாவி
வரமுற வுருவு கொண்டு வந்தருள் குரவ போற்றி
பரவுமைந் தொழிலை நீக்கி யுயிரினைப் பணிப்பாய் போற்றி
துரியத்தி னுயிரை வாங்குஞ் சுடர்ப்பெருங் கடலே போற்றி.

(இ - ள்.) கலந்த தத்துவங்களினின்றும் மேம்பட்டு[தத்துவாதீதனாகி] நின்று விருப்புற்று வரங்களைப் பெறும்படி திருவுருவங்கொண்டு வந்தருளிய ஆசாரியனே போற்றி. துதிசெய்யத்தக்க (சிருட்டி முதலிய) ஐந்தொழில்களையு மகற்றி உயிரைக் கட்டளையிடுபவனே! போற்றி. துரியத்தினுயிரை வாங்குஞ் சுடராயமான பெருங்கடலே! போற்றி. எ - று. (கஎ)

பத்தர்கள் வழங்கா நின்ற பலவுங்கைக் கொள்வாய் போற்றி
புத்திகள் போகத் தார்க்குப் புணர்த்தருள் போகி போற்றி
முத்தியை யோகத் தார்க்கு முடித்தருள் யோகி போற்றி
யெத்தொழி லவர்க்கு மந்தப் பயனரு ளிறைவ போற்றி.

(இ - ள்.) அடியவர்கள் கொடுக்கும் பலபொருள்களையுங் கைக்கொள்பவனே! போற்றி. போகத்தை விரும்பினவர்களுக்குப் புத்திகளைக் கூட்டியருளும் போகியே! போற்றி. யோகிகளுக்கு முத்தியைக் கொடுத்தருளும் யோகசுரூபியே! போற்றி. எத்தொழிலுடையவர்களுக்கும் (அத்தொழிற்குரிய) அப்பலனை யளித்தருளுந் தலைவனே! போற்றி. எ - று. (கஅ)

வேண்டிய வடியார்க் கெல்லாம் விக்கினங் கெடுப்பாய் போற்றி
வேண்டிவந் தனைசெய் யார்க்கு விக்கினங் கொடுப்பாய் போற்றி
வேண்டுவார் வேண்டிற் றெல்லாம் விளைத்தருள் விமல போற்றி
மாண்டதுட் டர்களைக் கொல்லு மறமிகு மள்ள

(இ - ள்.) (திருவடியைப்) பணியுமடியவர்களுக்கு..........................யூறுகளைத் தவிர்ப்பவனே! போற்றி. விரும்பி வந்தனைசெய்யாதவர்களுக்கு இடையூறுகளைக் கொடுப்பவனே! போற்றி. அடியவர்கள் வேண்டிய பொருள்களையெல்லாம் உண்டு செய்தருளும் மலரகிதனே! போற்றி. மாட்சிமைகெட்ட கொடியோர்களைக் கொல் லும் பாவதொழின் மிக்க மள்ளனே! போற்றி. எ - று. (கசு)

வழுத்திய துதிகள் கேட்டு வள்ளலார் சுரரை நோக்கி
விழுத்தகு வரங்கள் யாவை விளம்புக தருது மென்றான்
பழுத்தவன் புடைய ராய பண்ணவர் பணிந்து சொல்வார்
தொழுந்தகையேயெந் துயர மெல்லாந் தோன்றல்கா ணாத தன்றே.

(இ - ள்.) (அவ்வாறு) தோத்திரஞ்செய்த துதிகளை வள்ளலாராகிய கணேசப் பெருமானார் கேட்டுத் தேவர்களை நோக்கி, (நீங்கள் விரும்பிய) மேன்மையாகிய வரங்கள் யாவை? சொல்லக்கடவீர்கள். (அவற்றைக்) கொடுப்போமெனக் கூறினர். பழுத்த அன்புடையவர்களாகிய தேவர்கள் (விநாயகப்பெருமானை) வணங்கிச் சொல்கின்றார்கள்: அடியேங்கள் துன்பமுழுவதுந் தேவரீரறியாததல்லவே? எ - று. (உ0)

செம்மலின் வரத்தான் மாறாத் தீங்கெமக் கிழைத்து வைய
மும்மையுந் தன்கைக் கொண்டு முடிவிலா வாற்றல் சான்ற

கொம்மைமுப் புரத்தி னானைக் கொடுமையைக் கொன்று பின்னர்
விம்மனோ யெமக்குத் தீர்க்க வேண்டுமென் றிரக்கு கின்றார்.

(இ - ள்) சுவாமீ! தேவரீரருளிய வரத்தினால் ஒழியாத துன்பத்தைப் பெய்
கடகு விளைத்து, மூவுலகங்களையுந் தன் சுவாதீனஞ்செய்து கொண்டு, எல்லையில்லாத
வல்லமையிருந்த வலிய திரிபுரனை விரைவிற்கொன்று, (அதன்) பிறகு அடியேங்கட்
குற்ற துன்பநோயைப்போக்கியருள வேண்டுமென்று (தேவர்கள்) பிரார்த்தித்து நின்
றார்கள் எ - று.

அஞ்சிய தேவர் தங்க ளல்லலோ டழிவி லாற்றல
விஞ்சுமுப் புரத்தி னானை விளிதற்குஞ் சூழ்ச்சி செய்து
மஞ்சணி மிடற்றி னானை வலமிரந் தடைபி னென்று
செஞ்சொலி னியம்பி யைங்கைச் செம்மலா ரிதுவுஞ் சொல்வார்.

(இ - ள்) அச்சமடைந்த தேவர்களே! உங்கள் துன்பத்துடன், அழிவில்
லாத வல்லமைமிக்க திரிபுரனையும் அழிவுசெய்யும் ஆலோசனையைச் செய்து, அழகிய
நீலகண்டத்தையுடைய சிவபெருமானை அதிகவிரைவிற் சேருங்களென்று, ஐந்து திருக்
கரங்களையுடைய கணேசப்பெருமான் செவ்விய சொற்களாற்கூறி (மேலே) இதனை
யுஞ்சொல்லினார் எ - று. (௨௨)

அந்தரத் தமரா நீயி ரறைந்ததோத் திரத்தை மும்மைச்
சந்தியி னியம்பு வார்க்குச் சகலவிக் கினமுந் தீருஞ்
சிந்தையின் னினைந்த வெல்லாஞ் சேருமென் றருளி வல்லே
வெந்திற லவுணர் கோமான் மேவுமவ் வகாளஞ் சார்வார்.

(இ - ள்) ஆகாயத்தில் வசிக்குந் தேவர்களாகிய நீங்கள் கூறிய தோத்திரத்
தை மூன்று; [illegible] ங்களிலுஞ் சொல்பவர்களுக்கெல்லா இடையூறுகளுமகலும்.
மனதில் விரு [illegible] ம்பியவைகைகூடுமென்றருளிச்செய்து வெவ்விய வலியமைந்த அவு
ணர் தலைவனாகிய திரிபுரன் வாசஞ்செய்யும் வங்காளநகரத்தை விரைவாகச் சார்ந்
தனர் எ - று (௨௩)

இருபிறப் பாளர் தம்மு ளிலகொரு திலக மென்னத்
திருவுரு வுடைய ராகித் தேவியு மருங்கு நண்ண
வருமறை முனிவர் சூழ வடுத்துவங் காள மென்னுந்
திருநகர் வீதி யூடு சென்றவன் கோயில் புக்கார்.

(இ - ள்) வேதியர்களுக்குள்ளே விளங்குகின்ற ஒரு திலகம்போல, சிறந்த
திருமேனியுடையவராகி, தேவியாரும் பக்கலில் வரவும், அரியவேதமுணர்ந்த முனி
வர்கள் புடைசூழவும் வந்து வங்காளமென்று சொல்லுஞ் சிறந்த நகரத்தின் வீதிவழியே
சென்று, அத்திரிபுரன் மாளிகையை யடைந்தனர். எ - று.

அரியணை பொலிய வைகி யாசுவீற் றிருக்கு மன்னன்
திரிபுர னெதிர்ந்து கண்டு [illegible] தெழு வெதிரே சென்று
[illegible] பலரைத் தேய்த்து [illegible] யவ் வரசி னானை
யுரிமையின் [illegible] போதத் தொளிர்தவி ருந்தித் தொல்லைப் பூ.

(இ - ள்) சிங்காசனத்தில் அழகுறவிருந்து [illegible]
மையுடைய திரிபுரன் கண்டு, அன்பானது அதிகரித்தெழுதலால் [illegible]

முத்தலைச் சூலத் தண்ணன் முறையுளி வழிபா டாற்ற
நித்தலும் பூசை கொண்டு நின்மலக் கணேசர் வைகு
மத்தரு மூர்த்தி தன்னை யளித்திடல் வேண்டு மென்றங்
குத்தம மறையோன் சொல்ல வுவந்தவ னுரைக்க லுற்றான்.

(இ - ள்.) முத்தலைவாய்ந்த சூலப்படை தாங்கிய சிவபெருமான் முறைப்படி வழிபாடுசெய்ய நாடோறும் பூசையைக்கொண்டு நிர்மலராகிய கணேசப்பெருமான் எழுந்தருளியுள்ள அந்தத் தருவாகிய மூர்த்தியைக் கொடுக்கவேண்டும் என்று உத்தமவேதியர் கூற, அத்திரிபுரன் களித்துச் சொல்கின்றான். எ - று. (௩௰)

அங்கநான் மறைக டேர்ந்த வந்தணா வந்த மூர்த்தி
சங்கரன் பால தென்று தளரலை யதனை யந்தச்
சங்கரன் விண்டு வாதி சகலவிண் ணவர்க ளோடு
மிங்குநின் முன்ன ருய்ப்பே னென்வலி யறிக வென்று.

(இ - ள்.) ஆறு அங்கங்களும், நான்குவேதங்களுந் தேர்ந்தவேதியரே! (நீர் சொல்லும் சிந்தாமணியென்னும்) அந்தமூர்த்தி சிவபெருமானிடத்தினதென்று மனந்தளராதீர்கள். அம்மூர்த்தியை அந்தச் சிவபிரான் திருமால்முதலிய எல்லாத்தேவர்களோடும் இவ்விடத்தில் உன்முன்னே வருவிப்பேன். என் வல்லமையை யறியக்கடவாயென்று எ - று.

வேதாங்கம்—மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம் - நிருத்தம் - சோதிடமெனப்படும். (௩௧)

தண்ணடை பத்துந் தூசுந் தமனியக் குவையு மென்று
மன்னுதல் புரியாத் தேசு வளாமணி பலவு நல்கி
யண்ணலே சிலநாட் குள்ளே யழைப்பித்துத் தருது மிங்கே
நண்ணிவாழ்ந் திருக்க வென்று நயந்துகை குவித்து நின்றான்.

(இ - ள்.) பத்துத் தண்ணடைகளும், ஆடையும், பொற்குவியலும், எக்காலத்துங் கெடாத ஒளிவீசும் பலரத்தினங்களுங்கொடுத்து, பெருமையுடையவரே! (அதனைச்) சிலதினங்களிலே வருவித்துக்கொடுப்போம். இவ்விடத்திற் பொருந்தி வசித்திருக்கவேண்டுமென்று கூறிக் கைகூப்பிநின்றனன். எ - று.

தண்ணடை - வயல். (௩௨)

முப்புரன் மொழியக் கேட்டு முகமலர்ந் தந்த ணாள
னிப்புரந் தனக்குப் பாங்க ரிலகிய வனத்து வாழ்து
மொப்பிலா மூர்த்தி தன்னை யொய்யெனத் தருக வென்று
செப்பினா னாசீர் வாதஞ் செய்தன னெழுந்து போனான்.

(இ - ள்.) திரிபுரன் (அங்ஙனஞ்) சொல்லக்கேட்டு, வேதியர் முகமலர்ச்சியுற்று, இந்நகரத்தின் பக்கலிற் பிரகாசிக்கின்ற வனத்திலிருக்கின்றோம். சமானமில்லாத அந்தச் சிந்தாமணிமூர்த்தியை விரைவிற்கொடுப்பாயாக வென்றுசொல்லி, ஆசீர்வாதஞ்செய்து எழுந்துபோயினர். (௩௩)

கொக்கொ.... வீப்பொற் கெழுஞ்சிக ளாகவு
மூக்கு கூம்புத யாசல மாகவும்.

(இ - ள்.) மந்தரகிரிமேல் கூட்டமாகவும், ஆகாயமளாவிய ஆண்மையுடைய இமயகிரி மிக்க ஒளிபொருந்திய அழகிய கொடிஞ்சிகளாகவும், உதயகிரி செலுத்து கின்ற கூம்பாகவும். எ - று.

கொடிஞ்சி - தேர்மொட்டு. (௫)

வழுவி லேனைய மால்வரை யாவையுந்
தழுவு தூணிரை யாகவுந் தத்துவங்
குழிசி யாகவுங் கொண்டற் குழாமெலாங்
கெழுமு கின்ற கிடுகுக ளாகவும்.

(இ - ள்.) தவறுதலில்லாத மற்றையபெரிய மலைகளெல்லாம் பொருந்திய தூண்வரிசையாகவும், தத்துவங்கள் குடமாகவும், மேககூட்டங்களெல்லாம் விளங்குகின்ற இடுகுகளாகவும். எ - று

இடுகு - சுற்றுமரம். (௬)

காம மாதியுங் கன்மேந் தியங்களு
மேம மார்ந்தஞா னேந்திய மெனபவுஞ்
சேம வாபர ணத்திர ளாகவும்
வாம வண்டங்கள் மாலைக ளாகவும்.

(இ - ள்.) காமமுதலியனவும் கன்மேந்தியங்களும் மேன்மைதங்கிய ஞானேந்தியங்களென்று சொல்லப்படுவனவும் சேமமாகிய ஆபரணத்திரளாகவும், அழகிய அண்டங்கள் மாலைகளாகவும். எ - று. (௭)

புராண மங்கம் புணாமணி யாகவும்
விராவு டுக்கள் விதானங்க ளாகவு
முராவு மேழ்கட லொண்டிரை யாகவும
பராம ருந்துவா தாமபடி யாகவும்.

(இ - ள்.) (பதினெண்) புராணங்களும், (ஆறு) அங்கங்களும் கட்டிய மணிகளாகவும், கலந்துள்ள நட்சத்திரங்கள் விதானங்களாகவும், மோதுகின்றசத்த சமுத்திரங்கள் ஒள்ளிய திரைச்சீலைகளாகவும், தகுதிகத்தக்க (அட்ட)மருந்துகசளா படிக்கட்டுகளாகவும். எ - று. (௮)

கங்கை யாதிக் கடவு ணதியெலாம்
பொங்கு சாமரை வீசிடு பூவைய
ரங்க ளாகவு மற்றைய வாறெலாம்
பங்க மில்லாப் பதாகைக ளாகவும்.

(இ - ள்.) கங்கைமுதலிய தேவநதிகள் யாவும் அவ்விடத்தில் உயர்கின்ற சாமரைவீசும் பூவைமாரும் பெண்களாகவும், பிறநதிகள யாவுங் கெடுதலில்லாத கொடிகளாகவும். எ - று. (௯)

திதியும் வாரமுஞ் சேர்ந்தான் ளுள்களுங்
கதுவு யோகக் கடப்பென வாகவு

சிறந்தமலர்களை அங்கையிலேகொண்டு அர்ச்சித்துப்பணிந்து அழகுறத் துதித்து நின்று மலரவிந்தராகிய சிவபெருமானுக்கு அன்புடன் (பின்வருமாறு) சொல்கின்றார்கள். எ - று. (௧௪)

ஏறு மூர்தியு மூர்களே யாகிய வொருத்தற்
காரு மாழ்கினே மடிகளா ரவனுயி ரடர்ப்பச்
சேரும் வையமே வையமாத் திணிசிலை சிலையாச்
சாரு மாறுசெய் தாமவை தழுவுக வென்றார்.

(இ - ள்.) ஏறிநடத்தும் வாகனங்களும் ஊர்களேயாகவுள்ள ஒப்பற்ற திரிபுரனுக்கு எல்லோருந் துன்பமடைந்தோம். சுவாமிகள் அவன் பிராணனைக் கொல்லும்படி ஏறத்தக்க இரதம் பூமியாகவும், வலியவில் (மேரு) மலையாகவும் பொருந்தும் வகையாகச் செய்தோம். அவைகளைக் கொண்டருள்கவென்றார்கள். எ - று. (௧௫)

உரைத்த தேவர்க ளொள்ளிய வாசகங் கேளா
விரைத்த பூங்குழல் மாதொடும் விமலனு மெழுந்து
நிரைத்த மாமணி நீடுகோ புரத்தலை நீங்கிக்
குரைத்த தூமணித் தேர்விழி குளிர்ப்பநோக் கினரால்.

(இ - ள்.) (அவ்வாறு) சொல்லிய தேவர்களது ஒள்ளியவாசகத்தைக் கேட்டு, மணந்தங்கிய மலர்மாலையணிந்த கூந்தலையுடைய உமாதேவியாருடன் சிவபிரானு மெழுந்து, வரிசைபடத்தொடுத்த பெரியமணிகளையுடைய உயர்ந்த கோபுரத்தலைவாயிலை நீங்கி, ஒலிக்கின்ற புனிதமான மணிகள்கட்டிய தேரைக் கண்குளிரும்படி கண்டனர். எ - று. (௧௬)

உவகை பூத்தன ரும்பரார் முகத்தினை நோக்கிக்
கவலை தீர்ந்தினிக் களிப்பொடு மிருமினே யுங்கட்
கவல மாக்குமுப் புரத்தையு மரைக்கணத் தவித்துச்
சிவமெ லாந்தரு வாமெனக் கோயிலுட் சென்றார்.

(இ - ள்.) திருவுள்ளங்களித்துத் தேவர்கள் முகத்தைப்பார்த்து, இனி மனக்கவலையொழித்துக் களிப்புடனிருப்பீர்களாக. உங்கட்குத் துன்புவிளைக்குந் திரிபுரங்களையும் அரைவிநாடியில் அழித்து, எல்லா மங்கலங்களையுங் கொடுப்போமென்று, திருக்கோயிலுட்சென்றனர். எ - று. (௧௭)

ஆய காலையிற் றிரிபுரன் விடுத்தவந் தூதர்
மேயி னாரவன் விளம்பிய வுரையெலாம் விரிப்பச்
சீயி ராதவ னமர்க்குறச் செப்புகென் றவரை
யேயி னார்புர மெரிப்பதற் குபாயமெண் ணினரால்.

(இ - ள்.) ஆகிய (அந்தச்) சமயத்தில், திரிபுரன் (சிந்தாமணிமூர்த்திக்காக) அனுப்பிய அந்தத் தூதவர்கள் (கைலைக்கு) வந்தார்கள். (சிவபெருமானைத் தரிசித்து) அத்திரிபுரன்கூறிய சொற்களையெல்லாஞ் சொல்ல, செல்வமில்லாத அத்திரிபுரனைப் போருக்கு வரச்சொல்லுகவென்று அவரைவிடுத்து, முப்புரங்களை யழிப்பதற்கு உபாயஞ்செய்வாராயினர். (௧௮)

தனித்தொரு நாதலா லைம்புலக் கருஞ்சாயகங்களை முன்ன மருளத்துக்
குனித்த வில்லியைக் குமைத்தகண் பொருந்திய னிருத்து
மனித்தர் தேவர்க ளுன்மனு வானவோ ரெழுத்தை
யினித்த காதலா லெண்ணிமா தவஞ்செய்தி கனையவர்

(இ - ள்) ஏகமாயிருந்து, பரந்த இருவழிகளும், (மலரம்பு)பாணங்களை முன்னே பிரயோகித்துவிடுத்த கரும்புவில்லையுடைய மன்மதனைப் பொடிபடுத்திய நீவிழி யம முகிழும்படி தியானஞ்செய்து மனிதர்களும் தேவர்களும் காணுதலாகிய கணேசப்பெருமானுடைய ஏகாட்சர மந்திரத்தைமிக்க ஆசையோடு தியானித்துப் பெருந்தவஞ்செய்து இந்நிலை சொல்கின்றார் எ - று (௧௧)

சயசா வேசனே சகலமு மறியுந்தத் துவனே
யயர்வி லாயபடைப் பளிப்பழிப் பருளுங்கா ரணனே
மயரி லாதவ வானவ ரனைவர்க்கு மிறைவ
வுயரு நாதநீ யாதலா லுன்னையா னிரக்கேன்.

(இ - ள்) சர்வேசனே! ஐய! எல்லாவற்றையுமுணருந் தத்துவ சுரூபியே! சோர்விலலாத சிருட்டி திதி சங்காரங்களை யநுக்கிரகிக்குங் காரணமானவனே! மயக்கமில்லாதவனே! தேவர்கள் எல்லோருக்குந் தலைவனே! உயர்வாகிய தலைவன் நீயே யாதலின் உன்னை யான் யாசிக்கின்றேன் எ - று.

எம்பி ரானுன தியற்கையா கியவெழி லுருவ
நம்பி னேற்கெதிர் காட்டுக நாரணன் முதலா
வும்ப ராதிரி புரனுடன் றொடர்ந்துபோய்க் காந்து
செம்பொன் பேருவிற் றெருமந்தா ரிற்றைநாள் காறும்

(இ - ள்) எம்பெருமானே! தேவரீருடைய இயற்கையாகிய அழகிய திருவுருவத்தை, நம்பினவெனக்கு எதிரே காட்டியருள்க. திருமால்முதலாகிய தேவர்கள் திரிபுரனுக்குத் தோற்றுச்சென்று, செம்பொன்மலையாகிய மேருபர்வதத்தில் ஒளித்துக்கொண்டு இன்றுவரையில் வருந்துகின்றார்கள். எ - று. (௨௧)

தெளிக்கத் தக்கவர்க் கருள்செயுந் தேவநின் னருளா
லளிக்கத் தக்கவ ரவரிடர் கனலுபோய்த் தந்தந்
களிக்கத் தக்கவாழ் பதவிகள் கைக்கொளப் புரத்தை
விளிக்கத் தக்கசூழ்ச் சியுமெனக் கருளுதல் வேண்டும்.

(இ - ள்.) அன்புடன் பணியத்தக்கவர்களுக்குத் திருவருள்புரியுந் தேவனே! தேவரீருடைய திருவருளால் அருள்புரியத்தக்கவர்கள் துன்பமகன்று தங்கடங்கள் களிப்புறத்தக்க வாழ்விடமாகிய பதவிகளைக் கைக்கொள்ளும்படி திரிபுரங்களை யழிக்கத்தக்க சூழ்ச்சியையும் எனக்கு அநுக்கிரகஞ் செய்யவேண்டும் எ - று.()

ந்து பூதமு மடங்கலா லையனைக் கூன்ற
சேந்த கைவர்க் கிளைஞரின் றழலின் றிடத்தி

சிந்தை யாதியி னகிலமுஞ் செய்வினைக் கெல்லா
மைந்து மேவுமுட் சாட்சியாய் வயங்குகின் றனையால்.

(இ - ள்.) பஞ்சபூதங்களுந் தேவரீர் கட்டளைவழி நடைபெறுகின்றன. இவ்வுலகமுழுதுந் தேவரீரிடத்தில் விளங்குகின்றது. மனமுதலாகிய எவற்றிற்கும் செய்வினைகளெல்லாவற்றிற்கும் வலிமை தங்கிய சாட்சிபூதமாகித (தேவரீரே) விளங்குகின்றீர். எ - று. (௨௩)

மாயை யாகிய படலத்தி னான்மறைப் புண்டு
தீய காடுசமு சாரமா கியபெரு வனத்துத்
தோயி னோரெலாந் தனுத்தொறு மிகுதவம் விளைத்துத்
தூய ஞானத்தி னானினைத் தொடரானந்த முறுகின்றார்.

(இ - ள்.) மாயையாகிய படலத்தினாலே மறைப்புண்டு, கொடியதாகிய சமுசாரமெனனும் நெருங்கிய வனத்தில், பொருந்தியவர்களெல்லாரும், தனுக்கடோறும் மிக்க தவத்தைச்செய்து புனிதமான ஞானத்தினால் தேவரீரைப் பின்றொடராநின்று ஆனந்தமடைகின்றார்கள். எ - று. (௨௪)

உரிய மாதவம் புரிந்திடு யோகுழப் பவர்க் குளத்தின்
விரியும் வாளொளி யேயக வெளியிவை விலகித்
தெரியு ஞானியர்க் கெங்குமாய்ச் செறிந்தபே ரொளியே
யரிய வான்பொரு ளேயெனப் பராவிநின் றிரந்தார.

(இ - ள்.) உரித்தாகிய பெருந் தவத்தைச் செய்து யோகத்தி லமர்பவர்களுக்கு மனத்தின்கண்ணே விரிந்துதோன்றுஞ் சிறந்த வொளிருபமே! உள்ளும் புறமுமாகிய விவற்றையொழித்துணரும் ஞானவான்கட்கு எவ்விடத்திலுமாக நெருங்கிய பேரொளிப்பிழம்பே! அருமையாகிய சிறந்த பொருளே! என்று துதிசெய்து மனதால்யாசித்தனர். எ - று. (௨௫)

இரந்த தம்பிரான் முகத்தினின் றெம்பிரான் றோன்றிப்
பரந்த தேசமை வதனமும் பத்திருங் கரமுஞ்
சுரந்த பேரொளி முத்தமா லையுஞ்சுட ரணியு
மரந்தை தீர்த்திடு மருளுங்கொண் டாங்கெதிர் நின்றார்.

(இ - ள்.) (இவ்வாறாயாக) யாசித்த சிவபெருமான் முகத்தினின்றும் எமது கணேசப்பெருமான் அவதரித்து, பரவிய தேசசும், ஐந்துதிருமுகங்களும், இருபது திருக்கரங்களும், ஊற்றெடுத்த மிக்க வொளியையுடைய முத்துமாலையும், பிரகாசிக்கின்ற ஆபரணமும், துன்பத்தை யொழிக்குந் திருவருளுங்கொண்டு அவ்விடத்தில் எதிரே தோன்றினர். எ - று (௨௬)

ஆங்கு நின்றருள் கணேசனை யமலனு நோக்கி
யெங்கி ருந்தெழுந் தருளினீ ரிறைவரோ நமக்குத்
தங்கு கின்றநற் பெயரெவன் சாற்றுக வென்றார்
பொங்கு கின்றதன் கருணையின் விநாயகர் புகல்வார்.

(இ - ள்.) அவ்விடத் தெழுந்தருளியுள்ள கணேசப் பெருமானைச் சிவபெருமான் கண்டு, தலைவரோ! தேவரீர் எவ்விடத்திலிருந்து எழுந்தருளினீர்? தேவரீருக்குப்

பொருந்துகின்ற திருநாமம் யாது? கூறியருள்கவென்றனர் அதிகரிக்கின்ற குளிர்ச்சியாகிய கிருபையுடன் விநாயகக்கடவுள் கூறுகின்றார் எ - று. (௨௭)

எம்மை நாடிநீ யிருந்தவம் பலபக விழைத்த
செம்மை யாலுன தானனத் திருமலர் நின்று
மும்மை வையகத் துயிரெலாங் காப்பமுன் வந்தா
மம்ம நம்பெயர் கணேசனென் றறிகநஞ் சயின்றோய்.

(இ - ள்) விடபானஞ்செய்த சிவபிரானே! எம்மைவிரும்பி நீ பல்காலம் பெருந்தவஞ் செய்த தன்மையால் உன்னுடைய முகமாகிய சிறந்த தாமரை மலரினின்று, திரிலோகங்களிலுள்ள ஆன்மாக்களையெல்லாங் காக்கும்படி (உனக்கு) முன்னே தோன்றினம். நம்முடைய திருநாமங் கணேசனென்றறிவாயாக. எ - று. (௨௮)

முக்கு ணத்திராப் பகன்முழு வதும்விளை யாடு
மக்கு ணத்தினே மருந்தவத் தாலடுத் தமையான்
மிக்கு ளத்துறு விழைவெலாம் விரைந்துவேண் டிடுக
விக்க ணத்தருள் வாமென விசனு ருரைப்பார்.

(இ - ள்) முக்குணங்களால் இரவும் பகலும் எப்பொழுதுந் திருவிளையாடல்புரியும் அக்குணமுடையேம். (உமமுடைய) அரிய தவத்தாற் பிரசன்னமாயினமையின், மனதிற்பொருந்திய மிக்க விருப்பங்களையெல்லாம விரைவிற்கேட்டுக்கொள்க. இந்தக்கணத்திலேயே யருளபுரிவாமென்றுகூற, சிவபெருமான் கூறுகின்றார். எ-று.

அல்ல லுற்றிடு மமரர்கண் மகிழ்முப் புரனைக்
கொல்லுஞ் சத்தியைக் கொடுக்கநான் மறைக்குமுன் னாக
வொல்லும பீசத்தி னோடெனக் குன்பெய ராகச்
சொலனு முனைபெய மந்திரந் தொடுத்தருள் புரிக.

(இ - ள்) துன்புறு தேவர்கள் களிப்பெய்தத் திரிபுரனைக், கொல்லுகின்ற வல்லமையைக் கொடுத்தருள்க. நான்கு வேதங்கட்கும் முற்பட்டதாகப் பொருந்திய பீஜாட்சரத்துடன் நும் பெயராகச் சொல்லுகின்ற மந்திரத்தை எனக்கு உபதேசித்தருள்க. எ - று. (௩௦)

அந்த மந்திர வலியினு லாற்றன்முப் புரமும்
வெந்தி டப்புரி வேனென விநாயக ரருள்வார்
நந்தம பீசதா னத்தினு னவையிலா நாம
மைந்து கொண்டநின் றனக்குள தாவது மதியாய்

(இ - ள்.) அந்த மந்திரத்தின் வல்லமையால் வலியமைந்த முப்புரத்தையும வெந்துவிழும்படி செய்வேனென்று (சிவபெருமான்) கூற, விநாயகக்கடவுள் கூறுகின்றார்: நம்முடைய பீஜாட்சரதானத்தினால் குற்றமில்லாத ஐந்துகொண்ட திருநாமம் உனக்குண்டாகுக. எ - று.

உளதாவது - தவ்வீற்று வியங்கோள். (௩௧)

அதனில் வேறுமோர் பீசத்தைக் கூட்டியம் மனுவை
விதமொ டெங்கண ரென்றுபின் விதனையுஞ் சொல்வார்;

வசிய மாதிய வுலககாரியங்கண்மற் றெவையு
நசிவி லாவகை யியற்றினு நாரணன் முதலாக்
கசியு மானிட ரந்தமாக் கலித்தவ ரெவரு
நொசிவி லாதபூ சனையியற் றிடுகநான் முறையால்.

(இ - ள்.) வசிய முதலாகிய மற்றெல்லா உலககாரியங்களுங் கெடுதலில்லாத வகையாகச்செய்தாலும், திருமால்முதலாக இரங்குகின்ற மனிதரிறுதியாகத் தோன்றினவர்களெல்லோரும், (ஆகம) நூன்முறைப்படி அழிவில்லாத (உமக்கு) பூசையைச் செய்யக்கடவர். எ - று. (௩எ)

யாவ ராயினு நினையிறைஞ் சாதுசெய் கருமம்
யாவ தாயினும பயனிலா யிறுகவா னசைவ
மோவி லாவயி ணவமிவை புறவா தாமும
பாவ காரிக ளாகுக நினைபபணி யாரேல.

(இ - ள்.) எவராகிலும் உம்மைப்பணியாது செய்கின்றகாரியம் யாதாயினும் பலனில்லாமலழிக. சிறந்தசைவம் கெடுதலில்லாத வைணவம் (ஆகிய) இம்மதங்களிற் பொருந்தினவர்களும் உம்மை வணங்காராகளாகிற பாவகாரிகளாகக்கடவர்கள். எ - று.

வரங்க ளின்னண மீசுர ரருளுமகிழ்ந்து
கரங்க ளைந்துடைக் கணேசாகட டுளைப்பாதி யார்தம்
புரங்கள் கொல்லநாம் புகன்மனு கணையிடத் தாக
வரங்கள் கொல்லுஞ்சூ லத்திடத் தாகமந் திரிக்க.

(இ - ள்.) சிவபெருமான இவ்வகையாக வரங்கள் கொடுக்கவும், ஐந்து திருக கரங்களையுடைய கணேசப்பெருமான் மகிழ்வுற்று உறுதியாக மொழிகின்றனர். கொடியவரங்களையுடைய திரிபுரங்களையழிக்க நாம கூறிய மந்திரத்தைக் கணையினிடத்திலும வரங்களையழிக்குஞ் சூலத்தினிடத்திலும் அபிமந்திரிக்கக்கடவை. எ - று. ()

விடுக்குங காலையிற் சதமுறை விளம்புக மீள
மடுக்குங காலையி னமமுறை மந்திரித் திடுகென்
றெடுக்கு மின்னரு ளாலியம புதலுமீச னரனோ
தொடுக்கு மனமிகு னனமெனச சார்தமைக் கூவி.

(இ - ள்.) செலுத்துங் காலத்தில் நூறுமுறை உருசசெய்க. மீண்டும் திரும்பப் பெறுகையில் அம்முறையே [நூறுஉரு] மந்திரிக்கவென்று, மிக்க இனியகிருபையுடன் கூறவும், சிவபெருமான் அதிகரிக்கின்ற அன்புடன் நல்லதென்று தேவர்களை விளித்து எ - று (௪0)

பாவ னைக்குமெட் டாப்பரி பூரண ரெமது
பாவ னைக்கெளி தாப்பரின் றிதோவிருக் கின்றார்
பூவ லர்த்தொடை யாதியாற் பூசனை புரிந்து
மேவு மந்திர மாயிரம் விரித்தல ரிடுமின்.

(இ - ள்.) பாவனை செய்தற்கு மெட்டாத பரிபூரணராகிய விநாயகக்கடவுள் எம்முடைய பாவனைக்கு எளிதாக இதோ விளங்கி யிருக்கின்றார், மலர்கள் விகசித்த மாலை முதலியவற்றும் பூசைசெய்து பொருந்திய மந்திரத்தை ஆயிரமுறை ஜபித்து அர்ச்சிக்கக்கடவீர்கள். எ - று. (௪௧)

நமது பீழைக ணொடிக்கு முன்னூறுமென் றருளக்
கமல நேத்திர னாதியோர் கண்ணுத லருள்பெற்
றமல னாகிய கணேசனை யாகம விதியாற்
றமமெ லாமறப் பூசித்தோ தினர்சகத் திரமும்.

(இ - ள்.) உம்முடைய துன்பங்களை நொடிப்பொழுதின் முன்னே யழிப்போம் என்று (சிவபெருமான்) அருளிச்செய்ய, செந்தாமரைக் கண்ணனாகிய திருமால் முதலிய தேவர்கள் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் திருவருளைப்பெற்று, மலரகிதராகிய கணேசப்பெருமானை ஆகமமுறைப்படி (தமது) தாமசகுண முழுவது மழியும்படி பூசித்து, ஆயிரமந்திர ஜபமுஞ் செய்தனர். எ - று. (௪௨)

முக்க ணைங்கர முன்னவ னவர்க்கரு ளொப்பருள்செய்
தக்க னீங்கின னரனவரம் பெற்றதீ தென்று
புக்க மெய்த்தவ வியாதன்முன் கேட்டிடப் புகன்றான்
றொக்க பல்லிதழ்த் தாமரைத் தொன்மையா தனத்தோன்.

(இ - ள்.) மூன்று விழிகளையும் ஐந்து கரங்களையுமுடைய விநாயகக்கடவுள் அவர்களுக்கு மிக்க திருவருள் புரிந்து அங்கிருந்தகன்றனர். சிவபிரான் வரம்பெற்ற வகை யிதுவாகுமென்று, உண்மைத் தவத்தையுடைய வியாசமுனிவன் தன் முன்னிருந்து கேட்கும்படி, நெருங்கிய பல இதழ்களையுடைய தாமரைமலராய பழமையாகிய ஆதனமாகக்கொண்ட பிரமதேவன் கூறினன். எ - று. (௪௩)

படையெலாம்பணி பவர்க்கருள் பரனுமைங் கரனபாற்
படைகொள் வானகதை கேட்டனை பார்த்திப வினிமே
லடைய லார்புர மவ்வர னழித்ததுங் கேளென்
றிடைய றாதுரைப் பானெழின் மாதவப் பிருகு.

(இ - ள்.) அஸ்திரங்களை யெல்லாம் (தம்மை) வணங்குபவர்களுக்குத் திருவருள் புரியுஞ் சிவபெருமானும், விநாயகக்கடவுளிடத்தில் ஆயுதம்பெற்ற சரித்திரத்தைக் கேட்டனை, சோமகாந்த மன்னனே! இனி அச்சிவபெருமான் பகைவரது முப்புரங்களை யழித்ததையுங் கேட்பாயாகவென்று அழகிய பெருந்தவமுடைய பிருகுமுனிவர் விடாது சொல்லத்தொடங்கினர். எ - று. (௪௪)

விமலர் விநாயகரருள்பெறு படலம் முற்றிற்று.

ஆகந் திருவிருத்தம் - ௧௭௯௮

---

## திரிபுரதகனப்படலம்.

அன்பர்க ளுள்ளமே யாலயங் கொளு
மன்பணிப் பூணினார் மற்றென் செய்தனர்
முன்பக ராயெனு முனிவி யாதனுக்
கின்புற நான்முக னியம்பன் மேயினான்.

(இ - ள்.) அடியவர்களுள்ளத்தையே திருக்கோயிலாகக் கொண்டருளும் வலிய சர்ப்பாபரணராகிய அவ்வெம்பெருமான் பின்னர் யாதுசெய்தனர்? முற்படக் கூறுகவென வினவிய வியாதமுனிவனுக்குப் பிரமதேவன் இன்பமுறக் கூறத்தொடங்கினன். எ - று (௧)

எம்பிரான் மறுப்பமீண் டேகுந் தூதர்க
டம்பிரா னாகிய தான வற்பணிந்
தம்பரா மூர்த்தியை யுதவி லானரன்
சிம்புள்போல் வெகுண்டனன் றிரும்பி னோமென்றார்.

(இ - ள்) எம்பெருமானாகிய சிவபெருமான் தடுப்ப, திரும்பிச் செல்லுந் தூதர்கள், தமது தலைவனாகிய திரிபுரனை வணங்கி, சிவபிரான் தேவர்கள் தியானிக்கும் (சிந்தாமணி) மூர்த்தியைக் கொடுத்திலர். சரபப்புட்போலக் கோபித்தனர். நாங்கள் திரும்பி வந்துவிட்டோமென்றனர் எ - று (௨)

கேட்டனன் வெள்ளொளி கிளர நக்கன
னீட்டிய தவப்பய னிறுதி யன்மயிற்
சூட்டணிந் திலங்கு நூலத் தண்ணல்பாற்
கோட்டமுற் றமர்செயக் குறித்திட் டானவன்.

(இ - ள்.) திரிபுரன் (அதனை) கேட்டு, வெள்ளிய ஒளி விளங்கும்படி சிரித்து, தேடிய தவத்தின்பலன் முடிவுசேர்தலால், உச்சிக்கொண்டையுற்று விளங்கிய சூலப்படையேந்திய சிவபெருமானிடத்திற் கோபங்கொண்டு போர்புரிய ஆலோசித்தனன் எ - று. (௩)

பெருவலிச் சண்டனே பிரசண் டன்முதல
வெருவருந் தானவ வீர ராவரும
பொருவறு வரத்தமுப் புரமு மிவ்வயின்
மருவுக வெனவவர் வந்து தொக்கனர்.

(இ - ள்.) மிக்க வலியையுடைய சண்டனும் பிரசண்டனுமுதலிய அஞ்சச் செய்யுந் தானவவீரர்களெல்லோரும் சமானமற்ற வரத்தினையுடைய முப்புரங்களும், இவ்விடத்தில் வந்து சேருகவென, அவர்களும் வந்து சேர்ந்தார்கள். எ - று. (௪)

போருள தாயது புயகண் டினவைத்
தீருமி னினியெனச் செப்பி வீரர்க்குச்
சீருறு பல்வகைச் சிறப்புஞ் செய்தனன்
காருடைக் கொடைப்பெருங் கரத்துத் தானவன்.

(இ - ள்.) போருண்டாயிற்று. இனித் தோட்டினவைத் தீருங்களென்றுகூறி, போர்வீரர்களுக்குச் சீர்தங்கிய பலவகைச் சிறப்புக்களுஞ் செய்தனன். மேகமும் பின்னிடத்தக்க கொடையிற் பெருமை வாய்ந்த கையையுடைய திரிபுரன். எ - று. (௫)

ஊறுறு நாளினு முவகை யெண்மடங்
காருறப் பூங்கழ லார்த்த வீரர்கள்

போருறு நாளினைப் புகழ்ந்து நின்றன
ரோருறு திரிபுர னெழுத லூக்கினான்.

(இ - ள்) நகரங்கள் பொருந்துங் காலத்தைக்காட்டிலும் எண்மடங்கு களிப்புப்பொருந்த வீரக்கழல்கட்டிய போர்வீரர்கள் போர் செருந்தினத்தைப் புகழ்ந்துகொண்டிருந்தார்கள். அழகு பொருந்திய திரிபுரன் படை யெழுதலுக்கு முயன்றனன். எ - று. (௬)

திரிபுரன் படையெழூஉஞ் செய்தி யுன்னியவ்
வரியய னறியொணா வமல நாயக
னரியநந் தியையழைத் தலைப்பி லாதநம்
மெரிசினப் படையெலா மெழுக வென்றனன்.

(இ - ள்.) திரிபுரன் (போர்புரியக்கருதி) படையெழுகின்ற செய்தியைத்தெரிந்து, பிரமனுந் திருமாலும் அறியாத மலரகிதராகிய சிவபெருமான் பொருந்திய திருநந்தி தேவரை விளித்து, கெடுதலில்லாத நம்முடைய எரிகின்ற கோபத்தையுடைய சேனைமுழுதும் போருக்கெழுக வென்றனர். எ - று. (௭)

கூற்றுயிர் குடித்தநங் கழலவன் போரினை
யேற்றன னதலா லிவண்டு நம்முடை
யாற்றல்சால் பெரும்படை யனைத்துஞ் சேர்கெனா
சாற்றினன் முரசினி றறைதக நந்திபோ.

(இ - ள்.) இயமனுயிரைப்பருகிய நமது சிவபெருமான் போர்செய்ய ஏற்றுக்கொண்டனரானபடியால், இப்பொழுது நமமுடைய வல்லமைமிக்க பெரிய சேனை முழுதுஞ் சேருகவென்று திருநந்திதேவர் பேரிகையால் முழக்குவித்தனர் எ - று. (௮)

முரசொலி கேட்டலு மொய்ம்பின் வீரர்கள்
பரசணி கரத்தினா னமைபொற் கோயின்முன்
விரசினர் தேவர்கள் வியூகங் கொண்டுறு
மரசனு மவ்வழி யடுத்து நின்றனன்.

(இ - ள்.) போர்ப்பேரிகையி னொலியைக்கேட்டவுடனே, வலிமைமிக்க வீரர்கள், மழுப்படையேந்திய கையையுடைய சிவபெருமானது அழகிய பொன்னாலாகிய திருக்கோயிலின்முன்னே தேவர்கள் வியூகங்கொண்டு நெருங்கினார்கள். அரசனாகிய திரிபுரனும் அப்பொழுது போருக்கு நெருங்கிநின்றனன். எ - று. (௯)

வேறு.

நந்தி நாயக னண்ணிய படையினை நோக்கி
யந்தி வண்ணர்தந் திருமுன்ன ரடுத்தடி வணங்கி
யெந்தை தானையந் தலைவரு மெறும்படைப் பலவும்
வந்துவா னெழுங் கோயில்வாய் தலின்மருங் கினரால்.

(இ - ள்.) திருநந்திதேவர் ஆங்கடைந்த சேனையைக் கண்ணுற்று, அந்திவண்ணராகிய சிவபெருமானது திருமுன்னேயடுத்து, திருவடியைப் பணிந்து, எந்தையே!

அழகிய சேனைத்தலைவரும், மிக்கவலிமையுடைய பலசேனைகளும் வந்து ஆகாயமளாவிய திருக்கோயிலின் வாயிலிற் பொருந்தினார்கள் எ - று. (௧௦)

பூண்ட வாம்பரித் தேரினைப் பூவணைக் கிழவன்
றூண்டி யுய்த்தன னென்றலுஞ் சுரரிடர் துமிப்ப
மூண்ட காதலின் முன்னவன் முருந்திள முறுவ
னீண்ட வார்குழ லுமையொடு மெழுகெனெ வெழுந்தான்.

(இ - ள்.) தாவிச்செல்லுங் குதிரைகள் பூண்டுள்ள தேரை, தாமரைமலர்ப்பீடத்திலுள்ள பிரமதேவன் செலுத்தினனென்று சொல்லவும், முதற்கடவுளாகிய சிவபெருமான், மயிலிறகின் அடியையொத்த இளமைவாய்ந்த தந்தபந்தியையும் மிக்கு நீண்ட கூந்தலையுமுடைய உமாதேவியாரோடும் தேவர்களுடைய துன்பத்தைக்கெடுக்க அதிகரித்த ஆசையுடன் விரைவாக வெழுந்தனர். எ - று. (௧௧)

அணிப்பொற் பாதுகை யடிமல ரிரண்டினுந் தொடுக்கிப்
பணிப்பொற் பூணுரந் துயல்வரப் பலகைடை கடந்து
மணிப்பொற் கோபுர வாய்தன்முன் வந்துவா வளக்கு
மணிப்பொற் றேரினை யிவர்ந்தன னரன்றன சங்கம்.

(இ - ள்.) அழகிய பொன்னாலாகிய பாதுகையைப் பாததாமரைகளிரண்டிலுந் தொடுத்து, சர்ப்பமாகிய அழகிய ஆபரணமானது திருமார்பிலசையப் பலகடைமேல் கடந்து, நவமணிகளிழைத்த பொன்னாலாகிய திருக்கோபுரவாயிலின் முன்னேவந்து, ஆகாயமளாவிய அழகியபொற்றேரை யாரோகணித்தனர். சங்கங்கள் முழங்கின எ-று.

வெற்றி வானவர் முழுவதும் விளங்குதே ருருவா
யுற்ற மாட்சிமைக் கொப்புற வொளிர்கலை முழுது
முற்று நாண்மதி முடித்ததே போன்மென முடிமேற்
கற்றை யீர்ங்கதிர் கான்றது கவித்தவெண் கவிகை.

(இ - ள்.) வென்றி பொருந்திய தேவர்கள்யாவரும் பிரகாசிக்கின்ற தேரின்வடிவமாகப் பொருந்திய மாட்சிமைக்கு ஒப்புறும்படி, ஒளிசெய்கின்ற கலைகள் முழுவதும் [பதினாறும்] முதிர்ந்துள்ள உவாத்திங்களை முடித்ததுபோலுமென்று சொல்லும்படி, முடியின்மேரிலே வெள்ளியகுடையானது கவித்துக்கொண்டு குளிர்ந்த கற்றையாகிய கிரணங்களைக் கக்கியது. எ - று.

கலைமுழுதும் முற்றும் நாண் மதி - எல்லாக்கலைகளோடும் நிறைந்துள்ள பூரணை நாட்சந்திரன். (௧௨)

மான மானின்பின் னேகிடந் தலைந்தநா மின்று
மான வானெதிர் மருவுதல் பெற்றன மேயென்
றூன வேலைகயா லெழுந்தெழுந் தாடுவ போன்று
கான வார்குழன் மாதரா ரிரட்டுவெண் கவரி.

(இ - ள்.) வாசந்தங்கிய நெடிய கூந்தலையுடைய மாதர்கள் இரட்டுகின்ற வெள்ளிய சாமரைகள் மானத்தையுடைய மானின் பின்னே யிருந்து அலைந்தநாம் இப்போது ஆகாயத்தை நோக்கி எதிரேபொருந்துதல் பெற்றோமென்று உண்டாகிய களிப்பினால் எழுந்தெழுந்து கூத்தாடுவபோன்றன. எ - று.

அழுந்து பட்டவே ழாழியி னகன்றதன் கருணை
கொழுந்து பட்டிக் லவுணன்பாற் கூடலு மாமென்
றெழுந்து பட்டபுன் சினவெரி யீட்டுவார் போலச்
செழுந்து பட்டசாந் தாற்றிகள் சிலரெடுத் தசைத்தார்.

(இ - ள்.) ஆழந்தங்கிய சத்தசமுத்திரங்களைக் காட்டிலும் அதிகரித்த தமது கிருபையானது மிகுந்து, வலிதங்கிய திரிபுரனிடத்திற் கூடுதலுமுண்டாகுமென்று, சிறிது சிறிதாக எழத்தக்க கொடிய கோபமாகிய அக்கினியை யெழுப்புபவர்கள் போல, செழுமைபொருந்திய விசிறிகளைச் சிலரெடுத்து அசைத்தார்கள். எ - று.

முளைத்தெ ழுந்ததே போன்றொளிர் மொய்மணித் தேரின்
வளைத்த வார்திரை யாகிய வாருதி நின்றுந்
திளைத்தெ ழுந்திடு திரைகளே யாமெனச் சிலரால்
விளைத்த வெள்ளொளி வெள்ளைகள் வீசிடப் படுவ.

(இ - ள்.) முளைத்துத் தோன்றியதையே யொத்துப் பிரகாசிக்கின்ற, நெருங்கிய நவமணிமயமான தேரிற்கட்டிய நெடிய திரைச்சீலையாகிய கடலினின் றும் மேற்பட்டெழுந்த அலைகளேயா மென்று சொல்லும்படி, வெள்ளொளிதங்கிய வெண்பாவாடைகள் சிலகணங்களால் வீசிடப்பட்டன. எ - று.

வெண்படாம் வீசுதல் ஓர் உபசாரமாம். (௬௫)

பிண்டு முப்புர நீற்றிட விமலன்மே வுதலாற்
பண்டை நம்பத நாமினிப் படர்குது மெனவுட்
கொண்ட வோகையின் வாளராக் குலங்களா டுவபோ
லண்டர் போற்றநின் றசைவன வாலவட் டங்கள்.

(இ - ள்.) மததாற் பிழைபட்ட முப்புரங்களை நீறுபடுத்தச் சிவபெருமான் எழுந்தருளுவதால், பழைமையாகிய நம்முடைய பதவியை [நாகலோகத்தை] யடைவோமென்று மனதிற்கொண்ட ஆசையுடன், ஒள்ளியநாககூட்டங்கள் கூத்தாடுவன போல, தேவர்கள் துதிசெய்யும்படி ஆலவட்டங்கள் அசைந்தன. எ - று.

பிண்டு - மதத்தாற் பிழைபடுதல் (௬௬)

உடைய நாயக னொருகணை யாலழித் திடுமு
னடைய லாரெயி லகத்தெழி லேனுக்குது மென்னுந்
தொடையி ராகந்தனிக் கொடியிசைச் சுரர்கொடி போற்ற
விடைவி ராவிநின் றசைந்தது விண்ணிடை விளங்க.

(இ - ள்.) (நம்மை அடிமையாக) உடைய சிவபெருமான் ஒரே கணையினால் அழித்தவிடுமுன்னரே, பகைஞரது மும்மதில்களுள்ளுள்ள அழகினைக் காண்போமென்று [illegible]கட்டிய ஒப்பற்ற கொடிகளின் மேலே, தேவர்களுடைய துவசங்கள் போற்றும்படி இடபமானது நின்று ஆகாயத்தில் விளங்க அசைந்தது. எ - று.

[illegible] சல்லரி பணைகிணை கல்ல
[illegible] தாக்குடப் பறைகர டிகைமணி முரசந்

துடித டாரிதண் ணுமைகுளிர் துந்துமி தக்கை
கடிசெய் மொந்தைதொண் டகமிடக் கைதகு ணிச்சம்.

(இ - ள்.) படகம் - ஆகுளி - சல்லரி - பணை - இணை - கல்லவடம் - முழவு - குடப்பறை - கரடிகை - அழகிய முரசம் - துடி - தடாரி - தண்ணுமை - குளிர்ந்த ஓசையையுடைய துந்துமி - தக்கை - காவலைச்செய்யும் மொந்தை - தொண்டகம் - இடைக்கை - தகுணிச்சம். எ - று. (௧௯)

பம்பை தூரியம் பாண்டிலகைப் படலிகை பணிலந்
தும்பு நீரரம் புடையயாழ் துளைபடு கருவி
கம்பி யாதெழு வங்கியங் காகளம் பீலி
யிம்ப ரார்பல வியங்களு மியம்பின கணங்கள்.

(இ - ள்) பம்பை - தூரியம் - பாண்டில் - சிறு படலிகை - பணிலம் - முடியற்ற நரம்புடைய வீணை - துளைகருவிகள் - அடங்காதெழும் ஒலியையுடைய வங்கியம் - காகளம் - பீலி - இன்னும் இவ்வுலகிற் பொருந்தியபலவாத்தியங்களையுஞ் சிவகணங்கள் முழக்கின. எ - று. (௨௦)

கழுக்க டைப்படை முசுண்டி சக்கரம்பிண்டி பால
மெழுக்கு யங்கதை முசலங்கப் பணமிலை ஞாங்கர்
மழுக்கள் வச்சிரங் கேடகம் வாள்சிலை யம்பு
கொழுக்க லப்பைவே லினங்கவண் குளிரிநீள் சலாகை.

(இ - ள்) கழுக்கடை - முசுண்டி - சக்கரம் - பிண்டி - பாலம்-எழுக்குயம் - கதை - முசலம் - கப்பணம் - அச்சவடிவான வேல் - மழுக்கள் - வச்சிரம் - கேடகம் - வாள் - வில் - அம்பு - கொழு - கலப்பை - வேலினம் - கவண்-குளிரி - நெடிய சலாகை. எ - று. (௨௧)

பாச மங்குச முசலஞ்சூ லம்பல குந்தம்
பூசன் மல்கிய சுரிகையா யுதம்புள்ள மீட்டி
வீச தண்டமென் றுரைத்திடு வெய்யபல் படையும்
பேச ருந்திறற் பூதர்கள் பிடித்தன ரார்த்தார்.

(இ - ள்.) பாசம் - அங்குசம் - முசலம் - சூலம்-பலமுடைய குந்தம்-போர்த் தொழின்மிக்க சுரிகை யாயுதம் - புள்ளம் - ஈட்டி - வீசத்தக்க தண்டாயுதம் என்று சொல்லப்பட்ட கொடிய பலஆயுதங்களையும் சொல்லுதற்கரிய வல்லபமுடைய பூதகணத் தலைவர்கள் பிடித்து ஆரவாரித்தார்கள். எ - று.

பிடித்தனர் - முற்றெச்சம். (௨௨)

வேறு.

இலகிய வெழுபத் தெண்ணு யிரங்கோடி வெள்ள
வலிகெழு பூதர் சூழ வார்சிலை யிலக்க னென்னு
மொலிகெழு வீர னைங்கை யொருவனு லருள்பெற் றுங்கப்
பலபடை தமக்கு முன்னே படர்ந்தனன் கொடிஞ்சித் [illegible]

(இ - ள்.) விளங்கிய எழுபத்தெண்ணுயிரங்கோடி வெள்ளமென்னுந் தொகையையுடைய வலிமைமிக்க பூதகணங்கள் புடைசூழ்ந்துவர, நெடியவில்லின்றிபிலக்கனென்னும் கீர்த்திமிகுந்த வீரனொருவன், ஐந்து திருக்கரங்களையுடைய [illegible]ப்பற்ற

கணேசப்பெருமானால் அருள்புரியப்பட்டு, பலசேனைகளுக்கும் முற்பட்டு, கொடிஞ்சியுடைய தேரிலேறிக்கொண்டு சென்றனன். எ - று.

கொடிஞ்சி - தேருறுப்புக்களிலொன்று.

இலக்கன் - கணபதியின் மூத்தமகன். இளையவன் இலாபனெனப்படுவென். ()

ஏதமி லாத வெண்ணா யிரமெனுங் கோடி வெள்ளப்
பூதர்கண் மருங்கு சூழப் பொறித்தழ லும்மா னிற்குங்
கோதைவெஞ் சிலைக்கை வீர பத்திரன் கோப மூள
மாதிர நடுங்க வாமான் மணிப்பொலன் றேரிற் சென்றான்.

(இ - ள்.) குற்றமில்லாத எண்ணாயிரங்கோடி வெள்ளத்தொகையாகிய பூதர்கள் பக்கலிற் சூழும்படி அக்கினிப் பொறிகளைக் கக்கும் மாலைசூடிய வளமமைந்த வில்லேந்திய கையையுடைய வீரபத்திரக்குரிசில், கோபமதிகரிக்கவும், திசைகள் நடுங்கவும், காட்டுப்பசுவைப் பூட்டிய அழகிய மணிகள்பதித்த (வேரேரீ) தேரிலேறிச் சென்றனர். எ - று. (உச)

கூரயி லேந்தி நாலா யிரமெனுங் கோடி வெள்ளச்
சாரதர் மருங்கு சூழச் சண்முகப் பெருமா னீலப்
பாரசலத்தின் மீது பருதிவந் தெழுந்தா லென்னப்
போரணி சிறகர்ப் பேழ்வாய்ப் பொறிமயி லிவர்ந்து சென்றான்.

(இ - ள்.) கூர்மைபொருந்திய வேலாயுதமேந்தி, நாலாயிரங்கோடி வெள்ளத்தொகையாகிய பூதர்கள் புடைசூழ, சுப்பிரமணியக்கடவுள், நீலமாகிய பரப்பையுடைய மலையின் மேலே சூரியன் வந்து தோன்றினாற்போல, போர்த்தொழிலையுடைய அழகிய சிறகையும், பிளவுபட்டவாயையும், புள்ளிகளையுமுடைய மயில்வாகனமூர்ந்து சென்றனர். எ - று.

சண்முகன் - அறுமுகக்கடவுள்; முருகன் (உரு)

வேறு

சிறந்த தேசின்முப் பத்துமுக் கோடிதே வர்களும்
விறந்த வேனைவா னவர்கள்விஞ் சையர்முதற் பலரும்
புறந்தொ டர்ந்தெழப் பூரணா னருள்கொடிந் திரனு
மறந்த ழைத்தநாற் கோட்டுவா ரணங்கடாய் நடந்தான்.

(இ - ள்.) மேம்பட்ட கீர்த்தியையுடைய முப்பத்துமூன்றுகோடி தேவர்களும், வலியமைந்த பிறதேவர்கள் வித்தியாதரர் முதலானோர் பலரும் பக்கலிற்றொடர்ந்து வரும்படி, விநாயகப்பெருமானுடைய திருவருள்பெற்று இந்திரனுங் கொலைத்தொழில்மிக்க நாற்கொம்பினையுடைய (ஐராவதமென்னும் வெள்ளை) யானையின் மேலேறிச் சென்றனன். எ - று. (உசு)

கண்ட னந்திமா காளன்குண் டோதரன் கொற்றங்
கொண்ட முண்டிகோ கன்னனே கசகன்னன் முதலா
[illegible]டு வீரர்கண் மலிபெரும் பூதர்க ளோடு
மண்டர் நாயக னணிமணித் தேர்ப்புறஞ் சூழ்ந்தார்.

(இ - ள்.) கண்டன் - நந்தி - மகாகாளன் - குண்டோதரன் - வெற்றிபொருந்திய முண்டி - கோகன்னன் - கசகன்னன் முதலாகிய நெருங்கிய (பூத)வீரர்கள்) (வலி)

மிக்க பெரிய பூதசைநியத்துடன், தேவநாயகராகிய சிவபெருமானுடைய அழகிய நவரத்தினமயமான இரதத்தின்பக்கலில் (கூட்டமாக) மொய்த்தார்கள். எ - று. (உஎ)

உமைம ணாளரோ னருளினா லுற்றுநான் கடவ
விமைய வோங்கல்பல் வரையொடு மெழுந்துசெல் வதுபோற்
சுமைவி ராவுபல் றேரிடைத் துணைந்துசென் றன்று
லமையு மாமறைப் புரவிபூட் டியவவிர் மணித்தேர்.

(இ - ள்.) உமாதேவி தலைவராகிய சிவபெருமானுடைய கிருபையால், நான் செலுத்த, இமயமலையானது பலமலைகளோடும் எழுந்துசெல்வதுபோல, சிறந்த வேதப்புரவிகட்டிய பிரகாசிக்கின்ற அழகிய தேரானது சுமைபொருந்திய பலதேர்களின் நடுவே விரைந்துசென்றது. எ - று.

நான் என்றது கூறும்பிரமன் தன்னை. (உஅ)

புண்ணி யன்பொலந் தேர்மணிக் காலொடு புனித
நண்ணி ருங்குறட் பூதநா யகரலத் தகு கானு
மண்ணு புண்ணியத் தாலணு வடிவமா யவனி
விண்ண மேறுவ தொத்தது விரைந்தெழு பூழி.

(இ - ள்.) விரைந்தெழுகின்ற புழுதியானது, புண்ணியசொரூபியாகிய சிவபெருமானுடைய பொற்றேரின அழகிய காலும், புனிதம்பொருந்திய பெரிய பூதகணத் தலைவர்களது நலந்தங்கிய காலும்பொருந்திய புண்ணியவசத்தால், பூமியானது அணுவடிவமாகி ஆகாயத்திற்கு ஏறிச்செல்வதையொத்திருந்தது. எ - று. (உகூ)

தேவர் யாவருந் திரண்டொரு தேரென நம்பான்
மேவி னாரவ ரிடங்களு மேவலு மாமென்
றோவி லாவிழை வாலவிரைந் தெழுந்தது மொக்கும்
பாவு பாருரு வாகிய பரந்தெழு தூளி.

(இ - ள்) தேவர்களெல்லாருஞ் சேர்ந்து ஒரு தேர்வடிவாக நம்மிடத்திற்கு வந்தார்கள். (ஆதலின்) அவர்கள் வசிக்கும் இடங்களை நாம் அடைதலுமாகுமென்று, பரந்தபூமியானது கெடுதலில்லாத விருப்பத்துடன் பரவியெழுந்த புழுதிமயமாகி விரைந்து மேலே கிளம்பியதையு மொத்திருக்கும். எ - று. (௩௦)

குடையும் பிச்சமும் பேணம்பா சடையெனக் குலவ
மிடையும் வாள்கதிர் வேலிவை மீனங்க ளாக
வடையுங் கேடக மாமைக ளாகவாத் தியவார்ப்
புடைய சேனைக ளொலிகட லெழுமொத் தனவே.

(இ - ள்) குடைகளும் மயிற்பீலிகளும், நுரையையும் பாசடையையும்போன்று விளங்க, நெருங்கியவாளும் ஒள்ளிய கிரணத்தையுடைய வேலுமாகிய இவை மீன்களாகவும், பொருந்திய கேடகங்கள் ஆமைகளாகவுங்கொண்டு, வாத்தியமுழக்கமுடைய சேனைகள ஒலிக்கின்ற கடல்களேழையு மொத்திருந்தன. எ - று. (௩௧)

சேனை யம்பெருங் கடலிடைத் திரைத்தெழு திரைபோன்
மான மல்கிய பதாகைகள் வயின்வயி னசைந்த

மேனி வந்தெழு துளிநீர் முகந்தெழு மேக
மான விண்ணவர் சொரிமல ரவைமழை போன்ற.

(இ - ள்.) சேனையாகிய அழகிய பெரிய கடலினடுவே மறித்தெழுகின்ற அலைகள்போல, மாட்சிமைமிக்க துவசங்கள் இடங்கடோறு மசைந்தன. மேலே யுயர்ந்தெழுகின்ற துளியாகிய நீரைமொண்டுகொண்டெழுகின்ற மேகத்தைப்போல, தேவர்கள் சொரிகின்ற மலர்கள் மழைபோன்றன. எ - று. (௯௨)

மேக்கு யர்த்திய விழுக்கொடி கூம்பதன்மீது
தாக்கு வல்லிடை சார்ந்தமீ காமனுப் புறத்தி
லூக்க மிக்கெழு தேர்களூர் தொள்ளமா திகளா
மாக்க லம்பொர வள்ளமேற ரோடிய தம்மா.

(இ - ள்.) மேலேயுயர்த்திய பெரிய கொடிகூம்பின்மேலே தங்கிய வலியமைந்த இடைமானது பொருந்திய மீலுமியாகவும், பக்கங்களில், மனஞ்சோராமையோடு மேம்பட்டெழுகின்ற தோகள் நகர்கின்ற தெப்ப முதலியவைகளாகவும் விளங்க, சிவபெருமான் ஆரோகணித்த தேரானது பெரிய மரக்கலத்தைப்போல (சேனையாகிய கடலினிடையே) ஓடியது. எ - று. (௯௩)

மனமும் பின்னிட வயப்பரி வீரர்கண் மணித்தே
ரினமும் பின்னிட வெமபிரா னிரதஞ்சென் றடுப்பக்
கனமும் பின்னிடுங் கனைகுரற் றிரிபுர னறிந்து
சனமும் பின்னிடத் தனிநெடுந் தேர்மிசை யிவர்ந்தான்.

(இ - ள்.) மனவேகமும் பிற்படும்படி, வெற்றிபொருந்திய குதிரைச்சேவகர்களுடைய அழகிய தேர்த்தொகுதிகளும் பின்னிடும்படி, எமது சிவபெருமானுடைய தேரானது (விரைந்து)சென்றுசேர, மேகமும் பின்னிடத்தக்க வெடிபடு குரலையுடைய திரிபுரன் தெரிந்துகொண்டு, தன் சைனியமும் பின்னிடும்படி ஒன்றியாகப் பெரிய தேரின்மேலேறினன். எ - று. (௯௪)

வேறு வேறுசென் றமரினை விளைமின்க ளென்று
வீறு சேர்தரு மைந்தர்க்கும் விளங்குமுப் புரர்க்குங்
கூறி யேறுதன் கொடிஞ்சியந் தேரினைக் குழக
னேறு தேரினுக் கெதிருற விடுத்தன னிமைப்பில்.

(இ - ள்.) வலிதங்கிய புதல்வர்க்கும் விளங்குகின்ற திரிபுரவாசிகளுக்கும் வெவ்வேறுசென்று போர்புரியுங்களென்று கூறிவிடுத்து, (திரிபுரன்) தன்னுடைய கொடிஞ்சியுடைய தேரை (இமைப்பொழுதில்) சிவபெருமான் ஏறிய தேருக்கெதிரே பொருந்தச் செலுத்தினன். எ - று. (௯௫)

அண்டம் யாவையு மரைக்கணத் தவித்திடு மாண்மை
கொண்ட தானவக் குழாம்படை குடங்கைகொண் டார்ப்பக்
கண்டை யாதிகண் முழங்கவெண் கவிகையா திகளு
மண்ட மண்டினன் வரவினை வள்ளலார் பார்த்தார்

(இ - ள்.) அண்டங்களையெல்லாம் அரைவிநாடியில் அழிக்கும் ஆண்மையமைந்த அசுரர்கூட்டமானது ஆயுதங்களைக் குடம்போன்ற கையிற்கொண்டு ஆர்ப்

பரிக்க, வீரக்கழல் முதலியன வொலிசெய்யவும், குடைமுதலியன செருங்கவும் (திரிபுரன்) வருவதைச் சிவபெருமான் கண்டனர். எ - று. (௧௬)

நிணத்தின் மூழ்குவே லேந்துதம வீரர்க ணெடுந்தோண்
மணத்தல் செய்தகண் டிதியை மாற்றுதற் பொருட்டோர்
கணத்தி னீற்றுறும் படைகரத் திருந்துங்கண் ணுதலார்
குணத்தின் மேம்படுந் திரிபுர னொடுபோர் குறித்தார்.

(இ - ள்.) (எதிர்த்த பகைவர்களுடைய) நிணத்திலே குளிக்கும் வேற்படையேந்திய தமது வீரர்களுடைய நெடிய தோளிற்பொருந்திய தினவைமாற்றுதல் காரணமாக, ஓர் விநாடியில் சாம்பராகத்தக்க ஆயுதம தமது திருக்கரத்திலிருந்தும், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான், போர்புரியும் குணத்தின்மேம்பட்ட திரிபுரனுடன் போர்செய்யக் கருதினர். எ - று. (௧௭)

வார மாகிய கணேசனை மதித்துதே வேசர்
பார மேருவில பங்கயச செங்கையிற் பிடித்தார்
தீர னாமுப் புரனுமத் தேவனைத் தொழுது
கோர மாகிய கொடுமரங் குடங்கையி லெடுத்தான்.

(இ - ள்.) தேவதேவராகிய சிவபிரானார் தமக்குரிமையாகிய கணேசப்பெருமானைத் தியானஞ்செய்து, பாரமுள்ள மேருமலையாகிய வில்லைத் தாமரைமலர்போலுஞ் சிவந்த திருக்கரத்திற்றாங்கினர். தீரனான திரிபுரனும் அக்கணேசப்பெருமானைப் பணிந்து, பயங்கரமாகிய தன்வில்லை அங்கையிலெடுத்தனன். எ - று.

விரைது தைந்தவெண் டும்பைசூ டினரிரு வோருங்
குரைது தைந்தவார் சிலைபடு நாணொலி கொளுத்த
வரைது ளங்கின தளும்பின வாருதி யேழுந்
தரைகி ழிந்தன கிழிந்துசாய்ந் தனவண்ட முகடு.

(இ - ள்.) வாசநெருங்கிய வெள்ளிய தும்பைமாலையை இருவருஞ் சூடிக்கொண்டு, ஒலிபொருந்திய நெடிய வில்லினிடத்திற் பொருந்த நாணொலியெழுப்ப [குணத்தொனிசெய்ய] மலைகள்குலுங்கின. கடல்களேழுங் கலங்கின. பூமிபிளவுற்றது. அண்டத்துச்சி பொடிபட்டுச் சாய்ந்தன. எ - று. (௧௯)

தருக்கள் வீழ்ந்தன வீழ்ந்தன தடஞ்சி றைப்பறவை
கருக்க ரைந்தன வுதிர்ந்தன ககனவா னுடுக்க
ளிருக்கு மெண்டிசை யிருவகை நாகமு மிளைந்த
முருக்கு வண்சிலை பூட்டுநாண் முழங்கிய வொலியால்.

(இ - ள்.) வண்மைதங்கிய வில்லுகளை வளையும்படி பூட்டிய நாணானது முழங்கிய ஓசையால், மரங்கள் விழுந்தன. பரந்த சிறகையுடைய பறவைகள் விழுந்தன. கர்ப்பங்கள் கரைபட்டன. ஆகாயத்திலுள்ள பெரிய நட்சத்திரங்கள் (அதிர்ந்து) நிலமிசை உதிர்ந்தன. எட்டுத் திசைகளிலிருக்கும் இருவகை நாகங்களுந் துன்புற்றன. எ - று.

இருவகைநாகம்—பாம்பு - யானை. அஷ்டதிக்ஜங்கள் - ஐராவதம் - புண்டரீகம் - வாமனம் - குமுதம் - அஞ்சனம் - புஷ்பதந்தம்-சார்வபூமம்-சுப்பிரதீபம் என்

பன. இவை கிழக்குமுதல் வடகிழக்கீறாக, முறையே நிற்கும். அஷ்டநாகங்கள் வாசுகி - அநந்தனன் - தக்கன் - சங்கபாலன் - குளிகன் - பதுமன் - மகாபதுமன் - கார்க்கோடகன் என்பன இவையும் முறையே கிழக்குமுதலாக எண்டிசைகளிற் பூமியைத்தாங்காநிற்குமென்பர். (௪0)

பின்கொ டுத்தவர் தூணியிற் பெய்தபா ணங்களையு
முன்கொ டுத்திட முடங்கிய தொருகைமற் றொருகை
முன்கொ டுத்தவில் பின்கொடுக் கிடமுன்னே நிமிர்ந்த
வென்கொ டுத்துமாற் றரியபோ ரிருவரு மிழைத்தார்.

(இ - ள்) பின்பக்கலிலுள்ள நெடிய அம்பறாத்தூணியிற் பெய்துள்ள பல அஸ்திரங்களையும் முன்னே கொடுக்கும்படி முடங்கியதாகிய ஒருகையும், முன்பக்கலிலுள்ள வில்லைப் பின்னே கொடுக்கும்படி முன்னே நிமிர்ந்த மற்றொருகையுமாக, எதனாலும் நீக்க அரியபோரை இருவரும் செய்தார்கள் எ - று. (௪௧)

முருக னோடெதிர்த் தனன்முதிர் பிரசண்டன்
பொருவி னந்தியோ டமர்செய்தனன் பொருந்திறற் சண்டன்
செருவ லாரியோ டேற்றனன் றிரிபுர னமைச்சன்
வருசயந்தனோ டெதிர்த்தனன் மதனெனு மைந்தன்

(இ - ள்.) வலிமிக்க பிரசண்டன் முருகக்கடவுளோடு எதிர்த்தனன். போர்செய்யத்தக்க வல்லபமுடைய சண்டன் ஒப்பில்லாத நந்தியோடு போர்செய்தனன். திரிபுரனுடைய மந்திரி போர்செய்யத்தக்க வலாரியாகிய இந்திரனோடெதிர்த்தனன். மதனென்னும் பெயரையுடைய (அத்திரிபுரன்) மகன் சயந்தனோடு பகைத்தனன் எ-று.

சயந்தன் - இந்திரன் மகன்

மதன் - திரிபுரன் மகன் (௪௨)

ஆலமேயென வழன்றுபொன் னிஞ்சியை யூர்ந்து
காலகூடன்புட் பதந்தனைக் கலந்தமர் புரிந்தான்
சீலவீரபத் திரனொடு மிருப்பெயில் செலுத்திக்
கோலவச்சிர தமிட்டிரன் குயிற்றினன் வெம்போர்.

(இ - ள்.) காலகூடனென்பவன் ஆலாலம்போலவே கொதித்துப் பொன் மதிலைச் செலுத்தி, புட்பதந்தனை யெதிர்த்துப் போர்செய்தனன். அழகிய வச்சிர தமிட்டிரனென்பவன் இரும்புமதிலைச்செலுத்தி, சிறந்த வீரபத்திரரோடு பெரும் போர் செய்தனன். எ - று.

புஷ்பதந்தர் - இவர் விநோதமாகச் சிலமுனிவருடன் நாத்திகம்பேசின பாவத்தைப் பரிகரிக்கும்படி தமது பற்களைக் களைந்து மலராகப் பாவித்துச் சிவார்ச்சனைசெய்ய, அவர் பத்திக்கிரங்கிய பரமபதி அவர்க்குக் காட்சிதந்து புஷ்பதந்தரென நாமமும் இழந்த பற்களை மீண்டும் பெறுகையும் அநுக்கிரகித்தனரென்பது புராண சரிதம். (௪௩)

மள்ளர் பேசற்றிட விமகாயப்பெயர் மன்னன்
வெள்ளி மாமதி லூர்ந்துபோய் விநாயகர் மைந்தன்

நள்ளு றுவிற லிலக்கனைக் கூர்ங் கதனை வைவ்ப
துள்ள வீரருட் புருசண்டி யுருத்துமே லடர்ந்தான்.

(இ-ள்.) போர்வீரர்கள் துதிசெய்யும்படி வீமனாலுகிய பெயரையுடையவன் பெரிய வெள்ளிமதிலைச் செலுத்திக்கொண்டு சென்று விநாயகக்கடவுள் குமாரனுகிய நீக்கப்படாத வல்லபமுடைய இலக்கனை யடைந்தனன். அவனிடத்துள்ள வீராகவிலே புருசண்டி யென்பவன் கோபித்துப் போருக்கு மேற்கொண்டான். எ-று.

கண்ட னாதியாங் கண்ணுத லார்படைத் தலைவா
மிண்டு தானவன் விறற்படைத் தலைவரோ டெதிர்த்தார்
மண்டு பூதர்கண் மறறவன் வயவர்க ளோடு
தண்ட மாதிக்குத் தண்டமா திகளொடு சமர்த்தார.

(இ-ள்.) கண்டன்முதலாகிய சிவபெருமானுடைய சேனைத்தலைவர்கள், மதத்தாற் பிழைபடும் திரிபுரனுடைய வலிய சேனைத்தலைவரோ டெதிர்த்தார்கள். நெருங்கிய பூதவீரர்கள் அவனுடைய போர்வீரர்களோடு தண்டமுதலியவற்றைத் தாங்கினவர்களுக்கு தண்டமுதலியவற்றைத தாங்கினவர்களாக [சமானஸ்தர்களாக]ப் போர் செய்தார்கள். எ-று. (௪௰)

வேறு.

வாளோச்சுவா கணையுந்துவா வடிவேல்பல வெறிவா
ரரளோடற வேழக்கிர ளடுவார்பரி தெறுவார்
தாளோடற விரதத்தொகை தடிவாரெதி தானை
கேளோடற வெறிவார்வின்ல ளிர்பூதர்க டலைவர்.

(இ-ள்) வலிமை விளங்கும் பூததலைவர்கள் வாளால் வெட்டுவார்கள். அத்திரங்களைச செலுத்துவார்கள். கூர்மையாகிய பலவேலாயுதங்களைச் செலுத்துவார்கள். யானைத் தொகுதிகளை ஆளுடன அறும்படி கொல்வார்கள். குதிரைகளைக் கால்சனறும்படி யழிப்பார்கள். இரதகூட்டங்களை வெட்டுவார்கள். சத்துருசேனை கூட்டத்தோடழிய வீசுவார்கள். எ-று. (௪௧)

பார்ப்பார்விழி வெகுளித்தழல் படுவாரிமை நீயத்
தீரப்பார்பல ருயிரைப்பல தேர்ப்பாகரை யடுவா
ரார்ப்பார்கொடி முடிவார்கிலை யறளாளிக ணேண்டித்
தூர்ப்பார்கெடு மொழிவெஞ்சினஞ் சொல்வார்தயித் தியரே.

(இ-ள்.) அசுரர்கள் (தேவகணங்கள் செய்யும்போரைப்) பார்ப்பார்கள்; கண்ணிமை நீயும்படி கோபாக்கினியைக் கக்கிப் பலருயிரை யழிப்பார்கள்; பலதேர்ப்பாகரைக் கொல்வார்கள்; ஆரவாரிப்பார்கள்; கொடியும் கிரீடமும் [illegible] மறும்படி அம்புகளைச் செலுத்தி எங்கும் நிறைப்பார்கள்; வெஞ்சினமாகிய [illegible] மொழிகளைச் சொல்வார்கள். எ-று.

வெஞ்சினம் - கோபமேலசத்தாற் கூறுதல்.

தாளற்றன ரரைபற்றனர் சடாக்குடர் செதரிய
ரளற்றன ருரமற்றனர் கையற்றனர் மதிகை

(இ - ள்.) தாரகாசுரன் - சிறந்தசிங்கமுகன் - ஒப்பற்ற சூரபன்மனுகிய வீரர்கள் மூவரும் மற்றுமோர் வடிவங்கொண்டாற்போன்றவனுகிய பயங்கரமான தோற்றமுடைய பிரசண்டனென்பவன் குமாரக்கடவுள் பக்கலில், உரிமையாகிய படைமுழுவது மழியும்படி போர்செய்தான் எ - று. (௫௨)

கண்டு கந்தவேள் கதுமெனக் கலவமா மயிலை
மண்ட லஞ்செலக் கடவினார் சிலைக்கணை கடைநாட்
கொண்டல் போற்சொரிந் தரைக்கணத் தளவையிற் கொடியோன்
மண்டு சேனையை யழித்தவன் வதனநே ரடுத்தான்.

(இ - ள்) முருகப்பெருமான் கண்டு தோகையையுடைய பெரிய மயில்வாகனத்தை மண்டலவடிவாக வளைத்துச்செலுத்தி நெடியவில்லில் அம்புகளை யூழிக்கால மேகம்போலப் பெய்து, அரைவிநாடிகாலத்திற் கொடியோனுகிய பிரசண்டனுடைய சேனையை யழித்து அவனுக்கு நேரேசென்றனர். எ - று. (௫௩)

நேர்ந்து டும்பிர சண்டன்வா ளிகணிலத் தாக்கி
வார்ந்த வில்லினைத் தேரினை வழங்குபல் படையை
யீர்ந்து வானவப் படைகளு மிறுத்தவன் செய்யுங்
கூர்ந்த மாயையோ டவனையுங் கணையினாற் கொன்றான்.

(இ - ள்.) போர்புரியும் பிரசண்டனுடையஅம்புகளை நிலமிசை விழச்செய்து, பொருந்திய வில்லையும், தேரையும், செலுத்திய பல ஆயுதங்களையும் வெட்டி, தேவாத்திரங்களையு மழித்து, அவன் புரிகின்ற மிக்க மாயையுடன் அவனையும் அம்பினுலே கொன்றனர். எ - று. (௫௪)

சண்ட மாருத மெனப்பொருஞ் சண்டன்சே னைகளைக்
கண்ட துண்டங்க ளாக்கியோர் கடிகையி னந்தி
கொண்ட கொண்டபல் போரையுங் குமைத்துமுக் கணையா
லண்ட ரார்த்திடச் சண்டனு ருயிரையு மழித்தான்.

(இ - ள்.) பெருங்காற்றுபோலப் போர்செய்யுஞ் சண்டனுடையசேனைகளை, நந்தியானவர் ஓர் விநாடியில், கண்டதுண்டங்களாகச்செய்து, அவன்செய்த பலவகைப் போர்களையு மழித்து, மூன்று பாணங்களால் அமரர்கள் ஆர்ப்பரிக்கச் சண்டனுடைய அரிய உயிரையு மழித்தனர். எ - று.

சண்டம்=வேகம். (௫௫)

புட்ப றந்தெனப் பறக்கும்பொன் மதிலினர் தும்பைக்
கட்ப சுந்தொடைக் காலகூ டன்படை விலக்கி
விட்பு லங்கடந் தேர்திரி தரவிடுத் தமர்த்துப்
புட்ப தந்தனைக் கணையினு லவனுடல் பொடித்தான்.

(இ - ள்) பறவை பறந்தாற்போலப் பறந்துசெல்லும் பொன்மதிலேறிய அழகிய தும்பையாகிய தேன்சொரியும் பசிய மலர்மாலையையணிந்த காலகூடனுடைய சேனைகளையகற்றி, ஆகாயத்திலே தன்னுடைய விசாலமான தேரைத் திரியச்செலுத்திப் போர்செய்து அவனுடலைப் புட்பதந்தன் ஐந்து அத்திரங்களாற் பொடிசெய்து கொன்றனன். எ - று. (௫௬)

வெள்ளி யிஞ்சியோ டெதிர்த்திடும் வீமகா யனைநேர்ந்
தெள்ள லில்பல போரொலா மியற்றிமெய் யிரத்தந்
துள்ளி வீழ்ந்துவார் தரப்புரு சுண்டிநாற் கணையா
லள்ளி யுண்டன னக்கரு மவுணனா ருயிரை.

(இ - ள்.) வெள்ளிமதிலோடெதிர்த்த வீமகாயனை யடுத்து, இகழ்வில்லாத பலவகைப் போரைச்செய்து, உடலினின்றுதிரமானது குதித்தோடி யொழுகும்படி, புருசுண்டியென்பவன் நான்கு கணைகளால் அந்தத் தகுதியாகிய அசுரனுடைய அரிய வுயிரையள்ளிப் பருகினன். எ - று. (௫௭)

இருப்பு ஞாசசிறையா டெதிர்ந்தவச் சிரதமிட் டிரனைப்
பொருப்பு நேரபொலந் தேரொடு பொருதுநாற் கணையாற்
செருப்பி னேதென வவுணர்க டெருமரச் செகுத்தான்
விருப்பின் வேள்வியி னமரரா ருயிருண்ட வீரன்.

(இ - ள்) (தக்கனுடைய) யாகத்தில் ஆசையோடு தேவர்களுயிரைக்கொன்ற வீரபத்திரக்கடவுள், இருப்புமதிலோ டெதிர்த்த வச்சிரதமிட்டிர னென்பவனை,மலையையொத்த தேருடன் போர்செய்து, நான்கு பாணங்களாற் பின்னை போரேதென்று சொல்லும்படி, அவுணர் அச்சமடையக் கொன்றனன். எ - று. (௫௮)

வச்சி ரத்தினு லிந்திர னவுணன்மந் திரியைக்
கைச்சி ரத்தையோ டளவில்போர் கண்டுபுள் ளெருவை
நச்சிரத்தநீ ரொழுகிட நகைமணி முடிசே
ரச்சி ரத்தினை யரிந்தன னணிந்தனன் வாகை.

(இ - ள்.) இந்திரனவன் திரிபுரனுடையமந்திரியைவச்சிராயுதத்தைக்கொண்டு,கைச்சிரத்தையுடன் அளவில்லாத போர்செய்து, பறவைகளுங் கழுகுகளும் விரும்பத்தக்க உதிரநீரொழுகும்படி, பிரகாசிக்கின்ற மணிகள பதித்த கிரீடமணிந்த அவனுடைய சிரசையரிந்தனன்; வெற்றிமாலையணிந்தனன். எ - று. (௫௯)

சயந்தன் முப்புரன் றனையனோ டெதிர்ந்தவன் சமர்த்து
வயந்த யங்கிடக் கைப்படை போக்கிமெய் வடிவேல்
புயந்து மேல்வரும் பொருநர்கள் சிரங்களும் புரட்டி
வியந்து விண்ணவா போற்றிட வவனுயிர் விளிந்தான்.

(இ - ள்.) சயந்தன் திரிபுரன்மகனோடெதிர்த்து அவனது போர்வல்லபம் விளங்கும்படி கையிலுள்ள ஆயுதங்களைச்செலுத்தி, அவர்களுடலையும், கூர்மையாகிய வேலையும், கோபித்து மேலேவருகின்ற போர்த்தொழிலாளர்கள் சிரங்களையும் புரட்டி, தேவர்கள் களித்துத் துதிசெய்யும்படி அவனுயிரை யழித்தனன். எ - று. (௬௰)

சிலைவ ளைத்தமர் புரிதருந் திரிபுர னோடு
மலைவ ளைத்தவர் வன்சம ராடிமற் றவன்கைக்
கொலைவ ளைத்தவன் கொடுமரந் துமித்துடன் குழூஉ
மலைவ ளைத்தவா ருதிபொருஉஞ் சேனையு மழித்தார்.

(இ - ள்.) வில்லைவளைத்துப் போர்செய்யுந் திரிபுரனுடன், மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரானார் வன்மைதங்கிய போர்செய்து, அவ்வன் கையிலுள்ள

கொலைத்தொழிலைப் பெருக்கிய வலியவில்லைத் துண்டித்த, அவனுடன் கூடியிருக்கும் அலைகள்பொருந்திய சமுத்திரத்தையொத்த சேனையையு மழித்தனர். எ - று.

வாருதி - நீர் உதித்தற்கிடம். (௬௯)

வேறு கார்முகம் வாங்கினன் வெடிபட வார்த்து
நூறு வாளிக ளூறுநூ றாயிர நொடிப்பி
னேறு மேறுமா லாக்கிய விறைவனூர் கடவுங்
கூறு தேர்மிசைத் தூண்டினன் கொடியபா தகனே.

(இ - ள்.) கொடியபாதகனாகிய திரிபுரன் வேறு வில்லையெடுத்து வெடிபடும்படி யாரவாரித்து, பொடிபடுத்தத்தக்க நூறுநூறாயிரங் கணைகளை விநாடியிலே, ஏறத்தக்க இடபமுந் திருமாலேயாகக்கொண்ட சிவபெருமானார் செலுத்தும் (மேற்) சொல்லிய (பூமியாகிய) தேரின்மேலே செலுத்தினன். எ - று. (௭०)

விடுத்த பத்திர மிமைக்குமுன் விலக்கிவெங் கணைக
டொடுத்து நன்முடி கவசமா ணிகடொடர் மான்றே
ரடுத்த சேமத்தே ரனைத்தையு மறுத்தன னமலன்
படுத்த வேனிலி னொதியென நின்றனன் பதகன்.

(இ - ள்.) திரிபுரன் செலுத்திய அஸ்திரங்களை, புனிதராகிய சிவபெருமானார் இமைகொட்டுமுன்னரே விலக்கி, கொடிய பாணங்களைப் பிரயோகித்து, நல்ல கிரீடம் - கவசம் - அம்பறாத்தூணிகள் - தொடர்ந்துசெல்லுங் குதிரைபூட்டிய தேர்கள் - அடுத்துநின்ற சேமத்தேர்கள் முதலிய வெல்லாவற்றையுந் துண்டித்தனர். (அதனாலே அவன்) மிக்கவேனிற்காலத்து ஒதியமரம்போல நின்றனன். எ - று.

சேமத்தேர் - உதவித்தேர்.

வேனிலினொதியென்றது வேனிற்காலத்து ஒதியமரம் இலைமுதலியன உதிர்ந்து மரமாக நிற்றலின். (௭௧)

முன்னர் நாணிய முப்புரன் முகத்தினை நோக்கி
யென்னை யாளுடை யானினு மெச்சமர் வல்லை
யன்னதாற்றுதி யகன்றுவா வென்றருள் புரியு
முன்னர் மைந்தர்க ளனைவரு முடிந்தவா கேட்டான்.

(இ - ள்.) என்னை யடிமையாகவுடைய சிவபெருமான், தம்முன்னே நாண முற்றுநின்ற திரிபுரன் முகத்தைப்பார்த்து, இன்னுஞ்செய்யத்தக்க எவ்வகைப்போரில் நீ வல்லவன்? அதனை அப்பாற்சென்று யோசித்து விரைவில்வந்து செய்யக்கடவை யென்று திருவாய்மலர்ந்தருளுமுன்னர், தன் புதல்வர்கள் யாவரும் இறந்தமையைக் கேள்வியுற்றனன் (திரிபுரன்.) எ - று. (௭௨)

வாரத் தாலெழு மவலத்தை யாற்றினன் மாறு
வீரத் தாலெழு முளத்தினன் விழுமதின் மூன்றுஞ்
சாரத் தானினைத் தானவை சார்ந்தன வெற்றிற்
கோரத் தானொரு மூவராய்க் குறுகினின் றெதிர்த்தான்.

(இ - ள்.) (புதல்வரிடத்துண்டாகிய) அன்பினாலெழுந்த துன்பத்தை யொழித்தனன். நீங்காத வீரத்தன்மையோடெழுகின்ற மனத்தினால், சிறந்த மும்மதில்களை

யும் வரக்கருதினன். அவை (அங்ஙனமே) வந்தன. அரக்கர்களிற் பயங்கரமாகிய வடிவோடு தானே மூவராகி நின்று எதிரிட்டனன். எ - று. (௬௩)

திண்ணி தாகிய செருப்புரிந் தெயில்களைச் செலுத்தி
விண்ணிற் பாய்குவன் வேலையிற் பாய்குவன் றிசையின்
மண்ணிற் பாய்குவன் பாதலம் பாய்குவன் மாறுறா
கண்ணிற் பாய்குவன் கருத்தினுட் பாய்ந்தகுந் திறலோன்.

(இ - ள்.) எல்லோர் மனங்களிலும்பாய்ந்த கொடிய வலிமையோனாகிய திரிபுரன் வலிதாகிய போரைச்செய்து மும்மதில்களைச் செலுத்தி ஆகாயத்திற் பாய்வான்; கடலிற்பாய்வான்; திசைகளிலும் பூமியிலும் பாய்வான், பாதலத்திற் பாய்வான்; சத்துருக்களைப்போரிற் பாய்வான். எ - று. (௬௪)

உலக நான்கினைத் தலைப்பெயும் பத்துமுள் ளுடைந்த
வலகி லண்டமு நடுங்கின நடுங்கின ரமரர்
ஓலன விந்தன மாதிரத் திரண்டுநா கமுமவான்
குலவு மிஞ்சியோ டவுணன்வன் போர்தொடங் களவில்.

(இ - ள்.) நெருங்கிய மும்மதில்களுடன் திரிபுரன் வலியபோரைத் தொடங்கியபொழுது, பதினான்குலகங்களும் உள்ளுடைந்தன. கணக்கில்லாத அண்டங்களும் நடுங்கின. தேவர்கள் நடுங்கினர். திசைகளிலுள்ள (அஷ்டகஜங்கள் அஷ்டநாகங்க ளென்னும்) இருவகை நாகங்களும் வருந்தின. எ - று.

நான்கினைத் தலைப்பெயும் பத்துமென்றது பதினான்கெனக் கொள்க. (௬௫)

எம்பி ரானுமவ் வண்டேர் வலமிடமுற வியக்கி
யும்பர் மாதிர முதலவை யூற்றுழி யுற்றுக்
கம்ப மாகவன் னுன்புரி மாயையுங் கடந்து
பம்பு போரினிற் பலநெடுங் காலம்பா ணித்தான்.

(இ - ள்.) எமது சிவபெருமானும் வண்மைதங்கிய தேரை வலசாரி இடசாரியாகச் செலுத்தி, ஆகாயந் திசைமுதலிய அவன்சென்ற விடங்களிற்சென்று, கம்பமாகும்படி அத்திரிபுரன்செய்த மாயையையுங் கடந்து, பல நெடுங்காலம் மிகப் போர்செய்தனர். எ - று.

பாணித்தல் - பொழுதுநீட்டித்தல். போரினிற்காலம் பாணித்தான் என்றது போர்த்தொழிலாற் காலம்போக்கினரென்பதாம். (௬௬)

இரந்து தாழ்ந்தவர்க் கிமைக்குமுன் னநம்மையு மீயுங்
கரந்தை சூடிய கடவுளார் கழல்பணிந் தவுணன்
வரந்த ராயென வாங்கலுஞ் செய்புமென் றஞ்சி
யரந்தை வானவ ரமலர்தாள் பணிந்தெழுந் தறைவார்.

(இ - ள்.) யாசித்துப் பணிந்தவர்கட்கு இமைப்பொழுதின் முன்னரே, நம்மையுங் கொடுக்கத்தக்க கரந்தைமாலை சூடிய சிவபெருமானார் திருவடிகளைப் பணிந்து, திரிபுரன் வரத்தை (எனக்குக்) கொடுப்பாயென்று வாங்குதலுமாகுமென்று, துன்புற்ற தேவர்கள் பயந்து, மலரகிதராகிய பரமேச்சுரரது மலர்போன்ற பாதங்களைப் பணிந்து நின்று சொல்வார்கள். எ - று. (௬௭)

கொடிக்கு முன்னுல கனைத்தையு நுண்பொடி யாக
முடிக்கு நீயிர்முப் புரனொடு மூண்டபல் காலம்
வடிக்கும் வான்படை யாற்சமர் புரிமன வெழுச்சி
பிடிக்கு மோர்விளை யாட்டலாற் பேசின்வே றின்றே.

(இ - ள்.) நொடிப்பொழுதிற்கு முன்னே எல்லாவுலகங்களையும் நுண்ணிய பொடியாகச் செய்யுந் தேவரீர் திரிபுரனுடன் எதிர்த்து, கூர்மையாகிய சிறந்த ஆயுதங்களாற் பலகாலம்போர்புரிந்தது திருவுளமானது, கருதத்தக்க தோர் திருவிளையாட்டலாமல், சொல்லுமிடத்தில் வேறில்லை. எ - று. (௭௦)

எமபி ரான்விளை யாட்டினை யாவரே யறிவார்
வமபி லாதபோ ரவுணனே மாதவ முடையா
னும்பர் தாதையின் சிரமத னமனிவ ருலைய
வெம்பு நினையெதிர் நின்றுபல் போர்விளைத் தலினால்

(இ - ள்.) எம்பெருமானுடைய திருவிளையாடலை எவர்தாமறியவல்லவர்? தேவர்கட்குப் பிதாவான பிரமனசிரமும் மன்மதனும் இயமனும அழியும்படி கோபித்த தேவரீர்க்கெதிரே நின்று பலவிதமாகப் போர்புரிந்த தன்மையால் அனபில்லாத போர் செய்யுந்திரிபுரனே பெருந்தவமுடையவனாயினான். எ - று. (௭௧)

யாங்க ணீபுரி போரினை நோக்கலு மாற்றேந்
தேங்கொள் கொன்றையாய் சிறுவரை யவுணனைச் செகுத்து
வீங்கு வாகையை மிலைத்தரு ளாயென விரந்தார்
பாங்கு நின்றவ டானுமப் படிசெய்க வென்றாள்.

(இ - ள்) தேவரீர் செய்யும்போரை அடியேங்கள் பார்க்கவுஞ் சகியோம். தேனொழுகுங் கொன்றைமாலையணிந்தவரே! திரிபுரனையும் அவன்புதல்வரையுங்கொன்று சூடித்த வெற்றிமாலையை யணிந்தருளவேண்டுமென்று (தேவர்கள்)யாசித்தார்கள். பக்கலில நின்ற உமாதேவியாருமஅங்ஙனமே செய்கவெனக் கூறினாள். எ - று.

வாதி னொடொரு காளிபோற் போரினால் வலிய
கோதை வார்சிலை முப்புரன் கொற்றநீ காணப்
போத வாரமர் புரிந்தன மினிப்புரம் பொடிப்பா
மாது காண்டியென் றுரைத்தனா ருதிபிட மயின்றோன்.

(இ - ள்) பார்க்கடலிற் றோன்றிய விடமருந்தியசிவபிரான் (திருத்த) வாதிலே ஒப்பற்ற காளியைப்போல, போரினாலே வல்லவனாகிய மாலைகட்டியநெடிய வில்லேந்திய திரிபுரன் வல்லமையை,நீ காணும்படி பொருந்திய பெரும்போரைச் செய்தோம். இனித் திரிபுரத்தைச் சாம்பர் செய்வோம். பெண்ணே! பார்ப்பாயாகவென்று (உமாதேவியாரைப் பார்த்துக்)கூறி. எ - று. (௭௨)

மாய னாதிபோர் மனத்தையு மளவையுங் கடந்த
தூய னாகிய கணேசமந் திரத்தினைச் சொலலிக்
காயு மூத்தலைச் சூலத்தை விடுத்தனை காணூர்
மேய முப்புரம் பசியொடும வெந்தனை துண்டார்.

(இ - ள்.) திருமால் முதலானவர்கள் மனத்தையும் அளவையுங் கடந்த புனிதராகிய கணேசப்பெருமானுடைய மந்திரத்தைச் சபித்து, எரிகின்ற மூத்தலை

[illegible] முப்புரங்களைச் செலுத்தினமையைக் காணுதலால், பொருந்திய திரிபுரனைப் பலியுடன் கெடுத்தமையைக் கண்டார்கள். எ - று.

பலியென்பது திரிபுரனுக்குரிய முதற்பெயர். (௭௪)

ஆற்றல் சான்றவ ராயினுந் தமயின்மே லான
வாற்ற லாளரோ டெதிர்ந்துமுய் வாரெகொலோ வமரர்
தோற்ற வாண்மையன் புரத்தொடு சூலியின் சினத்தா
னீறுப் பட்டன னென்றிடி னிவ்வுலை யகத்தே.

(இ - ள்.) தேவர்கள் தோல்வியடைந்த ஆண்மைத்தன்மையுடையவனாகிய திரிபுரன் தன் முப்புரங்களோடுஞ் சிவபிரானுடைய கோபத்தால் நீறுசெய்யப்பட்டனனென்றால், விளங்குகின்ற இவ்வுலகத்தில், வல்லமிக்கவர்களாயினும், தம்மைக் காட்டிலும் மேலான வல்லமையுடையவர்களோடு பகைத்தும் பிழைப்பார்களோ? (பிழையார்கள்!) எ - று (௭௫)

கணங்க ளார்த்தன கலித்தது விடைக்கொடி தேர்மேன்
மணங்கொள் கற்பக மலர்மழை சொரிந்தனர் வானோர்
துணங்கை யாடின பேயினத் தொகுகளம் பாடி
யணங்கு தீர்ந்தன ரரிமுத லானவ ரெவரும்.

(இ - ள்.) கணங்கள் ஆரவாரித்தன. இடபக்கொடி களித்தது. தேவர்கள் (சிவபெருமானேறிய) தேரின்மேலே மணம்பொருந்திய கற்பகமலர்மழையைச் சொரிந்தார்கள். பேய்த்தொகுதிகள் துணங்கையாடின. திருமால் முதலியவர்கள் யாவரும் நெருங்கிய போர்க்களத்தைப் பாடித் துன்பொழிந்தார்கள் எ - று

துணங்கை - இருகையு முடக்கிப் பழுப்புடை யொற்றியாடும் ஓர் கூத்து. இதனை, "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத் - துடக்கிய நடையது துணங்கை யாகும்."—என்னுஞ் சூத்திரத்தாலறிக

களம்பாடுதல் பரணியெனப்படும். (௭௬)

எரித்த சூலமீ ளெய்துமுன் முப்புர னிறைவன்
வரித்த பூங்கழற் பதத்திடை வந்தொடுங் கினனால்
விரித்த திகழ்சடை விமலனுக் கன்றுதொட் டெவருந்
தரித்த னார்திரி புராரியென் றுயர்தவத் தனிப்பேர்.

(இ - ள்.) (திரிபுரனுடன் முப்புரத்தைச்) சுட்டெரித்த சூலமானது திரும்பி (சிவபிரானிடம்) சேருமுன்னே, இறைவருடைய அழகிய வீரக்கழல் கட்டிய திருவடியிலே திரிபுரன் வந்தொடுக்கமாயினன். விரிந்த திக்காடையுடைய சிவபெருமானுக்கு அன்றுமுதல் எல்லாருந் திரிபுராரியென்று உயர்வாகிய சிறந்த ஒப்பற்ற திருநாமத்தைத் தரித்தார்கள். எ - று. (௭௭)

[illegible] யாயிருந் தியோகமுந் திசைபயின் றதவிப்
[illegible] பாய்ப்பல போகமும் புரிந்தருள் புனித
[illegible] போர்புரிந் தழிந்தவா னெனின்மலா போகின்
[illegible] [illegible] றனைநயின். *

(இ - ள்.) யோகியாயிருந்து யோகமுத்தியை இனிதாகக் கொடுத்து, போகியாயிருந்து பலபோகங்களையுங் கொடுத்தருள்கின்ற புனிதராகிய சிவபிரான் போர் செய்து அறிவியாமற்போனால், போரிலே யூகமுதலியவற்றை எவர்தாமறிந்து முறைப்படி போர்புரிவார்கள்? எ - று. (எஅ)

விழுந்து சோர்ந்தவன் பூதர்மேல் விழிக்கடை வழங்கி
யெழுந்து வந்தவ ரணங்கிட வெம்பிரான் மீண்டு
கொழுந்து கொண்டெழு வெண்கதிர்க் கயிலையைக் குறுகித்
தொழுந்தொ றுங்கட வுளர்க்கருள் சுரந்துவீற் றிருந்தார்.

(இ - ள்.) (போரில்) விழுந்து சோர்வுற்ற வலிய பூதவீரர்கண்மேலே கடைக்கண்ணோக்கஞ்செய்து, அவர்கள் யாவரும் எழுந்துவந்து வணங்க, எமது சிவபெருமான திருமபி, கொழுந்துவிட்டெழுகின்ற வெள்ளிய கிரணங்களையுடைய கயிலையங்கிரியை யடைந்து, தம்மைப் பணியுந்தோறுந் தேவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்து கொண்டெழுந்தருளி யிருந்தனர். எ - று. (எகூ)

எரியி டத்துநின் றாட்டயர் பெம்பிரான் றனக்குத்
திரிபு ரத்தவ னவிந்தவந் நாட்டிரு விழாவும்
பரிவு றப்புரிந் தரிமுதற் பண்ணவர் பலரு
முரிய தத்தம திருக்கையுற் றுவாழ்ந் தனரால்.

(இ - ள்.) தீயினிடத்து நின்று ஆனந்த திருநடனஞ் செய்தருளும் எம்பெருமானுக்கு, திரிபுரனழிந்த அத்தினத்தில்திருவிழாவும அன்புடன்செய்து,விண்டு முதலிய தேவர்கள் பலருமபொருந்திய தங்கடங்கள் பெரியபதவிகளையடைந்து வாழ்ந்திருந்தார்கள். எ - று. (அ0)

கன்னி மாமதிப் பூரணை காமரும் புரத்தோன்
மன்னு மாருயிர் மாய்ந்தவா றெனமிகு பயனைத்
துன்னு லாலதைப் பாகுளி யென்று சொல்கின்றா
ரன்ன நாளையில் விழாச்செய்வா ரருமபயன் பெறுவார்.

(இ - ள்) புரட்டாசிமாசத்துப் பூரணைத்தினம அழகிய திரிபுரனுடைய அரிய வுயிரொழிந்து தேவர்கள் பெருமபயனை யடைதலால், அத்தினத்தைப் பாகுளியென்று சொல்கின்றார்கள் அந்தத்தினத்திலே (சிவபிரானுக்குத்) திருவிழா செய்பவர்கள் அரிய பயனையடைவார்கள். எ - று. (அக)

அந்த நாளையிற் றத்தம தாற்றலுக் கேற்ப
வெந்தை யார்தமக் கருச்சனை யாதிக ளியற்றிக்
கந்த மார்ந்தநெய்த் தயிலமொன் றாற்கதிர் விளக்கிட்
டுந்து மன்பினாற் போற்றுவார்க் குறுந்தீ வினையே.

(இ - ள்.) அந்நாளில் தங்கடங்கள் சத்திக்கேற்ப, சிவபெருமானுக்கு அருச்சனை முதலியவற்றைச்செய்து, வாசம்பொருந்திய நெய் தயிலமிவற்றில் ஒன்றினால், பிரகாசிக்கின்ற தீபம்வைத்து, தம்மைச்செலுத்தும் அன்பினால் துதிசெய்பவர்களுக்குத் தீவினையானது சம்பந்தப்படாது. எ - று. (அஉ)

அனைய கன்னிமா மதிவரு பூரணை யதனிற்
கனையும வார்கடற் கருவிட் மயின்றவன் பூசை

கணபதிதுணை

ஸ்ரீ கைலாசபரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனத்துக்

கச்சியப்பமுனிவர் அருளிச்செய்த

# தணிகைப்புராணம்

# மூலமும்.

———:O:———

தொண்டமான் புதுகோட்டை இளவரசு

ஸ்ரீமாந். பாலசுப்பிரமணிய ரகுநாத தொண்டமான்

மஹாராஜா அவர்கள் கேள்விப்படி

———:O:———

யாழ்ப்பாணம் இணுவில்

பொ. அம்பிகைபாக உபாத்தியாயர் செய்த

# புத்துரையும்.

———:O:———

இவை

யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை

வி. சபாபதிஐயர் அவர்களது

ஸ்ரீ பூஸ்கர யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

கலியுகம் ருOOக

சார்வரிவருடம் ஆவணிமீ.

[illegible]

பிரதிகூலி [illegible] சதம் ௨0.

கணபதிதுணை

# சிறப்புப்பாயிரம்.

---

யாழ்ப்பாணம் இணுவில்

சித்தாந்த சிரோமணி

## ஸ்ரீமத். க. நடராசையா அவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பேரருளிலருட்கச்சியப்பசாமியருள்திருத்தணிகைப்புராணத்திற்கு
மருவுரைநீசெய்தியெனவளமருவுபுதுவையிளமனனிவையம
வருபுகழ்சேர்பாலசுப்பிரமணியரகுநாதவள்ளல்வகுக்கவராய்ந்து.
திருவமருமூலங்கனல்லோர்தெளியவரும்பதவுரையைச்சிறப்பொடீந்தான். (௧)

எழிலுறுவற்குழியெனுமூர்தனின்மேவுகாராளனியைந்தகேள்வி
விழிநாகத்தரசனெனப்பொறைவாய்ந்தோன்குவளையந்தார்விரவுதோளான
பழிநாவற்றிடுங்கலைப்பொன்னம்பலவனீன்றதனிபாலன்மேன்மை
தொழிலுறுசிவபூசாதுரந்தரன்மெய்ச்சித்தாந்தத்துறைகைகண்டோன். (௨)

இலக்கியமுமிலக்கணமுங்கற்றுணர்ந்தோனிணுவைநகரினிதுவாழ்வோன்
துலக்கமுறுகுருலிங்கசங்கமபத்தியன்கேள்வித்துறையின்மிக்கோன
விலக்கரியவொழுக்கநெறிமேவிநிற்போன்சிவநாமம்விளம்பும்வாயான்
கலக்கமறுமுளத்தவனம்பிகைபாகனென்றுரைக்குங்கவிஞன்றானே. (௩)

---

திருக்கைலாசபரம்பரைத்

திருவண்ணாமலை ஆதீனத்து வித்துவான்

## ஸ்ரீமத். மு. கணேசபண்டிதரவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பொருளரியமொழிக்கச்சியப்பமுனிபுகறணிகைப்புராணத்திறகுத்
தெருவமலிபொருணயமுஞ்சொன்னயமுந்தோன்றவுரைதோற்றுவித்தா
னிருவளமொன்றிணுவைநகரினன்பொன்னம்பலவர்தமக்கிளையர்தமைநதன்
பெருகியநற்கல்வியனம்பிகைபாகக்குரிசில்சிவப்பெட்பினனே.

---

## சிறப்புப்பாயிரம்.

மாதகல் சைவப்பிரசாரகர்

# ஸ்ரீமத். ஏரம்பையரவர்கள் இயற்றிய

## நேரிசை ஆசிரியப்பா.

துடியிடையுமைசேர் வடிவுடையிறைவன்
படிமிசையளித்த நடைகெழுகலைகளும்
வேதமொடாகம மாதிமுன்னூலும்
ஓதியபொருளைப் பேதமின்றிக்
கொண்டதாய்க்குமரனண்டர்கள்வேண்ட
மண்டமர்செய்து தெண்டிரைக்கடலுள்
அன்றொருமாவாய் நின்றிடுஞ்சூரை
வென்றிருபிளவாய் நன்றுபிளத்தலும்
சேவலும்மயிலுமாய்க் கூவிமுன்வரக்கண்
டேவிடுகொடியுந் தாவிடுபரியு
மாய்வரவுயர்த்தலை தேவருங்காணத்
தொண்டதாக்கொண் டெண்டிசைநடாத்திக்
கொண்டவச்செவ்வேண் மண்டலமதிக்கச்
செருத்தணிந்தமர்ந்த வருத்திசேர்தலமாஞ்
செருத்தணிமான்மிய முரைத்தமுன்மொழி
ஆவடுதுறையின் மேவிமெறிஞன் [யை
கச்சியப்பனு முச்சிதமுனிவன்
தென்மொழிதன்னாற் பன்னிடுபுராணத்
தன்னவன்கருத்திற் பின்னமின்றென்று
புலவர்விருந்துணப் புத்துரையெழுதி
நிலவிடச்செய்தனன் நிரந்தபல்வளத்தி
னலமிகுமினுவையா நன்னகர்வேளாண்
குலமதிலுதித்துப் பலவிதகல்வியா
தேர்ந்திடுபொன்னம் பலவனுமுயறுநாற
சார்ந்தவேங்கடா சலையாமுன்கருவிநூ
லாய்ந்தபினிலக்கணம் மாறுமுகநாவலப
பெருமானுரைத்திட விரைவாயோர்ந்து
சைவசித்தாந்தத் ததிக்கடன்மதித்துப
புரிநடராசப் போதமெய்க்குருமுன
முப்பொருளுணர்ந்த மூதறிவாளன
இம்பரினுள்ளா ரியம்பிடு
மம்பிகைபாகனு மாசிரியன்னே.

## நேரிசைவெண்பா.

அம்பிகைபாகப்பெயர்கொளாசிரியனற்றணிகை
யெம்பெருமான்மான்மியத்துக்கின்னுரையை—இன்பாகப்
பாலின்கடல்கடைந்துபண்டமிர்தங்கொண்டதுபோற
சீலம்பெறவுரைத்தான்செய்து.

---

# ஸ்ரீமாந். நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளையவர்களியற்றிய

## கலித்துறை.

பேராயிரமுடையான்சாமினுவைபிறந்தவரு
சீரான்மிகுத்தவனம்பிகைபாகன்செழுந்தமிழ்நூ
லாராய்ந்ததிறந்தவன்பாலனைப்பண்டிதனுக்கிவைத்தோன்
சேரார்தணிகைப்புராணக்குநல்லுரைசேர்த்தனனே.

---

## சிறப்புப்பாயிரம்.

தொண்டமான் புதுக்கோட்டை

ஹைகோர்ட்டு நியாயாதிபதி

### ஸ்ரீமாந். சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தரைத்தலத்திற்கச்சியப்பசாமிதமிழ்க்கிலக்கியமாத்தருமொப்பில்லாத
திருத்தணிகைப்புராணமுறைசெவ்விதின்யாவருமுணரத்தெரிக்கென்றேதும்
விரித்தபுகழ்ப்பாலசுப்பிரமணியரகுநாததொண்டமான்சொற்சென்னி
மிருத்திரவவுரையளித்தானினுவையினம்பிகைபாகனியன்மிக்கோனே.

---

சுன்னாகம்

### ம-ா-ா-ஸ்ரீ. அ. குமாரசுவாமிப்புலவரவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருத்தணிகைத்தலசரிதத்திறங்கூறுந்தொடர்நிலையாஞ்செய்யுட்குண்மைக்
கருத்தணிகைவரத்துணிந்தோருரையியற்றியினிதுபிரகடனஞ் செய்தான்
திருந்தமூறுஞ்சித்தாந்தப்பெருங்கலையுமருங்கலையுஞ்சிறந்தோர்பாங்கின்
அருத்தியொடுங்கற்றுணர்ந்தோனம்பிகைபாகப்பெயர்கொளதிஞன்றனே.

---

### ம-ா-ா-ஸ்ரீ. ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள் இயற்றிய

நேரிசை வெண்பா.

செம்பொன்வரைபோழ்ந்துதேனளித்ததொக்குமே
அம்பிகைபாகனெனுமாசிரியன்—வம்பார்
தணிகைப்புராணத்துச்சாரம்பிழிந்தாய்ந்
தணிகொளுரைதந்தவாறு.

---

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧ | ௧௧ | ஓப்பற்ற | ஒப்பற்ற |
| ௨ | ௪௮ | ஙிழ் | ஙீழ் |
| ௪ | ௨0 | மனதிற் | மனத்திற் |
| ௫ | ௩௧ | திருவடிகளும் | திருவடிகள |
| ௭ | ௧௮ | மனதிற் | மனத்திற் |
| ௭ | ௪௮ | பாததாமரைகளையும் | பாததாமரைகளை |
| ௮ | ௨௧ | நிறைந்த ஆன்ம | நிறைந்த அரிய அன்ப |
| ௧௧ | ௩௯ | பிறிதுமொழிதல் | உவமை |
| ௨௪ | ௧௮ | மயில்கடவி | மயில்கடாவ் ...க்கது |
| ௨௨ | ௩0 | பண்புத்தொகை | ஆய் என்னுஞ் சொல்லுருபு தொ |
| ௨௬ | ௧௯ | களி | கழி |
| | ,, | உளக்கி | உழக்கி |
| ௨[illegible] | ௯ | விலைகொண்டு | வில்லைக்கொண்டு |
| ௩0 | ௪ | களிக்கும் | கழிக்கும் |
| ,, | ௨0 | தளைத்த | தழைத்த |
| ௩௧ | ௪ | எனமுடிக்க | எனவும் முடிக்க. |

சிவமயம்.

# முகவுரை.



திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துக் கச்சியப்பமுனிவர் சமணநூலாகிய சீவகசிந்தாமணியை யாவரும் செய்யுணடை முதலியவற்றால் சிறந்ததெனக் கொண்டாடுதலைக் கண்டு அதுபோல் ஓர்நூல் இயற்றவேண்டுமென்று பாடியருளிய இப்புராணத்திற்கு உரைசெய்யவேண்டும் என்னும் பேராசை பிடர்பிடித்துந்துதலாற சிறியேன் திருவண்ணாமலை யாதீனத்துச் சந்நிதானமா யெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகதேசிகரிடஞ் சென்று விளங்காத அநேகஞ் செய்யுள்கட்குப் பொருள் அவர்கள சொல்லக்கேட்டு அநேகமுறை யுரைசெய்யத் தொடங்கியும் கல்வி யறிவிற்சிறந்த வித்துவான்கள்நோக்கில் நகையாகுமென்றெண்ணி ஒழிந்தேன். இன்னும் எனது பேராசையாலும் தொண்டமான் புதுக்கோட்டை இளவரசு ஸ்ரீமாந். பாலசுப்பிரமணிய ரகுநாத தொண்டமான் மஹாராஜா அவர்கள் கேள்விக்கு ஸ்ரீ. தொண்டமான் புதுக்கோட்டை ஹைகோர்ட்டு மாஜி நியாயாதிபதி ஸ்ரீமான். சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் தைரியப்படுத்தி உதவிபுரிந்தமையாலும் இப்பொழுது இவ்வுரையெழுதி வெளிப்படுத்தத் துணிந்தேன். இவ்வுரையை யெழுதுதற்குப் பெருந்துணைசெய்தவர் சுன்னாகம் ஸ்ரீ. அ. குமாரசுவாமிப்புலவர். இதனை வாசிக்குங் கல்வியறிவுடையோர் அழுக்காறின்றி "நூலுரைபோதகாசாரியர்மூவரு முக்குணவசத்தான் முறைமறந்தறைவரே" எனனுங் கருத்துக்கொண்டு இவ்வுரையிற் பிழைகண்டால் தெரிவிப்பாராயின் யான் நன்றியறிதலுடன் அங்கீகரித்துப் பின் அச்சிடுவிப்பேனென வேண்டிக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்

பொ. அம்பிகைபாகன்.



## ஸ்ரீமாந். சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களியற்றிய உரைக்காப்பு.

திங்கட்சேய்பனிசெஞ்சடையிடர்தொறுந்திரையாற்  
கங்கைகாட்டுதன்னுருவகிகலத்தலிற்கடியும்  
புங்கவன்முதற்புதல்வனைப்பிரணவம்பொருவும்  
துங்கயானையானனத்தனைத்துணைக்கழறொழுவாம்.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# தணிகைப்புராணம்

## மூலமும் உரையும்.

### விநாயகர் காப்பு.

மும்மதத்தனென்றொருபெயர்தனக்குமொய்கூந்தற்
கொம்மைவெம்முலைக்கோற்றொடிக்கொடிச்சியையிலைவேற்
கைம்மலர்த்தனியிளவற்குங்கஃறெனுங்கானத்
தம்மமுந்துபுக்குறுத்தவனடிமலர்பணிவாம்.

(இதன் பதப்பொருள்) முந்து கஃறெனும் கானத்துப் புக்கு - முன்னாளிலே இருண்ட காட்டின்கண் (யானைவடிவாய்ச்) சென்று,—மும்மதத்தன் என்ற ஒரு பெயர் தனக்கும் - மும்மதத்தனென்ற ஒப்பற்ற பெயரைத் தமக்கும்,—மொய் கூந்தல் - மொய்த்த கூந்தலையும்,—கொம்மை வெம் முலை - இளமைபொருந்திய விரும்பத்தக்க முலையையும்,—கோல் தொடி கொடிச்சியை - திரண்ட வளையலையுமுடைய வள்ளிநாயகியை,—இலை வேல் கைமலர்த்தனி இளவற்கும் - இலைத்தொழிலமைந்த வேற்படையைத்தரித்த திருக்கரமலரையுடைய ஒப்பற்ற முருகக்கடவுளுக்கும்,—உறுத்தவன் அடிமலர் பணிவாம் - சேர்த்தருளிய விநாயகக்கடவுளுடைய பாதாரவிந்தங்களை வணங்குவாம். என்றவாறு.

"எவ்வயிற்பெயரும்வெளிப்படத்தோன்றி யவ்வியனிலையல்செவ்விதென்ப" என்பதனால் யாம் என்னும் எழுவாய் தோன்[illegible]ல் நின்று பணிவாம் என்னும் பயனிலைகொண்டது. அம்ம - உரையசை. எ[illegible]னவும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது. கோல் - திரட்சி. அதனை "தண்[illegible]மாகழ்பிணிநிவந்தபாசடைத்தாமரைமுகை நிமிர்ந்தன்னபோலும்முத்துக்கோலவிர்தொடி என்னும்நல்லந்துவனார் கலித்தொகையானுமுணர்க. கஃறெனுமென்றது இருளைக்காட்டுவதோர் குறிப்புமொழி. அதனைத் தொல்காப்பியம் மொழிமரபு. "உருவினுமிசையினுமென்னுஞ் சூத்திரவுரையிற்காண்க." தனக்கு மும்மதத்தனென்ற பெயரையும் இளவற்கு வள்ளிநாயகியையும் உறுத்தவனென்றது யானையுருப்புக் கழுத்துக்குமேலன்றி இன்மையால் மும்மதத்தனுதல் சாலாதென்னு மாசங்கையைநீக்கி இந்நூலாசிரியர் தந்துணிபுரைத்தவாறு. பெயரையும் கொடிச்சியையும் தனக்கும் இளையோற்கும் உறுத்தவனெனவே தாமெடுத்துக்கொண்ட இந்நூலையும் இடையூற்றினீக்கி இனிதுமுடிக்குமென்பதே கருத்தாகக் கொள்க. இனனும் முந்து புக்குறுத்தவனென்னுஞ் சொல்லாற்றலால், எல்லாவற்றிற்கும் முதலிலுள்ள உண்மையிற் பிரணவரூபமாயிருந்து பிரபஞ்சத்தைத் நிலைப்படுத்துவான் என்னுமொருபொருளுந் தோன்றினமை யறிக. விநாயகக்கடவுள் மூலாதாரத்தினு முன்மனூர்தத்தினு மிருத்தலை ஆகமங்களிற் காண்க.

வேறு.

ஊற்றிருக்குமதக்கலுழியுன்னுமடியாருளத்துக்கறையைமண்ணக்
கூற்றிருக்குங்கூர்நுதிவெண்கோடுவெளிற்றறிவிரண்டுங்குமைப்பமேனி
தோற்றிருக்குமளப்பரியசுடர்நிறைப்பத்தோரணகம்பத்தெஞ்ஞான்றும்
வீற்றிருக்கும்பெருமானைவிரைமலர்தூய்ப்பணிந்தெழுந்தெம்மெலிவுதீர்வாம்.

(இ—ள்.) ஊற்று இருக்கும் மதக்கலுழி - ஊறுதலையுடையமத மதமாகிய கலங்கல் நீர்,—உன்னும் அடியார் உளத்துக் கறையை மண்ண,—தம்மைநினைக்கும் அடியாருள்ளத் (தஞ்ஞானமாகிய)கறையைக் கழுவவும்,—கூற்று இருக்கும் கூர் நுதி வெண் கோடு- கொலைத்தொழில்பொருந்திய கூரியநுனியையுடைய வெள்ளிய திருக்கோடானது,—வெளிற்று அறிவு இரண்டும் குமைப்ப-(அவருள்ளத்துப பாசஞானம் பசுஞானமாகிய) வெற்றறிவிரண்டையுமழிக்கவும்,—மேனி தோற்று இருக்கும் அளப்பு அரிய சுடர் நிறைப்ப-திருமேனியானது எவற்றையும் அளந்துகாட்டும் வேதங்களும் அளத்தற்கரிய (பரஞானமாகிய)சுடரை அவருள்ளத்துநிறைக்கவும்,—தோரண கம்பத்து எஞ்ஞான்றும் வீற்றிருக்கும் பெருமானை - தோரணகம்பத்தில் எப்பொழுதும் வீற்றிருந்தருளிய விநாயகக்கடவுளை,—விரை மலர் தூய்ப் பணிந்து எழுந்து எம் மெலிவு தீர்வாம் - மணம்பொருந்திய மலரைத் தூவி வணங்கி எமதுவருத்தத்தினின்றும்நீங்குவாம். எ—று.

பாசஞானமாவது: நால்வகைவாக்கினால் வரும் சொற்பிரபஞ்சமும் நிலம்முதல் நாதமீறாகிய பொருட்பிரபஞ்சமும் என்னும் இவைபற்றி நிகழும் ஏகதேசஞானம். பசுஞானமாவது: இப்பாசஞானத்தைப்பொருந்திய ஆன்மா இவையனைத்தும் தன்கீழ்வியாப்பியமென்றறிந்து நீங்கித் தான் அவற்றிற்கு மேற்படுதலான் அச்செருக்குக்கொண்டு தானே பிரமமென நினைப்பது. இவைகள் பதிஞானம்போல உள்ளீடின்மையுடற்றி வெளிற்றறிவென்றார். தோரணகம்பம் - வாயிலில் நாட்டப்பட்டதோர் கம்பம். ஏவப்பட்டார் பிழைத்தலரிதாகலில் கூற்றிருக்குங்கூர்நுதிவெண்கோடென்றும். மதசலமானது திருமேனியிலணிந்த சந்தனங் குங்குமத்தோடு கலந்து வருதலின் கலுழியென்றுங்கூறினார். கறை - அழுக்கு. பணிந்தெழுந்தென்பது ஒருசொல். (உ)

## கடவுள் வாழ்த்து.

### சிவபெருமான்.

உலகிருளுருவத்தொளிகளினிரித்தாங்குறுபொருளெவற்றையுந்தெரித்துள்
விலகிருண்முழுதமருள்கொடுதமித்துவிராயொளிர்தன்னையுந்தன்னு
ளிலகுயிர்தனையுந்தெரித்தறிவுறுக்குமியல்பினெக்காலமும்பிறழா
தலகிலற்புதக்கூத்துமையினைக்காட்டிமடிகள்சேவடிகளைப்பணிவாம்.

(இ—ள்.) உலகிருள் உருவத்து ஒளிகளின் இரித்து - உலகத்திலுள்ள புறவிருளை உருவவொளிகளாகிய சோமசூரியாக்கினிகளானீக்கி,—ஆங்கு உறு பொருள் எவற்றையுந் தெரித்து - அவ்வுலகிலுள்ள எப்பொருளையும் கண்ணுக்கு விடயமாகச்செய்து,—விலகு உள் இருள் முழுதும் அருள்கொடு தமித்து - (இச்சாஞானக்கிரியைகளை) மறைக்கும் அகவிருளாகிய ஆணவமலம் முழுதையும் அருளாகிய ஒளிகொண்டு தடிந்து,—விராய் ஒளிர் தன்னையும் - (பெத்தக்காலத்து அறியப்படாது) கலந்தும் (முத்திக்கால

த்து) விளங்கியுமிருக்கும் (பதிப்பொருளாகிய) தம்மையும்,—தன்னால் இலகு உயிர்த னையும் – தம்மால் விளக்க விளங்கும் (பசுவாகிய) ஆன்மாவையும்,—தெரித்து அறிவுறுக்கும் இயல்பின் – தெரிவித் தறிவுறுத்தலாகிய தம்மியல்பினின்றும்,—எக்காலமும் பிறழாது – எந்தக்காலத்தும் மாறுபடாமல்,—அலகு இல் அற்புதக் கூத்து – எண்ணிறந்த அற்புதத்தையுடைய திருக்கூத்தை,—உமையினைக் காட்டும் – உமையம்மைக்குக் காட்டியருளும்,—அடிகள் சே அடிகளைப் பணிவாம் – சிவபிரானுடைய சிவந்த திருவடிகளை வணங்குவாம். எ—று.

அத்து – அல்வழிச்சாரியை. உமையினைக்காட்டும் என்பது "அறிவுடையாரதனவனைக்காட்டென்றானோ" என்பதுபோல வேற்றுமைமயக்கம். விலக்கு - விலகென விகாரமாயிற்று. அற்புதக்கூத்து – பஞ்சகிருத்திய யோக்கியதைபண்ணும நிஷ்களாதிதாடனம்; அது ஆன்மாக்கட்குப் புதிது புதிதாய்த் தோன்ற அருள்செய்தலின் அவ்வாறு கூறப்பட்டது. அருள்கொடு தமித்து எனவே மலத்தீர்வும், விராய்ஒளிர்தன்னையும்தன்றாலிலகுயிர்தனையுந்தெரித்தெனவே ஆராய்ச்சியும், அறிவுறுக்குமியல்பினெக்காலமும் பிறழாதெனவே அநுபவமும், கூறியவாறு. மூலமலமுங் கெடுத்தென்பதுபோதர, இருண்முழுதுமென்றும், நல்வினைநீக்கத்திற் றீவினைசென்றடைதல்போல, புறவொளிநீக்கத்தில் புறவிருள் வருமென்பதுதோன்ற இரித்தென்றும், கடலொடுகலந்த யாற்றுநீர் கடலெனப்படுதலன்றி யாறெனப்படுதலும் மீடலும் இல்லா ததுபோல, சிவத்தொடு கலந்த ஆன்மாச் சிவமெனப்படுவதல்லது திரும்பலும் பசுவெனப்படுதலும் இன்று என்பது தோன்றத் தமித்தென்றுங் கூறினார். "பொன்னிறவைம்புலன்களெல்லாம்பொய்யெனமெய்கண்டான்பொருந்திடுவன்சிவத்தினோடும்போதான்பின்"ா முன்னிற்றநீர்சிறைமுறியமுடுகியோடிமுந்நீர்சேர்ந்தநீராய்ப்பின்னீங்காமுறைபோல்" என்பதனாலும் அறிக. (க)

## சிவசத்தி.

சீரணிசிருக்குமணிவடஞ்சங்குதிகிரிசூலப்படையிலைவேல்
போரணிபாசமங்குசங்கழைவில்பூங்கணைவேறுவேறணியா
வாரணன்மாயனரனிபமுகத்தனனங்கனென்றிவர்தொழிற்கெல்லாங்
காரணமாதறெளித்தருள்கொழிக்குங்கன்னியையுன்னியேத்தெடுப்பாம்.

(இ—ள்.)சீர் அணி சிருக்கு மணிவடம் – சிறப்புப்பொருந்திய செபத்துடுப்பும் அக்கவடமும்,—சங்கு திகிரி– சங்கும்சக்கரமும்,—சூலப்படை இலைவேல்–சூலாயுதமும்இலைத்தொழில்பொருந்திய வேலாயுதமும்,—போர் அணி பாசம் அங்குசம் – போரை அணியாகவுடைய பாசமும் தோட்டியும்,—கழைவில் பூங்கணை – கருப்புவில்லும் மலர்ப்பாணமும் ஆகிய இவற்றை,—வேறு வேறணியா – வேறுவேறாக வணிதலால் (முறையே)—ஆரணன் மாயன் அரன் இபமுகத்தன் அனங்கன்–நான்முகன் நாரணன் அரன் விநாயகன் மன்மதன்,—என்ற இவர் தொழிற்கு எல்லாம்–என்று சொல்லப்பட்ட இவர்கள் தொழில்கட்கெல்லாம்,—காரணமாதல் தெளித்து – தான் காரணமாயிருத்தலைத் தெளிவித்து,—அருள் கொழிக்குங் கன்னியை உன்னி ஏத்தெடுப்பாம் – அருளைக் கொழிக்குஞ் சிவசத்தியை மனத்தானினைந்து வாக்காற்றுதிப்பாம். எ—று (உ)

எனறவென்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொகது. ஏத்தெடுப்பாமென்பது ஒருசொல். சிருக்கு–மாலையென்பாருமுளர். நான்முகன் முதலிய கிருத்தியகர்த்தரு

டைய தொழிலெல்லாம் சிவசத்தியால் நடத்தலால் வெளிப்படையாய் அவ்வச் சத்திரூபங்களிற் றரித்திருக்கும் இவ்வாயுதபேதங்களே கண்கூடாகக் காட்டுமென்பார், இவர் தொழிற்கெல்லாங் காரணமாதற்றெளித் தருள்சொழிச்சுருங்கன்னியென்றார். வேறுவேறணியா என்றதனால் ஐவருக்கும் ஐந்து சத்தியாயிருத்தல்பெறற்றும். "எத்திறனின்றுனிசனத் திறனவளுமிற்பள்" என்பதனு லிவ்வாறு கூறப்பட்டது. (உ)

## ஆபத்சகாய விநாயகக்கடவுள்.

பண்ணியமேந்துங்கரந்தனக்காக்கிப்பானிலாமருப்பமர்திருக்கை
விண்ணவர்க்காக்கியரதனக்கலசவியன்கரந்தந்தைதாய்க்காக்கிக்
கண்ணிலாணவவெங்கரிபிணித்தடக்கிக்கரிசினோற்கிருகையுமாக்கு
மண்ணலைத்தணிகைவரைவளராபத்சகாயனையகந்தழீஇக்களிப்பாம்.

(இ-ள்) பண்ணியம் ஏந்தும் கரம் தனக்கு ஆக்கி - மோதகம் ஏந்தும் திருக்கரத்தைத் தம்பொருட்டாக்கியும், — பால் நிலா மருப்பு அமர் திருக்கை - பாதிச் சந்திரன் போலும் கொம்புபொருந்தா திருக்கரத்தை, — விண்ணவர்க்கு ஆக்கி - தேவர்கட்காக்கியும், — அரதனக் கலச வியன் கரம் - இரத்தின கலசந் தரித்த பெரிய திருக்கரத்தை, — தந்தை தாய்க்கு ஆக்கி - தந்தை தாயர்கட்காக்கியும், — கண் இல் ஆணவ வெம் கரி பிணித்து அடக்கி - அறிவின்மையாகிய ஆணவமலமென்னுங்கொடிய யானையைப் பிணித்து அடக்குதலினால், இருகையுங் கரிசினோற்கு ஆக்கும் - மற்றை இரண்டு திருக்கரத்தையும் அஞ்ஞானியாகிய என் பொருட்டு ஆக்கும், — அண்ணலை - பெருமையையுடையவரை, — தணிகை வரை வளர் ஆபத்சகாயனை - தணிகை வரையி லெழுந்தருளிய ஆபத்சகாய விநாயகக்கடவுளை, — அகந் தழீஇக் களிப்பாம் - மனத்திற் றியானம்பண்ணுதலாற் களிப்படைவாம். எ-று.

கண்-அறிவு. அறிவின்மை அஞ்ஞானமென்னும் பொருட்டு. ஆணவக்கரிபிணித்தகரம் பாசந் தரித்த கரம். அடக்கிய கரம்-அங்குசந் தரித்த கரமெனப் தறிக. விண்ணவருடைய பகையை மாற்றலால் மருப்பமர் திருக்கை விண்ணவர்க்காக்கியென்றும், அபிடேகஞ்செய்தலால் அரதனக் கலச வியன்கரந் தந்தை தாய்க்காக்கியென்றும், ஆணவக் கரியைப் பிணித்தலும் அதன் வலியை அடக்கலுஞ் செய்யும் பாவனையுடைமையால் அங்குச பாசந் தரித்த கரங்களை, கரிசினோற்கு இருகையுமாக்குமென்றுங் கூறினார். அடக்கவென்னு மெச்சம் அடக்கியெனத் திரிந்துநின்றது (௩)

## சுப்பிரமணியக் கடவுள்.

### வேறு.

ஓங்கொளியாய்விசும்பாதிதோறுமியலுந்தனதியல்பையுருவின்மாட்டும்
பாங்குபெற்றதெரித்ததுபோற்பலபொறியாய்ப்பரமாவிழிப்பயந்தஞானத் [கு
தேங்கொளியாய்வெளிப்பட்டாங்குவளிதேர்ட்டாங்கொளனொளிப்பட்டாங்குதெளிநீரப்புக்
நீங்கிவிளையாட்டயர்ந்த தணிகைமாபெருவாழ்வைநினைந்துவாழ்வாம்.

(இ-ள்) ஓங்கு ஒளியாய் - பரஞ்சோதியாய், — விசும்பு ஆதிதோறும் இயலும் - ஆகாயம் முதலிய பூதங்கடோறும் வியாபித்துநிற்கின்ற, — தனது இயல்பை - தமது (சொயம்பிரகாச சத்திச்) சுபாவத்தை, — உருவின் மாட்டும் பாங்குபெற்ற தெரித்ததுபோல - உருவத்தினிடத்தும் உரிமைபெறக் காட்டுதல்போல, — பல பொறியாய்ப் பரமா விழி பய

ந்தஞான்று - பல பொறிகளாயச் சிவபெருமானுடைய திருக்கண்கள் தோற்றுவித்தருளி ய அந்நாளிலே,—தேங்கு ஒளியாய வெளி அடாந்து - நிறைந்த வொளியாய வானத்தில டாந்து,—வளி தொடாந்து - காற்றோடு தொடாந்து,—ஒள்ளொளி படாந்து - அழகிய அக்கி னியோடு சென்று,—தெளிநீர்ப்புக்கு - தெளிந்த நீரினைச் புகுந்து,—நீங்கி - அவ்விடத்தி னின்றும் நீங்கி,—விளையாட்டயர்ந்து தண்ணியமா பெருவாழ்வை - திருவிளையாடல்செய் து அணிமைக்கண் வீற்றிருக்கும் சுப்பிரமணியக்கடவுளை,—நினைந்து வாழ்வாம் - தியானி த்து வாழ்வாம். எ—று.

உரிமை—முன்னிருந்த உரிமை. முதலொடு சினைக்கொற்றுமையுண்மையால் விழிப யந்தஞான்றென்னப்பட்டது. பர்மாவிழிப்பயந்தஞான்றென்பது பாடமாயின், சிவபிரா னதிருக்கண்ணுலீன்றருளிய அந்நாளிலென்றுரைக்க. வாழ்வையுடையபொருள் வாழ்வெ னறுபசரிக்கப்பட்டது. எக்காலத்து மொருதன்மையராயிருத்தலின் பிறிதினியைபு நீக் கிய விசேடணங் கொடுத்துப் பெருவாழ்வென்னப்பட்டது. தெளிநீர்—கங்கையும் சரவ ணவாவியும். (சு)

தெய்வயானையம்மை வள்ளியம்மை.

இறைக்கதித்தசூர்முதலையிறுப்பவரனேயிளையோனானவாற்றான
முறைக்கதித்தவிருசுடரேமுகத்துவிழியெனத்தெரிக்குமுறைமையேய்ப்ப
நறைக்கதித்தமலர்க்கழுநீர் நளினமவன்விழியருகுநலக்கவேந்தி
நிறைக்கதித்தவுளத்தொடிடம்வலமமர்ந்தமாதர்பதநினைத்தல்செய்வாம்.

(இ—ள்) இறைக்கதித்த சூர்முதலை இறுப்ப - இறைத்தொழிலில் மேம்பட்ட சூர னாகிய முதல்வனைச் சங்கரித்தற்கு,—அரனே இளையோனான ஆற்றால் - சிவபெருமான் றானே முருகக்கடவுளாய் வந்த தன்மையால்,—முறைக்கதித்த இருசுடரே முகத்து விழியெ னத் தெரிக்கும் முறைமை ஏய்ப்ப - முறையினால் மிக்க சூரிய சந்திரர்களாகிய இருசுட ருமே இவருடைய முகத்தின்கணுள்ள திருக்கண்களென்று தெரிவிக்கும் முறைமையைப் போல,—நறைக்கதித்த கழுநீர்மலர் நளினமலர் - தேன்மிகுந்த செங்கழுநீர் மலரையும் வெண்டாமரை மலரையும்,—அவன் விழி யருகு நலக்க ஏந்தி - அவருடைய நயனங்களரு கில் நன்மை பெற ஏந்தி,—நிறைக்கதித்த உளத்தொடு - (பதிவிரதாதருமமாகிய) நிறைமி க்க உள்ளத்தோடு,—இடம் வலம் அமர்ந்த மாதர் பதம் நினைத்தல்செய்வாம் - அவருடை ய இடப்பக்கத்தும் வலப்பக்கத்தும் அமர்ந்தருளிய தெய்வயானை வள்ளியம்மையென்னும் இரு மாதருடைய பாதங்களைத் தியானிப்பாம். எ—று.

ஏகாரங்கள் தேற்றப்பொருளில் வந்தன. மலர்பின்னுங் கூட்டப்பட்டது உவமை யால் நளினம்வெண்டாமரையென்றும். இடமும்வலமுமென்னும் உம்மைகள் தொக்கன. சிவபிரானே முருகக்கடவுளாய் வந்தது "ஈறிலாதமாபரமனேகுழவியினுருவாய் ஆறுமா முகங்கொண்டவதரித்தான்" என்பதனாலறிக. நிறை—நெஞ்சைக் கற்பின்வழி நிறுத்தல்.

திருநந்திதேவர்.

வேறு.

கள்ளிகத்தளித்தமலர்த்தலைச்சேக்குங்கடவுணாரணன்முதலயாரோ
ருள்ளகத்தழும்பமலர்ப்பதமமைத்திட்டெலாந்தழும்பவேத்திரத்தின்
வள்ளலங்கமலத்தனிக்கரமமைத்தவரதனைக்கறைவெண்கிரிக்கால
வெள்ளியங்கைலைகாவல்பூண்டருளுமவீரனைவார்கழல்பணிவாம்.

(இ—ள்.) கள் அகம் தளித்த மலர்த்தலைச் சேக்கும் கடவுள் நாரணன் முதல் – தேனானது உண்ணின்று துளித்தலையுடைய தாமரை மலரின்கட் டங்கும் நான்முகக்கடவுள் நாரணக்கடவுள்முதலிய,—வானோர் உள்ளகந் தழும்ப – தேவர்களுடைய உள்ளங்கள் தழும்பேற—மலர்ப்பதம் அமைத்திட்டு – மலர்போலும் திருவடிகளையமையச்செய்து,—உடலெலாந் தழும்ப – அவர்கள் உடலம் முழுதுந் தழும்பேற,—திண் – வலிய,—வள்ளல் அம்கமலம் தனிக்கர வேத்திரம் அமைத்த வரதனை – வள்ளற்றன்மைபொருந்திய அழகிய தாமரை மலரை நிகர்த்த ஒப்பற்ற திருக்கரத்திற்றாங்கிய பிரம்பை யமையச்செய்த மேலானவரை,—சுற்றை வெண்கதிர் கால் – கூட்டமான வெள்ளொளி வீசாநின்ற,—வெள்ளி அம் கயிலை காவல் பூண்டருளும் வீரனை – வெள்ளியங்கைலாயகிரியைக் காக்குந் தொழில்பூண்டருளும் வீரராகிய திருநந்திதேவரை,—வார்கழல் பணிவாம் – நெடிய திருவடிகளினைகண் வணங்குவாம். எ—று.

சாம்பவி தீக்கையாகிய திருவடி திக்கைசெய்தமையால், உள்ளகந்தழும்ப மலர்ப்பதமமைத்திட்டென்றும், பிரம்பாலடித்து நிரைபெறச்செய்தலால்,உடலெலாந் தழும்பக்கர வேத்திரமமைத்த வரதனை என்றுங் கூறினார். கரவேத்திரமமைத்தல்–பரிசதீக்கையெனினுமாம். முதலையயுறிற சினையைக் கண்ணுறுமென்பதோத்தாகலின் கழலின்கண் எனறுரைக்கப்பட்டது. வேண்டுவார் வேண்டியதீதலினாலே வள்ளலங்கமலந் தனிக்கரமெனறார். சேக்தல்–இருத்தல். இது மேல்வருவனவற்றிற்குங் கொள்க.

நவவீரர்.

வேறு.

ஈரவான்மதிமிலைச்சியபொலஞ்சடையிறைவனாருள்கூரக்
காரவாவியகுழலுமைநூபுரக்கதிர்மணியிடைத்தோற்று
நாரவாவியினறுமலர்க்காவிநேர்நயனமாதர்களீன்ற
வீரவாகுவைமுதலியவீரர்தம்விரைமலர்ப்பதம்போற்றி.

(இ—ள்.) ஈரம் வால் மதி மிலைச்சிய பொலம் சடை – குளிர்ச்சிபொருந்திய வெள்ளிய ஞானசந்திரகலையைத் தரித்த பொன்போன்ற சடையையுடைய,—இறைவனார் அருள் கூர – பரமசிவனுடைய திருவருள் மிகுதலினால்,—கார் அவாவிய குழல் உமை – மேகமு மவாவத்தக்க கூந்தலையுடைய உமையம்மையினது,—நூபுரம் கதிர் மணி இடை தோற்றும் – சிலம்பிற்பொருந்திய வொளியையுடைய நவமணிகளினின்றுந் தோற்றிய,—நாரம் வாவியின் நறும் காவிமலர் நேர் – நீரையுடைய வாவிக்கட்பூத்த நறுமையாகிய குவளைமலரை நிகர்த்த,—நயனம் மாதர்கள் ஈன்ற – கண்களையுடைய நவசத்திகளும் ஈன்றருளிய,—வீரவாகுவை முதலிய – வீரவாகுவை முதலாகவுடைய,—வீரர் விரை மலர்ப்பதம் போற்றி – ஒன்பதுவீரர்களுடைய வாசனைபொருந்திய மலரையொத்த திருவடிகளும் நம்மாற் றுதிக்கப்படுவன. எ—று.

தம் – சாரியை. பொன்சடை – பொலன்சடையென ஈறுகெட்டு லகர உயிர்மெய்யும் மகரவொற்றும் பெற்றது. "பொன்னென்கிளவி யீறுகெட முறையின் முன்னர்த் தோன்றும் லகாரம் மகாரம் செய்யுண் மருங்கிற்றொடரியலான" என்பதோத்தாகலின். இறைவனார் உயர்த்தற்கண் ஆர்விகுதிபெற்றது. ஆருளெனப் பிரித்துப் பொருள்கூறுவாருமுளர். தெளிவுபற்றிக் காரவாவியவென இறந்தகாலத்தாற் கூறினார். முன்னோர்

## கடவுள்வாழ்த்து.

ஞான்று சிவபிரானுடைய நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றும் தீப்பொறிகட்கஞ்சியோடிய உமையம்மையினுடைய சிலம்பினின்று முதிர்ந்த நவமணிகளினும் சிவாஞ்ஞையினால் அவ்வம்மையினுடைய சாயைதோன்ற நவசத்திகளுந் தோன்றிச் சிவபிரானிடத் திச்சையுற்றுக் கருப்பமடைந்து வீரவாகுமுதலிய வீரர்களை யீன்றார்களென்பது புரா

### சமயகுரவர்.

### வேறு.

முன்னாலுந்துளைக்கரத்தோன்முருகவேள்பிடித்தெழுந்தமொய்ம்பிற்றாவப்
பின்னாலுங்கதிர்ச்சடிலப்பிஞ்ஞகனாரடித்தொண்டின்பெருக்கவீறு
பொன்னாலும்பெண்ணாலுமறிவுறுத்திவ்வுலகினிடர்பொன்றியாண்ட
வந்நால்வர்பதகமலமகந்தழீஇப்புகழ்ந்திறைஞ்சியரந்தைதீர்வாம்.

(இ—ள்.) முன் நாலும் துளைக்கரத்தோன் முருகவேள் - முற்பக்கத்திற் றூங்கா நின்ற துதிக்கையையுடைய விநாயகக்கடவுளும் முருகக்கடவுளும்,—பிடித்து எழுந்து மொய்ம்பில் தாவ - பிடித்தெழுந்து புயங்களிற் றாவும்படி,—பின் நாலும் கதிர்ச் சடிலப் பிஞ்ஞகனார் - பின்னே தூங்கும் ஒளிபொருந்திய சடையையுடைய சிவபிரானது,—அடித்தொண்டின் பெருக்க வீறு - திருவடித்தொண்டினது பெருக்கப் பெருமையை,—பொன்னாலும் பெண்ணாலும் அறிவுறுத்து - பொன்னினாலும் பெண்ணினாலும் அறிவுறுத்தி,—இவ்வுலகில் இடர் பொன்றி ஆண்ட - இவ்வுலகத்துள்ளாருடைய இடரை யழித்தாண்டருளிய,—அந் நால்வர் பதகமலம் - அந்நாயன்மார் நால்வருடைய பாததாமரைகளையும்,—அகம் தழீஇ புகழ்ந்து இறைஞ்சி - மனதிற் றியானித்துத் துதித்து வணங்கி,—அரந்தை தீர்வாம் - துயரத்தினின்று நீங்குவாம். எ—று.

பொன்றுவித்தென்பதின் பிறவினைப்பொருளையுணர்த்தும் விவ்விகுதி தொக்குப பொன்றியெனநின்றது. தாவப்பின்னாலுமென்பதற்கு, தாவுதலினாற் பின்னே யாடுமெனவுரைத்தலுமொன்று. தமது திருத்தொண்டின் பெருமையாலாகிய வற்புதத்தைக் கண்டோர் சிவனே முதற்கடவுளெனக்கொண்டு வழிபட்டுய்வ துறுதியாதலின், இவ்வுலகினிடர்பொன்றியாண்டவந்நால்வரென்றார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், என்பைப் பெண்ணாக்குதல், [illegible]பெறல், என்னுமிவற்றானும், திருநாவுக்கரசுநாயனார், படிக்காசுபெறல், உழைவாரப்பணியிலகப்பட்ட பொன்னைத் திருக்குளத்தெறிதல், தம்மை மயக்கும்படி இந்திரனேவப்பட்ட தேவதாசிகளுடைய லீலாவிநோதங்கட் குள்ளங்கொடாமையென்னுமிவற்றானும், மாணிக்கவாசகசுவாமிகள், ஊமைப்பெண்ணைப் பேசுவித்தல், பாண்டியன் குதிரைகொள்ளக் கொடுத்த பொன்னை விருப்பின்றி யிறைவனதிருவடிக்கீழிடுதல்,என்னுமிவற்றானும், சுந்தரமூர்த்திநாயனார்,திருமுதுகுன்றரிடம் பெற்ற பொன்னை மணிமுத்தாநதியிலிட்டுத் திருவாரூர்க்குளத்திலெடுத்தல், பரவையாரிடத் திறைவனைத்தூதுவிடுதல், வனப்பகை சிங்கடியென்னும் பெண்களில் விருப்பின்றி யவர்க்கப்பனாதல்,என்னு மிவற்றானும் தெரிவித்தமையால் திருத்தொண்டின் பெருக்கவீறு பொன்னாலும் பெண்ணாலுமறிவுறுத் திவ்வுலகினிடர்பொன்றி யாண்டவந்நால்வரென்றார். அகரம்—பண்டறிசுட்டு.

## ஆசாரிய பரம்பரை.

வேறு

அருள்வளர்நந்திமேதகைவிளக்கியருள்சிவஞானபோதத்தைத்
தெருள்வளர்தமிழ்ச்செய்தளித்தமெய்கண்டதேவனற்சந்ததிவிளங்க
வருமொருதுறைசைத்திருநகர்நமச்சிவாயதேசிகனையுமிந்தக்
குருபரன்வழிவந்தருணனிகொழிக்குங்குரவர்கள்பலரையுந்துதிப்பாம்.

(இ—ள்.) அருள் வளர் நந்தி மேதகை — கருணை வளராநின்ற நந்திதேவரென்னும் மேன்மையுடையோர்,—விளக்கி அருள் சிவஞானபோதத்தை — (தம்மாணாக்கராகிய சனற்குமாரமுனிவருக்கு விளங்க) விளக்கியருளிய சிவஞானபோதநூலை,—தெருள் வளர் தமிழ்ச் செய்தளித்த — மெய்யுணர்வு வளர்தற் கேதுவாய்த தமிழில் மொழிபெயர்த்துத் தந்தருளிய,—மெய்கண்டதேவன் நல் சந்ததி விளங்க — மெய்கண்டதேவருடைய நல்ல பரம்பரை விளங்கும்படி,—ஒரு துறைசைத் திருநகர் வரும் — ஒப்பற்ற துறைசைத் திருநகரில் (ஆசாரியரா) யெழுந்தருளிய,—நமச்சிவாயதேசிகனையும் — நமச்சிவாய தேசிகரையும்,—இந்தக் குருபரன் வழிவந்து — இந்த நமச்சிவாய தேசிகர்க்குப் பின் அந்தச் சந்தானத்தில் வந்து,—அருள் நனி கொழிக்கும் குரவர்கள் பலரையும் துதிப்பாம் — திருவருளை மிகவுஞ் செய்வாருமாகிய குரவர் பலரையும் துதிசெய்வாம். எ—று.

சிவபெருமானிடத்து உபதேசம்பெற்ற நந்திதேவரென்பார் அருள்வளர்நந்திமேதகையெனவும், சிவபிரானமுதல் பரஞ்சோதிமுனிவரீறாகிய நால்வரும் வடமொழியா லுணர்த்த வுணர்ந்தனரென்பார் நந்தி விளக்கி அருள் சிவஞானபோதமென்றும், மெய்கண்டதேவரே யதைத் தமிழில் மொழிபெயர்த்தனரென்பார் தெருள்வளர்தமிழ்ச்செய்தளித்தமெய்கண்டதேவனென்றுங் கூறினார். சந்தானபரம்பரை "தேவர்பிரான்வளர்கயிலைக்காவல்பூண்டதிருநந்தியவர்கணத்தோர்செல்வர்பாரிற், பாவியசத்தியஞானதரிசனிகளடிசேர்பரஞ்சோதிமாமுனிவர்பயிலாவெண்ணெய், மேவியசீர்மெய்கண்டதிறலார்மாறா விரவுபுகழருணந்திவிறலார்செல்வத், தாவிலருண்மறைஞானசம்பந்தரிவரிச்சந்தானத்தெமையாளுந்தன்மையோரே" என்பது முதலியவற்றானறிக. மேதகையென்பதில் வினைத்தொகைப்பொருளுணர்த்து மிகரவிகுதிபுணர்ந்து கெட்டது. சிவஞானபோதம் என்பது ஆகுபெயராய் அதனையுணர்த்துமநூலுக்காயிற்று. ஐயுருபு நிற்றற்குரியவிடத்து ஒடுவுருபு நின்றது. நமச்சிவாயதேசிகனையும் குரவர்கள் பலரையுமெனினுமமையும். மேதகை- அன்மொழித்தொகையென்பாருமுளர். (கக)

———

# அவையடக்கம்.

கருவிகளனைத்துமென்னுட்கலந்துநின்றியக்காநிற்கு
மொருவனையன்றியான்வேறுற்றுதலின்மையாலே
மருவுமென்பாடற்குற்றம்பொறுமெனமதிக்காணித்
திருவமர்கல்விசான்றோர்திறத்தொன்றுஞ்செப்பிலேனே.

(இ-ள்.) என் உள் கலந்து நின்று - என்னுள்ளே (யுந்தரான்மாவாய்) வியா பித்துநின்று,— கருவிகள் அனைத்தும் இயக்கா நிற்கும் - கருவிகளையெல்லாம் தொழிற்படுத்துகின்ற,— ஒருவனை அன்றி யான் வேறு உற்றுதல் இன்மையாலே - (சேதனனாகிய) முதல்வனை யன்றி யான் வேறோர் தொழிலைச்செய்தல் முடியாமையினாலே,— என் பாடல் மருவும் குற்றம் பொறும என - எனது இந்தப்பாடலிற் பொருந்துங் குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளுங்கள் என்று சொல்லுதற்கும்,— மதிக்க ஆணி - அந்நினைத்தற்கும் ஆணைமுறையும்,— திரு அமர் கல்வி சான்றோர் திறத்து - அழகமைந்த கல்வியினால் மாட்சிமைப்பட்டோரிடத்து,— ஒன்றும் செப்பிலேன - ஒன்றுஞ் சொல்லா தொழிந்தேன். எ-று.

கருவிகளாவன ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம், எனனும அகக்கரு விமுப்பத்தாறும், நால்வகை வாக்குமுதலிய புறக்கருவிகளுமபதுமாம். என்னுட் கலந்து நிற்றன்மாத்திரத்தால் அமையாது யானறிதற்குக் காரணமாய கருவிகளினுங் கலந்து அவற்றையுந் தொழிற்படுத்தும் முதல்வன்செயலேயன்றி என்செயலன்றென்பார் ஒருவனை யன்றியென்றும், என்பாடல் என்று கூறின் அறிவுடையோர்க்கு நகையாமென்பார் பொறுமெனமதிக்கவென்றும், குணவசப்பட்டு எவற்றையும் யானசெய்தேனு செய்கின்றேனு செய்வேன் என்பீர் இதற்குமாத்திரம் மின்னனம் கூறுவதென்னென வாசங்கைநிகழுமா தலின் ஒன்றுஞ்செப்பிலேனென் எனறுங்கூறினர். எனவும், மதிக்கவும் என் னும எண்ணும்மைகள் தொக்கன. ஒருவன் என்பூர் சேதனனென்றறிவித்தற்கு. எனவெனபது சொல் லெச்சம். (க)

பசுகரணங்களெல்லாம்பதிகரணங்களாக
வசிபெறுமடியார்க்காயின்மன்னியவொருமைதன்னு
[illegible]மற்றவரினான்றோர்க்கென்னுரையோம்புகெனனக்
கசிவுறும்மனத்தினேனுங்கட்டுரைப்பதுமாண்பன்றே.

(இ-ள்.) பசு கரணங்கள் எல்லாம் - பசுவுக்குரிய மனமுதலிய கரணங்கள் முழு வதும் — பதி கரணங்களாக —(சிவத்துக்குரிய) பதிகரணங்களாக,— வசி பெறும் அடியார்க்கு ஆயின் - வசிக்கப்படுதல் பெற்ற அடியவர்கட்காயின்,— மன்னிய ஒருமைதன்னால் இசையும் —(சிவத்தோடு) இரண்டற வொற்றுமையுடைமையால் (என்பாடற் குற்றத்தைப் பொறுமினென்றுரைத்தல்) பொருந்தும்,— அவரின் - அவ்வடியார் கூறுதல்போல,— ஆன்றோர்க்கு - அமைந்தோர்க்கு,— கசிவு உறும் மனத்தினேனும் - அன்புற்ற மனமுடையேனாகிய யானும்,— என் உரை ஓம்புக என்னக் கட்டுரைப்பது - என்னுடைய பாடலிற் குற்றத்தைப் பொறுமினென்று உரைப்பது [illegible] [illegible]. எ-று.

ரைக்கின் "பிணியின்மைசெல்வம்விளைவின்பமேம அணியென்பநாட்டிற்கிவ்வைந்து" என் பதனால் நாட்டிற்கின் அஃதின்றியமையாமை காண்க. இது தற்குறிப்பேற்றமென்னுமணி. (௪)

கலப்பெரும்பொருளாற்பெட்கும்வண்மையுநாட்டாதியாது
மெலிவுகையுதவும்வாய்ப்புமெலிகலார்மெலிந்தகாலு
நலிதராவளனுமெல்லாநலிவுநீத்தாற்றவீண்டு
மொலிசெழுவிளையுளோடுமுடையதுதொண்டைநாடு.

(இ-ள்.) தொண்டைநாடு - தொண்டைநாடானது,—பல பெரும் பொருளால் பெட்கும் வண்மையும்,—நிறைந்த பெரியபொருளுடைமையால் யாவரும் விரும்பத்தக்க புகழையும்,—யாதும் நாடாது மெலிவு உக உதவும் வாய்ப்பும் - ஒன்றையுமாராயாது வறுமையாலாய மெலிவுநீங்கக் கொடுக்குங் கொடைவாய்ப்பையும்,—மெலிகலார் மெலிந்தகாலும் நலிதராவளனும் - மெலிந்து யாசியாத மேன்மக்கள் வறுமையடைந்தபோதும் (அவ்வறுமை) அவரை நலியவொட்டாத வளங்களையும்,—எல்லா நலிவும் நீத்து ஆற்ற - எல்லாவருத்தங்களையும் நீக்கி யாற்றுதற்கேதுவாய்,—ஈண்டும் ஒலிசெழு விளையுளோடும் - நெருங்கும் தழைவுபொருந்திய வயல்களோடும்,—உடையது - உடைத்தாயது. எ-று.

விளையுளென்பதற்கு விளைவிப்போரெனவுரைத்தார் பரிமேலழகரெனின், அவ்விடத்துக்கு அவ்வாறுரைக்கவேண்டுதலின் உரைத்தாரலது விளையுளென்பதற்கு அதுவே பொருளென்றுரைத்தாரல்லரென்பது "தள்ளாவிளையுள்" என்னுந் திருக்குறளுரையிற் காண்க. ஒலிசெழுவிளையுளென்பதற்கு வயலெனக் கூறுதலே சிறப்புடைத்தெனவுணர்க. இதுவும் மேலையணி. (௫)

பல்குழுவேந்தலைக்கும்படர்கொலைக்குறும்புதீய
பல்குமுட்பகையுடற்றும்பகையுறுபசிதீராநோய்
புல்குறிதாலுமின்றிப்பொறையொருங்குறுகாற்றாங்கி
நல்கிறைவேந்தர்க்குய்க்குநலத்ததுதொண்டைநாடு.

(இ-ள்) தொண்டைநாடு - தொண்டைநாடானது,—பல் குழு - (சங்கேதம் வைத்தான் மாறுபட்டுக் கூடும்) பலகூட்டமும்,—வேந்து அலைக்கும் படர் கொலைக்குறும்பு - (அளவுவர்தால்) அரசனையலைக்கும் பரந்த கொலைவினைக்குறும்பரும்,—தீய பல்கும் உட்பகை - (உடனுறையாநின்றே) தீமைதரப் பலவும் பொருந்தற்கேதுவான உட்பகைகளும்,—உடற்றும் பகை - எதிரேநின்று வருத்தும்புறப்பகைகளும்,—உறு பசி - மிக்கபசியும்,—தீராநோய் - (ஔடதாதிகளால்) தீராதநோய்களும் (ஆகிய இவைகள்),—புல்குறிதாலும் இன்றி - அணுகும் அடையாளமுமின்றி,—பொறை ஒருங்குறு காலும் தாங்கி - (பிறநாடுகள் பொறுத்த) பாரமெல்லாம் ஒருங்கு வரினும் தாங்கி,—வேந்தர்க்கு நல்கு இறை - அரசர்க்குக் கொடுக்கு மிறைப்பொருளையும்,—உய்க்கும் நலத்தது - (குறையாது) கொடுக்கும் நலத்தையுடையது. எ-று.

சங்கேதஞ் சாதிபற்றியுஞ் சமயம்பற்றியும் பலர்க்குளதாமொருமை. [illegible] மக்கள் விலங்கு முதலியன. தாங்குதலாவது அவைகள் அரசன் கோல் [illegible] உணவின்மையானைப் பசிவந்[illegible]

தண்டகாரடு — தண்டகனும் அரசுசெய்தநாடு. தொண்டைநாடு சான்றவருடை [illegible] தனேளுதும் தருமொழி, "தொண்ணீர்வயற்றொண்டைநன்னுடு சான்றோருடைத்து" என்னும் ஔவையாக்காளுணர்க. மயக்கஞ்செய்யும் தனிவுபற்றி மான்றவல்லிமை [illegible] ருர். தொல்காப்பியவுரையின் இரத்தியாகிய பேருவிலையர்ப்பத்தான் ருவிருந்தொண்க் கூட்டுக.

> கொடைப்புகழ்க்கவயம்போர்த்துக்கூரறப்படைகளேந்தி
> விடைப்பருவேழம்பொற்றேர்விரைசெலற்பரியாள்வாய்மை
> படைப்பருஞ்சிலம்நோன்புபத்திமையாகப்பாய்த்திக்
> கடைப்படுபாவத்தெவ்வைக்கடந்ததுத்தொல்லைநாடு.

(இ—ள்) தொல்லை அங்காடு — பழைய அத்தொண்டைநாடானது,— கொடைப் புகழ்க் கவயம் போர்த்து — கொடைப்புகழாகிய கவசத்தைப். போர்த்து,—கூர் அறப்படைகள் ஏந்தி— கூரிய அறமாகிய படைகளை ஏந்தி,—விடைப்பு அரு வேழம் பொற்றேர் விரைசெலல் பரி ஆள் — பெருங்கோபத்தையுடைய யானை அழகிய தேர் விரைந்தசெலவையுடைய குதிரை காலாள்,—வாய்மை படைப்பு அருஞ்சிலம் நோன்பு பத்திமை ஆகப்பாய்த்தி —(முறையே) உண்மையும் செய்தற்கரிய ஒழுக்கமும் விரதமும் பத்தியும் என்னும் இவைகளாகப்பரப்பி,—கடைப்படு பாவத்தெவ்வைக் கடந்தது — இழிப்பட்ட பாவமாகிய பகையை வென்றது. எ—று.

விடைப்பருவேழம் வெல்லுதற்கரிய யானையெனினும் பொருந்தும். புகழ் பிறவாற்றானும் உளவேனும் இதுபோற் சிறந்ததன்மையிற் கொடைப்புகழ்க்கவயம் என்றார். "ஈதலிசைபடவாழ்தலென்றா" தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும். மழுங்காது வெல்லுந்தன்மை யுண்மையிற் கூர்அறப்படைகள் ஏந்தி என்றார். போர்புரியச்செல்வோர்க்கு முக்கிய மாய்வேண்டப்படுவன கவசமும் படையுமாகலின் அவற்றை வேறு பிரித்துக் கொடைப்புகழ்க்கவயம்போர்த்துக்கூரறப்படைகளேந்தி எனவும், அதன்பின் ஏனையங்கங்களும் வேண்டப்படுதலின் விடைப்பருவேழம்பொற்றேர்விரைசெலற்பரிஆள் வாய்மை படைப்பருஞ்சிலம்நோன்புபத்திமையாகப்பாய்த்தி என்றும் கூறினார். விரைசெல்வரிப்புனே பார்த்துபோலநின்றது. இது உருவகவுயர்வுநவிற்சியணி. (௩)

> முரிதிரைசுருட்டிப்பல்வீமொய்த்தபஃறீர்த்தமாடி
> விரிபுகழ்த்தலங்கள்சாலமேவியானாக்கூத்தர்க்
> குரியபல்வடிவந்தன்னுறுதலால்வீடுவெஃகிக்
> கரிசறுத்தவர்கள்போன்றுகவின்றதப்பொருவினாடு.

(இ—ள்.) பொருவு இல் அங்காடு — ஒப்பில்லாத அத்தொண்டைநாடானது,— முரிதிரை சுருட்டி — அணிபடும் அலைகளை மடக்கி,—பல் வீமொய்த்த பல் தீர்த்தம் ஆடி — பல மலர்கள் செருங்கிய பல் தீர்த்தங்களிலாடி,—விரிபுகழ்த் [illegible] சால மேவி— பரந்த புகழையுடைய சிவதலங்களை மிகவும் பொருந்தி,—[illegible] உரிய பல்வடிவம் தன்உள் உறுத்தலால் —பரமானந்தக்கூத்தராகிய இறைவற்குரிய [illegible] கரர் முதலிய பல விக்கிரகபேதங்களைத் தன்னிடத்தே [illegible] இக் கரிசு அறுத்தவர்கள்போன்று கவின்றது — [illegible]

[illegible]

தீர்த்தமாடன் முதலியவற்றை அடியார்க்குங்கொள்க. தன் என்பதை அடியார்க்கு அடையாக்குக. ஆனந்தக்கூத்தரென் உடம்பொடுபுணர்த்தோதினார் அவர்க்கஃதுண்மையாதலின். கரிசைச்செய்வதனைக் கரிசென்றார், கரிசு - குற்றம். ஆனந்தக்கூத்தற்குரிய பலவடிவமாவன. "மதியணியுஞ்சடையாருமைகேள்வர்மழவிடையார்சதியினட்டம் புரிவார்கலியாணர்தலையிலுண்பார், கதிமத்தற்செற்றவர்காலர்க்குங்காலரெயிலெரித்தார் தியிற்சலந்தரனுரைவதைத்தசுந்தரரே." 'அத்தியுரித்தவர்வேள்வியழித்தவர்மாலத்தர், சத்தியொர்பாகர்கிராதர்சங்காளர்சண்டேசருக்குச், சித்தியளித்தவர்ராலமுண்டவர்செம்பொற்றியான, பத்தியினுக்கொருச்சக்கரமீந்தபரம்பரரே.' 'கரிமுகவற்கருள்செய்வர்சோமாஸ்கந்தர்காலொன்றுள்ளார், உரியசுகாதனர்ஞானோபதேசரிலிங்கத்துள்ளார் இருபதினோடைந்துவிக்கிரகங்களெனனும்வரதர், தெரிவுறச்சொன்னடைமதராமளவுந்தசெயலிதுவே' என்பதனானுணர்க. பலதீர்த்தம் பஃறீர்த்தம் என லகரம் ஆய்தமாய்த்திரிந்தது. "தகரம்வருவழியாய்தநிலையலும் புகரின்றென்மனார்புலமையோரே" என்பதோத்தாகலின் இது சிலேடையணி. (௫௦)

கருங்குழல்கானிற்றோற்றிக்கதிர்முலைமலையிற்றோற்றி
யிருங்கைப்பூம்பணையிற்றோற்றியெரியணிகலாபவல்குல்
பெருங்கடற்றோற்றிவேதவொழுக்கெனுங்கணவற்பின்னி
யொருங்குநாற்பயனுமக்களுயிர்த்தளிப்பஃதந்நாடு.

(இ-ள்.) அந்நாடு - அத்தொண்டைநாடானது,—கானில் கரும் குழல் தோற்றி - காட்டின்கண் கரிய கூந்தலைக் காட்டியும்,—மலையில் கதிர்முலை தோற்றி - மலைகளால் கதிர்த்த முலைகளைக்காட்டியும்,—பூம் பணையில் இரும் கை தோற்றி - பொலிவுபொருந்திய மூங்கில்களால் பெரிய கரங்களைக் காட்டியும்,—பெரும் கடல் எரி மணிக் கலாப அல்குல் தோற்றி - பெரிய கடலால் ஒளிபொருந்திய மணிகள் அழுத்திய கலாபமணிந்த அல்குலைக் காட்டியும்,—வேத ஒழுக்கு எனும் கணவற் பின்னி - வேத ஒழுக்கமென்னும் நாயகனைத் தழுவி,—நாற்பயனும் மக்கள் - நாற்பொருளாகிய புதல்வரை,—ஒருங்கு உயிர்த்து அளிப்பது - ஒருங்குபெற்று வளர்ப்பது. எ-று.

அறமுதலியனவெல்லாம் அந்நாட்டினின்றுந் தோன்றுதலால் நாற்பயன் ஆட்க ளுயிர்த்தளிப்பதென்றார். "முன்னுயிர்வருமிடத்தாய்தப்புள்ளிமன்னல்வேண்டுமல்வழியான" என்பதனால் ஆய்தம் விரிந்தது. இதனால் நால்வகைநிலங்களுமாண்டுள்ளனவென் வறிவித்தவாறு. கலாபம் - பதினாறுகோவைமணி. கதிர்முலை - இறுமாந்தமுலை. வேதவொழுக்கு - விதித்துச்செய்வதன்றி இயல்பாயுள்ளதென்பார் பின்னியென்றார். (௫௧)

விண்ணவரவுணர்சித்தர்விஞ்சையர்கருடர்நாகர்
மண்ணவரெவருந்தோய்ந்துவரம்பெறுமேன்மைசான்ற
புண்ணியநதிகள்பல்லபொங்கொளிமணிநீர்ப்பாலி
யண்ணல்வார்நதியினோடுமணிந்தபொருள்கூர்நாடு.

(இ-ள்.) பொருள் கூர் அந்நாடு - பலபொருளு மிகுந்துள்ள அத்தொண்டைநாடு,—விண்ணவர் அவுணர் சித்தர் விஞ்சையர் கருடர் நாகர் மண்ணவர் எவரும் - தேவர் அவுணர் சித்தர் வித்தியாதரர் கருடர் நாகர் மானுடரென்னுமிவரும்,—தோய்ந்து

நது - ஸ்நானஞ்செய்து,—வரம்பெறும் மேன்மைசான்ற - வரம்பெறத்தக்க மேன்மை பொருந்திய,—புண்ணிய நதிகள் பல்ல - புண்ணியவடிவாயுள்ள நதிகள் பலவற்றை யும்,—பொங்கு ஒளி மணிநீர்ப் பாலி அண்ணல் வார் நதியினோடும் - மிக்க ஒளியையு டைய மணிகள்பொருந்திய நீரையுடைய பெருமைபொருந்திய நெடிய நதியோடும்,— அணிந்தது - அணிந்திருந்தது. எ—று.

பலவற்றையும் பாலியினோடு அணிந்ததெனக் கூட்டுக. பாலியை வேறுபிரித்தோதா காமதேனுவின்பால் நதியாய்ப் பெருகிய விசேடம்பற்றி. பல - பல்லவென விகாரமாயி ற்று. தெய்வவடிவுள்ளனவென்ப தறிவித்தற்கு வரம்பெறுமேன்மைசான்றபுண்ணியநதி களென்றார். (௫௨)

வேறு.

கடவுள்வெண்கரிவிசும்பொரீஇப்புரந்தரன்காவலர்திசைநோக்கிய
படர்வதொத்துவெண்ணிறமுகிற்குழாமணிபடுகடற்பரப்பண்மித்
தொடலைவெண்டிரைப்பெரும்புனன்முகந்ததுதொல்லைபோலொருசாப
மடரவல்விரைந்தெழுந்தெனவுடல்கறுத்தந்தரத்தெழுந்தன்றே,

(இ—ள்.) வெள் நிற முகில் குழாம் - வெண்ணிறமுள்ள முகிற்குழாமானது,— கடவுள் வெண்கரி விசும்பு ஒரீஇ - தெய்வத்தன்மைபொருந்திய அயிராவதமானது தா னுறைந்த சுவர்க்கத்தை நீங்கி,—புரந்தரன் காவல் திசை நோக்கிய படர்வது ஒத்து - இந்திரன் காவல்கொள்ளும் கீழ்த்திசையைநோக்கிச் செல்லுதலையொத்து,—மணி படு கடல் பரப்பு அண்மி - மணிகளுண்டாகும் கடற்பரப்பை அடுத்து,—தொடலை வெள் திரைப் பெரும்புனல் முகந்து - மாலைபோன்ற வெள்ளிய அலைகளையுடைய பெரிய கட லின்நீரைக்குடித்து,—அது தொல்லைபோல் ஒரு சாபம் அடர - அவ்வியானை முன்போல ஒருசாபமானது தன்னைநெருங்குதலால்,—வல் விரைந்து எழுந்தது என - மிகவிரைந் தெழுந்தாற்போல,—உடல் கறுத்து அந்தரத்து எழுந்தன்று - வடிவு கறுத்து ஆகாய த்தில் எழுந்தது. எ—று.

எழுந்தாலென்னும் வினையெச்சவீறு தொக்கது. அகரம் பண்டறிசுட்டு. அம்-சாரி யை. அயிராவதயானை துருவாசமுனிவராற் கொடுக்கப்பட்ட தெய்வமலரை இந்திரன் பிரீதியின்றித் தன்மேலிடத், தான் அதனைக் காற்கீழிட்டு மிதித்தமையால் அம்முனிவர் காட்டியானையாகக்கடவதென்று சபித்தாரென்பது புராணகதையாதலால் அது தொ ல்லைபோலொருசாபம் அடர உடல்கறுத்தெழுந்தாற்போ லெழுந்ததென்றார். இது விரியு வமையணியும் பதப்பொருட்காட்சியணியுமாம். (௫௩)

சேத்தடைத்திரள்கிழிந்தகம்பருவரைச்செழுங்கிரிதனைமன்றுட்
கூத்தியற்றருட்பரம்பரன்மதலையைக்குறித்துநோன்புழந்தேத
நீத்திடக்கரியடுத்தெனநந்திதனெடுமலைமுதலாகத்
தத்தடம்பொலங்குவட்டியாசிலம்பெலாந்தொடர்ந்துசென்றிறுத்தன்றே,

(இ—ள்.) கரி - அவ்வயிராவதயானை,—மன்றுள் கூத்தியற்று அருள் பரம்பரன் மதலையைக் குறித்து - கனகசபையின்கண்ணே யருட்கூத்தியற்றும் சுத்த மாயாதீதரா கிய சிவகுமாரராகிய முருகக்கடவுளைக் குறித்து,—நோன்பு உழந்து - தவமுழந்து,—

# திருநாட்டுப்படலம்.

ஏதம் நீத்திட – (தன்னுடைய சுரூபத்தால்வந்த) குற்றத்தை நீக்கும்படி,—தேத்தடைத் திரள் கிழிந்து அசும்பு அரு – தேன்கூட்டுத்திரள் கிழிதலினால் சிறுதுளிகளிற்காத,—வரைச் செழும் கிரிதனை – பக்கமலைகளையுடைய செழிய தணிகைவரையை,—ஆடுத்து என – ஆடுதததுபோல,—நந்திதன் நெடுமலை முதலாக – நந்தியென்னும்பெயரையுடைய நெடிய மலைமுதலாக,—தூ தடம் பொலம் குவட்டு உயர் சிலம்பு எலாம் – சுத்தமான விசாலித்த ழகிய குவட்டையுடைய உயர்ந்த மலைகளையெல்லாம்,—தொடர்ந்து சென்று இறுத்தாறு – தொடர்ந்துபோய்ப் படிந்தது. எ–று.

ஏ – அசை. "ஒற்றுமிகுதகரமொடுநிற்றலுமுரித்தே" யென்பதனால் தேன் அடை தேத்தடையென்றாயிற்று. கிழிய்வென்பது கிழிந்தெனத்திரிந்தது. தன் சாரியை. இது உவமையணி. ௪௪)

செம்மலார்க்கிபஞ்சாத்தமேச்குயர்த்தவாசிகையெனச்சிலைவாங்கி
விம்முவாண்மணித்தீபவாராதனைவிளைத்தெனத்தடித்தின்று
சும்மையேத்தெடுத்தெனமுழக்கெழீஇவிழிசொரிந்தெனப்பொழிந்தெங்கு
மம்மரேதநீத்தெளிர்ந்தெனவெண்ணிறவயக்கமாண்டதுமாதோ.

(இ–ள்.) இபம் செம்மலார்க்குச சாத்த மேச்குயர்தத வாசிகையென – அவ்வியானை குமாரக்கடவுளுக்குச் சாத்தற்பொருட்டு மேலே உயர்த்திய மாலைபோல,—சிலை வாங்கி – வில்லைவளைத்து,—விம்மு வாள் மணித்தீப ஆராதனை விளைத்து என – நெருங்கிய வொளியையுடைய இரத்தினதீபவாராதனை செய்தாற்போல,—தடித்து ஈன்று சும்மை ஏத்தெடுத்தென முழக்கு எழீஇ – மின்னலைச்சான்று ஆரவாரத்தோடு துதிகளையெடுத்தாற்போல முழக்கத்தையெழுப்பி,—விழி சொரிந்து என எங்கும் பொழிந்து – கண்ணினாலானந்தபாஷ்பம் சொரிந்ததுபோல வெங்கணும் மழைபொழிந்து,—மம்மர் ஏதம் நீத்து எழுந்தென – மயக்குறுத்து மச்சாபகுற்றததை நீக்கி(முன் வடிவுபெற்று) எழுந்ததுபோல,—வெள் நிற வயக்கம் மாண்டது – வெண்ணிறமாகிய விளக்கத்தினால் மாட்சிமையடைந்தது. எ–று.

விளைத்து எடுத்து சொரிந்து எழுந்து என்பனவற்றில் இல்விகுதி தொக்குநின்றன. இதுவும் மேலையணி. (௪௫)

உருகுவெஞ்சினவெம்மைதானுடற்றுழியுடைகுளிரொளித்தாங்குப்
பெருகுதண்குளிர்க்குடைந்திதுபொழுதுபோர்பெட்டல்யாவருங்கண்ணுக்
குருகுமுன்கையார்குங்குமமுலைகளிற்கொம்மெனக்கரந்தன்றாற்
றிருகுதம்பகைசார்தனங்கிடைக்குமேற்சிவணுறுதவர்யாரே.

(ஏப்பெயரும்)

(இ–ள்.) உருகு வெம் சின வெம்மை – உருகத்தக்க வெய்ய சினத்தையுடைய [illegible] பமான து,—தானுடற்றுழி – தான் போர்செய்தபொழுது,—உடை குளிர் ஒளித்தா ங்கு – (முன் தனக்குத்) தோற்ற குளிரான தொளித்ததுபோல,—இது பொழுது – இப்பொழுது,—பெருகு தண் குளிர்க்கு உடைந்து – அதிகரிக்கின்ற மிக்க குளிருக்குப் போரிலே தோற்று,—பெட்டல் யாவரும் கண்ணு – தான் விரும்பியுறைதலை யாவரும் கருதாதவாறு,—குருகு முன்கையார் குங்கும முலைகளில் – வளையலணிந்த முன்கையை

யுடைய மங்கையரது குங்குமத்தையப்பிய முலைகளிலே,—கொம்மென கரந்தன்று - விரைவில் ஒளித்தது,—இருகு தம் பகைசார் தனம் கிடைக்குமேல் - மாறுபட்ட தம்பகைசார்ந்த தனம் தமக்குக் கிடைக்குமாயின்,—இவணுறுதவர் யார் - பொருந் தாதவர்யாவருளர் (ஒருவருமில்லை) எ—று.

ஒருவருமில்லையென்பது குறிப்பெச்சம். ஆல் - அசை. ஒளித்தாலென்பதின் ஆல் விகுதி தொக்கது. வெம்மைதாளுடற்றுழிக் குளிரொளித்ததுபோல இப்பொழுது தா னுமொளித்ததென்க. முலைகள் சீதளகாலத்து வெம்மையும் வெம்மைக்காலத்துச் சீதளமும் தருமென்பது "வாவியுறைநீரும்வடநிழலும்பாவகமும், ஏவலையாண்ணாரிள முலையும்-ஓவியமே, மென்சீதகாலத்துவெம்மைதரும்வெம்மைதனி, லின்பாருஞ்சீதளமா மே." என்பதனாலறிக. தனம் முலைக்கும் பொருளுக்கும் பொதுவாய்நின்று வெம்மை க்குங் கலகஞ்செய்வார்க்கு முரித்தாய்நிற்றலால் இது வேற்றுப்பொருள்வைப்பிற் சிலேடை யின் முடிததென்னுமலங்காரம். உடைந்து இதுபொழுதுபோர்பெட்டல் யாவருங் கண்ணுவென்பதற்கு, தோற்று இப்பொழுது போரைவிரும்பில் யாதுபயன் வருமென்று நினைத்து என்றுரைப்பாருமுளர். இப்பொருட்கு என்று என்னு மொருசொற்பெய்து உரைத்தல் சிறப்பிலதெனவுணர்க. (௪௬)

உண்டபாற்சுவைநினைந்தொருமுனிதவமுழந்துபாற்கடல்பெற்ற
பண்டைநீர்மைதேர்ந்தமரரான்பயத்தின்முன்படிந்தநந்தியங்குன்று
மண்டுமாதவம்புரிந்ததுவரத்தழீஇவழிதரமேற்பெய்து
கொண்டதாமெனவாவயின்விழுந்தநீர்குலாய்வழிந்ததையன்றே.

(இ—ள்.) முன் அமரர் ஆன்பயத்தின் படிந்த நந்தியங்குன்று - முன்னே காம தேனுவினுடைய பாலினாலே தோய்ந்த நந்திமலையானது,—ஒரு முனி - ஒப்பற்ற உபம ன்னியமுனிவர்,—உண்ட பால் சுவை நினைந்து - தான் முன்னுண்ட பாலின்சுவையை நினைத்து,—மாதவம் உழந்து - பெருந்தவஞ்செய்து,—பாற்கடல் பெற்ற பண்டைநீர் மை தேர்ந்து - திருப்பாற்கடலைப் பெற்றுக்கொண்ட பழைய நீர்மையையுணர்ந்து,— மண்டு மாதவம் புரிந்தது - நெருங்கிய மகாதவஞ்செய்து,—அது வர - பாற்கடல்வர,— தழீஇ வழிதர மேல் பெய்துகொண்டதாமென - அதனைத் தழுவி வழியும்படி தன்மே லே பெய்துகொண்டதுபோல,—ஆவயின் விழுந்த நீர் குலாய் வழிந்தது - அந்நகரிவ ரையின்மேல் விழுந்தநீர் எங்கும்பரந்து வழிந்தது. எ—று.

ஆவயினெனச் சுட்டு நீண்டது. ஐ சாரியை. உபமன்னியமுனிவர் மாமனாகிய வசிட்டமுனிவரிடத்திருந்து வளர்ந்து பின் றமயார்வீட்டிக்குவந்தபொழுது தாய்தந் தையர்கள் பலவகை மதுரமாகிய உணவுகளைக் கொடுக்கவும் அதனை யுண்ணாமல் மு ன்னுண்ட பாலினைத் தழுதல்கண்ட தந்தையாராகிய வியாக்கிரபாதமுனிவர் அக்குழ ந்தையைக் கனகசபையின் திருவாயிற்படியிற் கிடத்திச் சபாநாயகரை நினைத்து வே ண்டுதல்செய்ய அவர் பாற்கடலையழைத்து உண்ணக் கொடுத்தாரென்பதுபுராணகதை. இது தற்குறிப்பேற்றமென்னுமலங்காரம். (௪௭)

வேறு.

கார்தளம்போதுவேய்ந்துகளிமயில்கடாவிப்பல்பூ
வேய்ந்தமென்குழற்கொம்பன்னார்வெறியயர்களத்துச்சார்ந்து
வாய்ந்தவிங்குலிகச்சேற்றின்வயங்குதன்னுருவந்தோற்றிப்
போர்த்தலாய்ச்சிலம்பின்செவ்வேள்போன்றதுபாலிநீத்தம்.

(இ—ள்.) பாலி நீத்தம் - அப்பாலியாறானது,—கார்தள் அம் போது வேய்ந்து - கார்தளாகிய அழகிய மலர்களைத் தன்மீது தாங்குதலாலும்,—களி மயில்கள் தாவி - களிப்புப்பொருந்திய மயில்களை வாருதலாலும்,—பல் பூ வேய்ந்த மென் குழல் கொம்பு அன்னார் - பல மலர்களைச்சூடிய மெல்லிய கூந்தலையுடைய பூங்கொம்புபோன்ற பெணகள்,—வெறி அயர் களத்து சார்ந்து - வெறியாட்டைச்செய்யுமிடங்களிற் சார்தலாலும்,—வாய்ந்த இங்குலிகச் சேற்றின் - தன்னிடத்துக்கலந்த சாதிலிங்கச்சேற்றினால்;—வயங்கு தன்னுருவந் தோற்றி - விளங்கிய தன்னுருவஞ் சிவத்தலைக் காட்டுதலாலும்,—சிலம்பில் போந்து உலாய் - குறிஞ்சிநிலத்திற் சென்று பரத்தலாலும்,—செவவேள போன்றது - குமாரக்கடவுளையொத்திருந்தது. எ-று.

வேய்ந்துமுதலிய செய்தெனெச்சங்கள் மழைபெய்து குளம்நிறைந்ததென்றாற போல நின்றன. எண்ணும்மைகள் தொக்கன. இது மேல்வருவனவற்றிற்கு மொக்கும். முருகக்கடவுட்கு இங்குலிகச்சேறுபோல் விளங்குந்திருமேனியுடையராய்த் தோற்றியெனவுரைக்க. மயில்கடவி எனினுமமையும். இதுமுதல் சிலயொவ்வொளம் எனபதிறுதியாகச் சிலேடையணி. (கஅ)

ஆழ்ந்தநீர்ச்சுனைபுக்காடியவிர்பளிக்கறையின்வைகி
வீழ்ந்தவராகந்தோய்ந்துவேங்கைதண்குறிஞ்சிசுற்றுத்
தாழ்ந்தபைங்குரலவேனற்றவிர்ந்துபுள்விலங்குமோப்பி
வாழ்நதிடுங்கொடிச்சிமாாதமொழுக்கமுமரீஇயதாங்கண்.

(இ—ள்.) ஆங்கண் - அக்குறிஞ்சிநிலத்தில்—ஆழ்ந்த நீர்ச்சுனை புக்கு ஆடி - ஆழ்ந்த நீர்ச்சுனைகளிற் புகுந்துஆடுதலாலும்—அவிர்பளிக்கு அறையின் வைகி - விளங்குகின்ற பளிங்கறைகளிற்றங்குதலாலும்—வீழ்ந்தவர் ஆகம்தோய்ந்து - தன்னிடத்து வீழ்ந்தவருடையசரீரத்தைத் தோய்தலினாலும்—வேங்கைதண்குறிஞ்சிசுற்று - வேங்கைமரங்களையும் குளிர்ந்த குறிஞ்சிச்செடிகளையும் சுற்றுதலாலும்—தாழ்ந்த பைம் குரல ஏனல்தவிர்ந்து - வளைந்தபசியகதிர்களையுடைய தினைப்புனங்களிற்றங்குதலாலும்—புள் விலங்கும் ஓப்பி - பறவைகளையும் விலங்குகளையுந் துரத்தலினாலும்—வாழ்ந்திடுங்கொடிச்சிமாாதம ஒழுக்கமும் மரீஇயது - வாழ்ந்திருக்கும் வேடப்பெண்களதொழுக்கத்தையும்பொருந்தியது. எ-று.

நீர்ச்சுனையிலாடிப் பளிங்கறையிலிருந்து தம்மால் விரும்பப்பட்டவரைச் சேர்ந்து வேங்கையும் குறிஞ்சிமலர்களைப் பறித்தணிந்து தினைப்புனத்திலிருந்து புள்விலங்குகளைத் துரத்தி வாழ்ந்திடுங் கொடிச்சிமாரெனக. கார்தருவமணம் குறிஞ்சிநிலத்திற்கே புரித்தாதலின் வீழ்ந்தவராகந்தோய்ந்தென்றார். (கசு)

கோழரையகிலுஞ்சந்துங்குங்குமவனமுஞ்சாடி
வாழியகுறிச்சிபுக்குவளர்தினைவாரிவித்தி
வீழுமென்கிழங்குகெண்டிவிரைத்ததேனழித்துமாந்தி
யூழுறுசிலைக்கைவேடரொழுக்கமுமரீஇயதாங்கண்.

(இ—ள்.) ஆங்கண் – அக்குறிஞ்சிநிலத்தில்,—கோழ் அரை அகிலும் சந்தும் குங்குமவனமும் சாடி – வழுவழுப்பாகிய அரையையுடைய அகிலமரங்களையும் சந்தனமரங்களையும் குங்குமவனங்களையும் அழித்தலாலும்,—வாழிய குறிச்சி புக்கு – வாழ்கின்ற சிற்றூரிற் புகுந்து,—வளர் தினை வாரிவித்தி – வளர்ந்தனவாயும் தினையையும் வாரி வீசுதலினாலும்,—வீழும் மெல் கிழங்கு கெண்டி – (நிலத்தின்கீழே) வீழும் மெல்லிய வள்ளிக்கிழங்கைக் கிண்டுதலாலும்,— விரைத்த தேன் அழித்து மாந்தி – மணம்பொருந்தியதேன்கூடுகளை அழித்துட்கொள்ளுதலாலும்,—ஊழ் உறு சிலைக்கை வேடர் ஒழுக்கமும் மரீஇயது – வலிய வில்லைக் கையிற்றாங்கும் வேடருடைய ஒழுக்கத்தையும் பொருந்தியது. எ—று.

தேன - ஆகுபெயர். அழித்தல் - கூண்டுகளினின்றுந்தேனை வெருச்சல். வன்தனை வெட்டி குறிச்சியிறபுக்குத தினையை வாரிவிதைத்து கிழங்கைக் கெண்டி தேனையழித்து உறும்குறவரென்க. (௨௦)

சிலையலங்கணிச்சிவெண்ணெய்தெவ்விவானிமிர்ந்தவாரி
நிலைபுகுந்துழக்கியொல்குநிலனெடுத்திருவியண்ட
ருலைதரவெறிக்கொண்டேற்றியுறுகலிமுடிவுதோற்றித்
தலைவருமாயோனென்னத்தவழ்ந்ததுபுறவத்தம்மா.

(இ—ள்.) சிலை அலம் கணிச்சி வெண்ணெய் தெவ்வி – வில்லு கலப்பை மழு வெண்ணெய் என்னும் இவைகளை வாரிக்கொள்ளுதலாலும்,—வான் நிமிர்ந்து – வானிலே நிமிர்தலாலும்,—வாரி நிலை புகுந்து உழக்கி – நீர்நிலைகளிலே புகுந்து கலக்குதலாலும்,—ஒல்கும் நிலன் எடுத்து இருவி – வளஞ்சுருங்கும் நிலங்களை வளத்தில் மேம்படுத்தி நிறுத்தலாலும்,—அண்டர் உலைதர வெறிக்கொண்டு ஏற்றி – முல்லைநிலமாக்களுலையும்படி வெறிகொண் டேற்றுதலாலும்,—உறு கலி முடிவு தோற்றி – பொருந்திய வறுமை நீக்கத்தைத் தோற்றுதலாலும்,—தலைவரு மாயோன் என்ன – அந்நிலத்திற் சுதிதேவதையாய் வரும் திருமால்போல,—புறவத்து தவழ்ந்தது – முல்லைநிலத்திற் பெருகியது. எ—று.

தெவ்வியென்பதனை முன் மூன்றிடத்துங் கூட்டுக. தெவ்வுதல் எடுத்துக்கொள்ளல். தசரதராமன் பலதேவன் பரசிராமன் கிருட்டிணன் வாமனன் மீனம் ஆமை பன்றி நரசிங்கம் குதிரை என்னும் தசாவதாரத்தையுடைய திருமாலென்க. தலைவருமாயோன் – [illegible]. வெறிக்கொண்டு முடைநாற்றங்கொண்டெனினுமாம். கலி ஒலியுமாம். வாரி புகுதலை மீனுக்கும் உழக்குதலை ஆமைக்குங் கொள்க. வாரியென்பதனை யீரிடத்துங் கூட்டுக. ஒல்கும்நிலனெடுத்திருவியென்பதற்கு ஒடுங்கியவழிகளைப் பெருவழியாகக் கல்லலாலுமெனவாற்றுக்குரைப்பாருமுளர். (௨௧)

முளிதயிர்நறுநெய்பெய்யுமூரியங்கலன்கள்பாடி
யுளியெடுத்தியங்கியாங்காங்குற்றவைமாற்றிப்பொன்னுந்
தெளிமணித்திரளுமற்றுஞ்செறித்துராய்க்குளவிசெர்தேன்
றுளிகுழற்பொதுவமாதர்தொழின்மையும்பயின்றதாங்கண்.

இ—ள். முளி தயிர் நறு நெய் பெய்யும் மூரியங் கலன்கள் - நீர்வற்றிய தயிரையு மல்ல நெய்யையும் இட்டு வைக்கும் வன்மையான அழகிய பாத்திரங்களை,—பாடி உளி எடுத்து இயங்கி - ஆய்ப்பாடியிடத்து வாரிக்கொண்டு பெயர்தலானும்,—ஆங்காங்கு உற்றவைமாற்றி - தான் சென்ற அவ்வவ்விடங்களில் பொருந்தியவைகளைக் கலைதலானும்,—பொனனும் தெளி மணித்திரளும் மற்றும் செறித்து உராய் - பொன்னையும் தெளிந்த மணித்திரளையும் ஏனைப்பொருளையும் செறித்து உலாவுதலானும்,—குளவி செர்தேன் துளி குழல் பொதுவர் மாதர் தொழின்மையும பயின்றது - மலைப்பச்சையின் செர்தேன்துளிக்கும் கூந்தலையுடைய இடைச்சியரது தொழிலின்றன்மையையும பொருந்தியது,—ஆங்கண் - அம்முல்லைநிலத்து. எ—று.

தயிர் நெய் பெய்யும் கலன்களைப் பாடியினின்று மெடுத்துப் பற்பலவிடங்களினுஞ் சென்று அத்தயிர் நெய்களை விற்றுப் பொன்னும மணித்திரளும் ஏனைப்பொருளும் சேர்த்துவருகின்ற பொதுவமாதரென்க. (உஉ)

இணிகவைக்கோடும்வேயுந்திரிபுரிநாருந்தாங்கி
மணிநிரையோம்பிநேரும்வல்விடைதழுவித்தோய்ந்த
வணிநிறைமகளிர்கூந்தலலங்கலங்கொன்றைசூட்டிப்
பிணிதபுமாயர்செய்கைபேணியும்பெயர்வதாங்கண்.

(இ—ள்.) இணி கவைக்கோடும் வேயும் - திணிந்த கவைத்தடிகளையும் வேய்ங்குழலையும்,—திரிபுரிநாரும் தாங்கி - கயிறுகளையும் வாரிக்கொண்டு சேறலானும்,—மணி நிரை ஓம்பி - மணியின்நிரைகளைப் பாதுகாத்தலானும்,—நேரும் வல் விடை தழுவி - எதிர்ப்பட்ட வலிய எருதுகளைக் கவருதலானும்,—தோய்ந்த அணிநிறை மகளிர் கூந்தல் - முழுகிய அழகையும் நிறையையுமுடைய மங்கையர்கள் கூந்தலில்,—அலங்கல் அம கொன்றை சூட்டி - தளிரையுடைய அழகிய கொன்றைமலரைச் சூட்டுதலானும்,—பிணிதபும் ஆயர் செய்கை பேணியும் - பிணிநீங்கிய இடையருடைய செய்கையைப் பொருந்தியும்,—பெயர்வது ஆங்கண் - செல்லுவது அம்முல்லைநிலத்தில். எ—று.

கவைக்கோடும் வேயும் திரிபுரிநாரும் கட்டிக்கொண்டு மணிகட்டிய பசுநிரைகளைக்காத்து எதிர்த்தவிடையைத்தழுவி விவாகஞ்செய்த மகளிர்கூந்தலிலே கொன்றைமாலையைச் சூடுமாயரென்க. மணிநிரையோம்பியென்பதற்கு ஈரிடத்தும் மணிதரித்த பசுக்களை யெனக்கொள்ளுவாருமுளர். ஆயர் பெண்பிறக்குஞான்று பிறந்த காளைக்கன்றைத்தன்னூட்டி யாகவளரவிட்டு அவ்விடையைப் பிடித்தவனுக்கே விவாகஞ்செய்து கொடுப்பது வழக்கமாகலின் விடைதழுவித்தோய்ந்த மகளிரென்றார். அது, "படையார் கருங்கண்ணி வண்ணப்பயோதரப் பாரமுநுண், ணிடையார் மெலிவுங்கண்டண்டர்களீ ரம்முல்லைவேலியெம்மூர், விடையார் மருப்புத்திருத்திவிட்டாரவியன்றேன் புலியூ, ருடையார் கடவிவருவதுபோலுமுருவினதே" எனபதனாலறிக. (உ௩)

பூத்தசெந்தாமரைக்கண்மெய்யெலாம்பொலியத்தோற்றித்
துத்தகைவயிரம்பற்றித்துலங்குவாரணமேல்கொண்டு
காத்தலைமருவிநீண்டகற்சிறைபலவுஞ்சிந்தி
யேத்துவிண்ணரசனென்னவிறுத்தது பழனப்பாங்கர்.

இ—ள். பூத்த செந்தாமரைக் கண் மெய் எலாம் பொலியத்தோற்றி – அலர்ந்த செந்தாமரை மலர்த்தேன் தன்வடிவமெங்குஞ் செறியும்படி காட்டுதலாலும்,—துத்தகை வயிரம்பற்றி – சுத்தமான அழகையுடைய வயிர ரத்தினங்களைப் பற்றுதலாலும்,—துலங்கு வாரணம் மேல் கொண்டு – விளக்கம்பொருந்திய சங்குகளைத் தன்னிடத்தில் கோடலாலும்,—காத்தலை மருவி – பூங்காவிடத்திற் பெருகுதலாலும்,—நீண்ட கல் சிறை பலவும் சிந்தி – நீண்ட கல்வரம்புகள் பலவற்றையும் (அகழ்ந்து) சிதறலாலும்,—ஏத்து விண் அரசன் என்ன இறுத்தது – (அங்கிலதிற் கதிதேவதையாகத்) துதிக்கப்படுகின்ற இந்திரனைப்போலத் தங்கியது,—பழனப் பாங்கர் – மருதநிலத்திடத்து. எ—று.

அலர்ந்த செந்தாமரைமலர்போன்ற கண்கள் மெய்யெல்லாம் பொலிவுபெறத்தோற்றிக் குலிசப்படையைத் தாங்கி ஐராவதயானைமேலேறிக் கற்பகக்காவிலிருந்து மலைகளின் சிறகுகள் பலவற்றையும் சிந்தும் விண்ணரசனென்க. தாமரை – ஆகுபெயர். கற்சிறை - கல்வரம்பென்பது "கற்சிறையழித்துவெள்ளம்கடற்கவாயாங்குகறமேறா" எனவருஞ் சிந்தாமணி யுரையானறிக. ஏத்து விண்ணரசனென்பது செயப்படுபொருள்வினைமுதல் போலக்கூறப்பட்டது. ததீசிமுனிவர் அருந்தவஞ் செய்தமையாலும், தேவர்கள் அடைக்கலம்வைத்த படைகளை விழுங்க அ[illegible]வீணுதண்டமாயிருந்து இந்திரனுக்குப் படையாயினமையாலும் துத்தகைவயிரமென்றார். (உச)

மருதமர்கிள்ளையஞ்சவயின்வயினியம்பிச்சென்று
முருகமர்வயலிற்பூத்தமுண்டகங்குமுதங்கட்டுக்
குருமணிக்காஞ்சிச்சூழற்கொழுமனமலரப்புல்லித்
திருவியல்கடைசிமாரதஞ்செய்கையுந்தழீஇயதாங்கண்.

(இ—ள்.) மருது அமர் கிள்ளை அஞ்ச – மருதமரங்களிலுறையுங் கிளிகள் அச்சமடையும்படி,—வயின் வயின் இயம்பிச் சென்று – இடந்தோறும் ஒலிதருச் செல்லுதலாலும்,—வயலில் பூத்த முருகு அமர் முண்டகம் குமுதம் கட்டு – வயலிலே யலர்ந்த வாசனைபொருந்திய தாமரைகளையுங் குமுதங்களையும் பிடுங்குதலாலும்,—குருமணிக் காஞ்சிச் சூழல் கொழுமனை மலரப் புல்லி – நிறம்பொருந்திய அழகிய காஞ்சிமரச்சோலைகளிற செழித்த அரும்புகள் மலரும்படி சேர்தலாலும்,—திரு இயல் கடைசிமார் தம் செய்கையும் தழீஇயது – அழகுபொருந்திய வுழத்திமாருடைய வொழுக்கத்தையும் தழுவியது,—ஆங்கண் – அம்மருதநிலத்தில். எ—று.

கிள்ளை யஞ்சும்படி மதுர வார்த்தை பேசிச்சென்று வயலிலே பூத்த முண்டகத்தையுங் குமுதத்தையுங் களையாகக் கட்டுக் காஞ்சிமரச் சூழலிலே கொழுமனை மலரும்படி தழுவி யிருக்குங்கடைசிமாரென்க. கடைசியர்க்குக் காஞ்சிச்சூழல் அல்குலெனினுமாம். அடுக்குகள் பன்மைகுறித்து நின்றன. மருதமர்கிள்ளை யென்றது பன்மைகுறித்த வழக்கென்க. (உரு)

முண்டகநீலஞாழல்முருகெழமுடியிற்சூடி
மண்டியவிலைகைக்கொண்டுவளைமுதல்வேட்டோர்க்குய்த்து
மிண்டிமீன்கவர்புள்ளோப்பிவெய்துமிக்கிரக்கங்காட்டித்
தொண்டைவாய்ப்பரத்திமார்தந்தொழின்மையும்பெற்றதாங்கண்.

(இ—ள்.) முண்டக நீலம் ஞாழல் - தாழை நீலம் ஞாழல் என்னுமிவற்றை,—முருகு எழ முடியில் சூடி - வாசனையெழும்படித் தன்றலையிற் சூடுதலானும்,—மண்டிய இலை கைக்கொண்டு - நெருங்கிய இலைகளைப்பறித்துக்கொள்ளுதலானும்,—வேட்டோர்க்கு வளை முதல் உய்த்து - விரும்பினர்க்குச் சங்குமுதலியவற்றைக் கொடுத்தலானும்,—மிண்டி மீன்கவர் புள் ஓப்பி - நெருங்கி மீனைக்கவரவரும் புட்களை அகற்றலானும்,—வெய்து மிக்கு இரக்கம் காட்டி - சடுதியிற் பிரவாகித்து ஆரவாரத்தைக் காட்டுதலானும்,—தொண்டை வாய்ப் பரத்திமார்தம் தொழின்மையும் பெற்றது - கொவ்வைக்கனியையொத்த வாயையுடைய நுளைச்சியரொழுக்கத்தையும் பொருந்தியது,—ஆங்கண் அந்நெய்தனிலத்தில். எ—று.

தாழைமுதலியவற்றை முடியிற்சூடி, இலைவாங்கிக்கொண்டு வளைமுதலியனவற்றை வேட்டோர்க்குக் கொடுத்து, மீன்கவர்புள்ளைத்துரத்தி வெய்யசொன்மிக்கு இரக்கத்தையுங்காட்டும் பரத்தியரென்க. வெய்து மிக்கு - கொடுமைமிக்கென்றுமாம். (உஅ)

கடுங்கனியுப்புமெத்திக்கனிபலவுக்கிநீந்தி
நெடுங்கடல்குளித்துக்கீழ்நீர்நித்திலந்துவர்மேலாக்கிப்
படுங்கலன்பலவுந்தள்ளிப்பரத்தியர்தோயப்புல்லிக்
கொடுங்கொலைப்பரவமாக்கள்கொள்கையுங்கெழீஇயதாங்கண்.

(இ—ள்.) கடும் கனி உப்பு மெத்தி - கடுமையான ஒலியுடனே இனிமை மிகுதலானும்,—கனி பல உக்கி - கனிகளும் பலவற்றிலும் பெருகுதலானும்,—நீந்தி நெடும் கடல் குளித்து - (அக்கனியை) நீந்தி நெடிய கடலிற் பெருகுதலானும்,—கீழ் நீர் நித்திலம் துவர் மேலாக்கி - (தான்பெருகும் விசையினால்) நீர்க்கீழுள்ள முத்தும் பவளமும் ஆகிய இவற்றை மேலேவரச்செய்தலானும்,—படும் கலன் பலவும் தள்ளி - தன்னிடத்துப்பொருந்திய ஆபரணங்கள் பலவற்றையும் களைதலானும்,—பரத்தியர் தோயப் புல்லி - நுளைச்சியர் முழுக அவரைப்பொருந்துதலானும்,—கொடும் கொலைப் பரவமாக்கள் கொள்கையும் கெழீஇயது - கொடிய கொலையைச்செய்யும் நுளையருடைய வொழுக்கத்தையும் பொருந்தியது,—ஆங்கண் - அந்நெய்தனிலத்தில். எ—று.

கடிய களிப்பைச்செய்யும் உப்பைமிகுத்து களிகள்பலவுமுழக்கி, நெடுங்கடனீந்திக்குளித்து, கீழ்நீர்க்கணுள்ள முத்தும் பவளமுமாகியவற்றை மேற்கொண்டுசென்று, பொருளேற்றிய தோணிகள் பலவற்றையும் நீரிலேதள்ளி, பரத்தியர் தம்மைத்தோயத் தாமும் அவரைத்தோயும் பரவமாக்களென்க. மெத்தியென்பதில் பிறவினையுணர்த்தும் விகுதிதொக்கது. கலி - ஒலி; களியென்றது ளனவொற்றுமை. (உகூ).

கலையொடுவாளம்பற்றிக்கன்னியாய்க்குரவம்போந்து
தலைமலைத்தெயித்திமாராய்த்தனுவொடுபறைத்துமார்த்தர்க்
குலைவுசெய்யினராயுமுருப்பவிர்முரம்புதோறு
மலைநிரைப்பாலைநித்தமமிழ்தெனவொழுகிற்றம்மா.

(இ—ள்.) கலையொடு வாளம் பற்றி கன்னியராய் - கலைமானோடு வாளையும் பற்றி, துலாற் றுர்க்கையாகியும்,—குரவம் போது தலை மலர்த்து எயிற்றியராய் - குரவமலரைத் தலையிலணிதலால் பாலைநிலமாதராயும்,—தறுவொடு ஆரலித்து - ஆரவாரத்தோடு வழிச்செலவழித்தலால்,—மார்தர்க்கு உலைவு செய் எயினராயும் — வழிபோகும மானுடர்க்கு உலைவைச்செய்யும் பாலைநிலமாக்களாயும்,—உருப்பு அவிர் மூரம்பு தோறும் - வெப்பம்விளங்கும் பாலைநிலத்தோறும்,—அலை திரைப் பாலி நீத்தம் - (கரையை)யலைக்கும திரையையுடைய பாலியாறுனது,—அமிழ்து என ஒழுகிற்று - அமிழ்தம்போலப் பெருகிடது. எ—று.

விலைகொண்டு வழிபறித்து மாந்தர்க்குலைவுசெய்யும் எயினரெனக. (௫௨)

வேறு.

முழங்குசேய்நதிநாந்தினிமுகலியேயாதிப்
பழங்கண்டீரநதிபலவுமிப்பாலியேனுடு
தழங்குநீர்கொடுதலையளிபுரியுநாணிலத்து
வழங்குமைந்திணைவளஞ்சிறிதுரைத்திடப்படுமால்.

(இ—ள்.) முழங்கு சேய்நதி - ஒலிக்கசின்ற சேயாறு,—நந்தினி - நந்தினியாறு,—முகலி ஆதி - முகலியாறுமுதலிய,—பழங்கண் தீர் நதி பலவும் - சூழ்கினோருடைய துக்கத்தைத் தீர்க்கும் நதிகள்பலவும்,—இப் பாலியோடும் - இந்தப் பாலியாறோடு கூடி,—தழங்கும் நீர்கொடு தலையளி புரியும் - ஒலிக்கின்ற நீரைக்கொண்டு தலையளிசெய்யப்படும்,—நால் நிலத்து - நால்வகைநிலங்களுள்,—வழங்கும் ஐந்திணை வளம் - வழங்கிவரும் ஐந்திணைவளமானது,—சிறிது உரைத்திடப்படும் - எம்மாற் சிறிது கூறப்படும். எ—று.

நதிகள்பலவும் நீரைக்கொண்டு இப்பாலியாற்றோடு கூடித் தலையளிசெய்யும் நானிலமெனக் கூட்டுக. பிரமன்முதலியோர் குமாரகடவுளை யாட்டும் யாருனமையால் சேயாறெனப்பட்டது. தீர்க்குநதி தீர்நதி எனக்குறைந்தது. ஆல் அசை. நால்வகை நிலங்களாவன: முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன. அது "மாயோன்மேயகாடுறையுலகமும் சேயோன்மேயமைவரையுலகமும் வேந்தன்மேய்தீம்புனலுலகமும் வருணன்மேயபெருமணலுலகமும் முல்லைகுறிஞ்சிமருதநெய்தலெனச் சொல்லியமுறையாற் சொல்லவும்படுமே" என்பதனாலறிக. ஐந்திணை, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை என்பன. திணை - ஒழுக்கம். நானிலத்துவழங்கு மைந்திணைவளஞ் சிறிதுரைத்திடப்படுமாலென்றதனால் திணைமயக்கமுங் கூறினாரெனவுணர்க. (௫௩)

மருந்துண்விண்ணரமடந்தையர்க்கரியதன்மார்பந
திருந்துதன்குலத்தவர்க்கருள்சிறப்பினான்மகிழ்ந்து
விருந்தளித்தலுஞ்செய்வபோல்வெறுபர்வேலிறைக்குட
பொருந்துபூசனைவிழாத்தினைபெருப்பதுபொருப்பு.

மருந்து உண் விண் அரமடந்தையர்க்கு - அமிர்தத்தையுண்ணும் வானுலகத்துள்ள அரமகளிர்க்கும்,—அரிய தன் மார்பம் - பெறுதற்கரிய தமது திருமார்

(இ—ள்.) உயர்பணை - உயர்ந்த மூங்கில்களானவை,—மெல்லியல் கல்லார் - மெல்லிய இயல்பையுடைய வங்கிலத்தமகளிர்,—விழிக்கு உடைந்த மான்செவிகள் தடிந்து - தங்கண்ணுக்குத் தோற்ற மான்களுடைய செவிகளை வெட்டி,—அவ் உழிகளுறுதி ஆங்கு - அவ்விடத்து நிறைத்தாற்போல,—கண்பொதிபாளை கவிக்கும் - கணுவை மூடிய மடல்களைக் கழிக்கும்;—அவை மறைய வெள் கதிர் மணி உகுக்கும் - அம்மடல்கள் மறைய வெள்ளிய ஒளியையுடைய முத்துக்கள் சொரியும்,—கொழிக்கும் நித்திலம் மறைய—சொரிந்த அம் முத்துக்கள் மறை[illegible],—வண்தோரை மேற் கொட்டும் - அழகிய [illegible]அரிசிகளைமேலே சொரியும். எ-று.

"மூங்கிற்பாளை மாஞ்செவி போறல் நண்பொதிமான்செவிபோலவெதிர்முளைக் கண்பொதிபாளைகழன்றுகுப்பண்பிற்றே" எனபதனாலறிக. கனுறதியவெனப் பன்னிறகநீங் கொக்கது. (௬௭)

மழைத்தகார்முகிலகடுகிண்டெழுந்தவானோக்குந
தழைத்தவேய்நுதிக்களிமயிலகவுவ[illegible]
குழைத்தமாமரங்கீழ்ந்தவன்கோயின்முன்மணியி
னிழைத்தகேதனத்திளமயிலகவலோடிசையும்.

(இ—ள்.) களிமயில் - களிப்பையுடைய மயில்களானவை,—மழைத்த கார் முகில அகடு கிண்டு எழுந்த - மழையைப் பெய்யும் கரியமுகிலின் வயிற்றைக் கிழித்தெழுந்த,—வான் நோக்கும் தழைத்த வேய்நுதி அகவுவ - வானத்தையளாவத் தழைத்த மூங்கிலினுடைய நுதியிலிருந்தகவுவன,—சமர்க்கண் குழைத்தமாமரம் கீழ்ந்தவன் கோயில் முன் - யுத்தத்தின் கண்ணே, தளிர்த்த சூரனாகிய மாமரத்தைக் கிழித்த முருகக்கடவுளுடைய திருக்கோயிலின் முன்னே,—மணியின் இழைத்த கேதனத்து இளமயில - இரத்தினமழுத்திய கொடிக்கணெழுதிய இளமயில களானவை,—அகவல் ஓடு இசையும் - ஆடுதலை நிகர்க்கும். எ-று. (௬௮)

இளைகுகாழகிற்சந்தனப்பொதும்பரெவ்விடனும்
வளாகுமேய்ந்துசேவகங்கொளுமான்மதமொழுக்குங்
குளகுதேரியவருடைமான்குப்புறமடுக்கத்
தளைகிளையொடுபாட்டிரட்டுமாலளைதொறுங்குரால்கள்.

(இ—ள்.) மதம் ஒழுக்கும் மான் - மதத்தைச் சொரியும் யானைகளானவை,—இளைகுகாழ் அகில் சந்தனப் பொதும்பர் எவ்விடனும் - தழைத்தல் பொருந்திய காழையுடைய அகில்மரச் சோலை சந்தனமரச் சோலையாகிய எவ்விடத்தும்,—வளாகு மேய்ந்து சேவகம் கொளும் - வளாகைமேய்ந்து துயிலிடமடையும்,—வருடைமான் குளகு தேரிய குப்புறும் - வரையாடுகள் உணவைத்தேடும் படி குதிக்கும்,—அடுக்கத்து அளை தொறும் - பக்கமலையின் அளைகள் தோறும்,—குரால்கள் அளைகிளையொடு பாட்டு இரட்டும் - கோட்டான்கள், தம் பெடைகளோடும் பாட்டுக்களை இரட்டித்துப்பாடும். எ-று.

இரண்டும் ஒத்துப்பாடுதலால் இரட்டுமென்றார். காழ் - வயிரம். பொதும்பர் அகிலுக்குங் கூட்டப்பட்டது. அகிலையுடைய சந்தனச்சோலையெனப் பண்புபற்றிய வுமாக்கி உரைக்கினுமாம். வளாகு - வர்வளைப்புல்: அது. "புணர்நிலை வளாகின் ஞெள [illegible] வயக்கெழில்யானைப்பயமலைசாடனை" என்னுங் 'கலிப்பாட்டி[illegible]

ர்ச. மான், விலங்கின் பொதுப்பெயராதலால் பிணைக்குமாயிற்று. அது "வருடைமான குழவியவனமடிலாட்டனே" என்பதனானுமறிக. இந்நூலாசிரியரும் - வருடைமான் என இச்செய்யுளிற் கூறியதூஉங் காண்க. சேவகக்கொளுமான் - யானை. யானைமதமொழுகும் என்றுமுடிக. (௩௯)

வணங்குநுண்ணிடைமாதரார்வனமுலைக்கோட்டோ
டணங்குபோர்செயவினைஞரைபோலடற்கரிக்கோ
டிணங்குவேலிசூழ்குறிச்சியெங்கணுமினிதெழுந்த
கணங்கொள்வள்ளைகேட்டுறங்குவகனிப்பொழிற்கிள்ளை.

(இ—ள்.) வணங்கும் நுண் இடை மாதரார் வனம் முலைக்கோட்டோடு - வளைகின்ற நுண்ணிய இடையையுடைய கொடிச்சிமாருடைய அழகுபொருந்திய முலைக்கோட்டுகளோடு,—அணங்கு போர்செய வினைஞர்போல் - வருத்தமுண்டாகும் போரைச் செய்ய வினைஞர்போல,—அடல் கரிக்கோடு இணங்கு வேலிசூழ - வலிய யானைக் கோடுகள் ஒத்த வேலியாகச் சூழ்ந்த,—குறிச்சி எங்கணும - அச்சிற்றூரெவ்விடத்தும,—இனிது எழுந்த கணம் கொள் வள்ளை கேட்டு - இனிதாக எழுந்த கூட்டங்கொண்ட உலக்கைப்பாட்டைக் கேட்டு,—கனிப் பொழில் கிள்ளை உறங்குவ - கனிகளோடு கூடிய சோலையிடத்துள்ள கிளிகள் உறங்குவன. எ—று.

உலக்கைப்பாட்டினிமை அஃறிணைப்பொருளையு மயக்கிவதென்பார் கணங்கொள் வள்ளைகேட்டுறங்குவகனிப்பொழிற்கிள்ளையென்றார். (௪௦)

உடுக்கவொள்ளிணர்த்தழைபலகொய்துமூழ்தினைகண
மடுக்கும்புள்ளெறிகவண்கலால்வார்பணைபொதிர்த்து
மிடுக்கணேபுரிமாதரையிற்செறிப்பாமென்
றடுக்கல்வேங்கைகளெரியகைத்தெனவலருழ்க்கும்.

(இ—ள்.) அடுக்கல் வேங்கைகள் - அக்குறிஞ்சிநிலத்துள்ள வேங்கைமரங்களானவை,—ஒள் இணர்த் தழை பல உடுக்கக் கொய்தும் - ஒள்ளிய கொத்துக்களையுடைய தழைகள் பலவற்றை யுடுக்கக் கொய்தலானும்,—மூழ் தினைகள் மடுக்கும் புள் எறி கவண் கலால் வார் பணை பொதிர்த்தும் - முதிர்ந்த தினைகளையுண்ணும் புட்களையெறிந்தாரத்தும் கவண்கல்லினால் நெடிய கொம்பர்களைக் காயப்படுத்தி முறித்தலானும்,—இடுக்கணே புரி மாதரை - எப்பொழுதும் துயரத்தைச்செய்யும் இம்மங்கையரை,—இல் செறிப்பாம் என்று - இல்லின்கட் செறிப்போமென்று கருதி,—எரி அகைத்து என - நெருப்பை அறத்துவிட்டாற்போல,—அலர் உழ்க்கும் - பூவைச்சொரியும். எ—று.

ஏகாரந் தேற்றம். வேங்கை பூக்குங்காலம், தினை முதிருங்காலமாதலின் இற்செறிப்பாமென்று அலருழ்க்குமென்றார் அது "துன்றுமேனல்கள்விளைந்தனகனிகளுஞ்சொரிய" என்பதனானுமறிக. இது தற்குறிப்பேற்றம். (௪௧)

உருபினூர்த்துடன்றெதிரெறமுழுவையோடும்பல்
பொருதமூர்க்கெழில்கனவலிற்பொருக்கெனவெழுந்தங்
கருகுநின்றவொள்வியிணர்வேங்கையையகலச்சு
மருவுவெஞ்சினமூண்டுழிவருத்தநியார்போல்.

கூண்டோடு சிதைந்து,—உக்கை அசும்பின நிலத்து - சொரிந்துகிடக்கும் வழுக்குநிலத்தில்,—மரு மலர்ப்பதம் வழுக்கி வீழ்ந்து இனைவா - வாசனையொருங்குந் தாமரைமலர் போலும் அடிகள் வழுக்குதலால் வீழ்ந்து வருந்துவா,—ஒருபொருட்கு இடர் செய்வினை - ஒருபொருட்கு (மற்றொன்றுக்குத்) துயர்செய்வினை,—அவை - அத்துயர்,—மறுகணத்து உறுதொல் - பிற்கணத்து தம்மையடையாதொழியுமோ ஒழியாது. எ—று.

உக்கை அசும்பின என்பன பெயரெச்சமுற்று. மறுகணம் என்பதனால் முற்கணமென்பது வருவிக்கப்பட்டது. அது "பிறர்க்கின்னா முற்பகற்செய்யிற் றமக்கின்னா பிற்பகற் றாமேவரும்" என்பதனாலறிக. இது வேற்றுப்பொருள்வைப்பு என்னுமணி. (சுச)

ஆழ்ந்தநீரலகாதிகளளித்திடப்படுவ
வாய்ந்தமாமணியாதியவயினறொறுமிறைவ
தாழ்ந்தவாயினுமரியவேலுயர்ந்தவாயதகையும
வீழ்ந்தவாயினுமெளியவேலுயர்ந்தவாயவிடுமே.

(இ—ள்.) அளித்திடப்படுவ - (அந்நிலத்து வாழ்வோரால்) போற்றப்படுவன,—ஆழ்ந்த நீர் அலகு ஆதிகள் - ஆழ்வாகிய கடலினின்றும் எடுக்கப்பட்ட கவடிமுதலியனவாம்,—வயின்தொறும் இறைவ வாய்ந்த மாமணி ஆதிய - இடங்கடோறும் (இச்சிக்கப்படாமல்) தங்குவன சிறந்த மாணிக்கமுதலியனவாம்,—தாழ்ந்த ஆயினும் அரியவேல் உயர்ந்த ஆய் தகையும் - தாழ்ந்தபொருள்களாயினும் கிடைத்தற்கரியனவாயின உயர்ந்தனவாய்ப் பெருமையடையும்,—விழுந்த ஆயினும் எளியவேல் தாழ்ந்த ஆயவிடும் - விருமபத்தக்க பொருள்களாயினும் கிடைத்தற்கெளியனவாயின தாழ்ந்தனவாய (எளிமை) யடையும். எ—று.

ஏகாரம் - தேற்றம். இதுவும் மேலையணி. (சரு)

கொழுவிடைக்கறைவிராவியபலிக்குறைநிரப்பி
வழுவிலபல்பிரப்பிரீஇவெறியாட்டயர்மன்றத்
தொழுகுபல்லியவோதையுமுரவுவெள்ளருவி
யிழுமெனோதையுமெழுகடலவியினுமவியா.

(இ—ள்.) கொழு விடைக் கறை விராவிய - கொழுத்த கடாவினது உதிரங்கலந்த,—பலிக்குறை நிரப்பி - பலிக்குறைகளை நிரப்பி,—வழு இல் பல பிரப்பு இரீஇ - குற்றமில்லாத பல பெருண்டிவகைகளையும் படைத்து,—வெறியாட்டு அயர் மன்றத்து - வெறியாட்டுச்செய்யுங் களங்களில்,—பல்லியத்து ஒழுகு ஓதையும் - வாத்தியங்களினின்றெழுமோசையும்,—உரவு வெள் அருவி இழுமென ஓதையும் - பரக்கின்ற வெள்ளிய அருவியின் இழுமென்னுமோசையும்,—எழு கடல் அவியினும் அவியா - எழுகடல்களினது ஒலியடங்கினும் அடங்காவாம். எ—று.

விடை கடாவென்பது "மாத்தாட்கொழுவிடைக்குருதியொடு" என்னுந் திருமுருகாற்றுப்படை உரையானுணர்க. உதிரங்கலந்தபலிக்குறை [illegible] காடுகலந்த வெள்ளரிசி பலிக்குறையெனினும் சிறுபலியெனினும் பொருந்தும் [illegible] லியம் - அந்நிலத்திற்குரிய தொண்டகம். இழுமெனோதை - அநுகரண [illegible] (சசு)

தேனுஞ்செந்தினையிடிகளுந்தீஞ்சுவைக்கனியு
மூனுந்துய்ப்பனவுடுப்பனமரவுரிதழைகள்
வானுந்தோய்சுனையாடுவமணிவரையிருப்ப
வேனஞ்சூழ்ந்தகுன்றவர்க்கொருநல்குரவின்றே.

(இ—ள்.) துய்ப்பன — புசிக்கப்படுவன,—தேனும் செந்தினை இடிகளும் தீம் சுவைக்கனியும் ஊனும் — தேனும் செந்தினைமாவும் மதுரச்சுவையையுடைய கனிகளும் தசைகளுமாம்,—உடுப்பன மரஉரி தழைகள் — உடுக்கப்படுவன மரவுரியு மிலைகளுமாம்,—ஆடுவ வானும் தோய் சுனை — முழுகப்படுவன் வானிலுள்ளாரும் முழுகுஞ் சுனைகளா ம்,—இருப்ப மணிவரை — இருக்கப்படுவன அழகிய மலைகளாம்,—(ஆதலால்) ஏனம் சூழ்ந்த குன்றவர்க்கு — பன்றிகள்சூழ்ந்த அக்குறிஞ்சிநிலத்துறைவார்க்கு,—ஒரு நல்கு ரவு இன்று - ஒருவறுமையுமின்றாம். எ—று.

வானும் என்னுமும்மை உயர்வுசிறப்போடெச்சம். நல்குரவு எனனும முற்றும்மை தொக்கது. ஏனைநிலத்தோர்போலப் பொருள்கொண்டு தேடுவனவின்மையின் ஒருநல் குரவின்றென்றார். (சஎ)

அன்பினைந்திணைக்களவலாற்களவொன்றுமறியா
ரின்பமாண்பிரிவினைவலாலினைவொன்றுமெய்தார்
துன்பமோட்டுவாய்ப்பொய்யலாற்பொய்யொன்றுஞ்சொல்லார்
முன்புமாதவப்பயத்தினுலவண்முயக்கமர்வார்.

(இ—ள்.) முன்பு மாதவப் பயத்தினுல் அவண் முயக்கு அமர்வார் — முன்புசெ ய்த பெரிய தவப்பயனுள் அவ்விடத்துறைதலை விரும்புவோர்,—அன்பினைந்திணைக்களவு அலால் களவு ஒன்றும் அறியார் — அன்பினைந்திணையென்னும் மூதலையுடைய (அகப்பொ ருணூலிற் கூறும்) களவொழுக்கமேயன்றி வேறோர் களவுமறியார்,—இன்பமாண் பிரிவு இனைவு அலால் இனைவு ஒன்றும் எய்தார் — இன்பத்தை மாட்சிப்படுத்தும் (பொருள்வயி ற் பிரிவுமுதலிய பிரிவாலாகும்) வருத்தமன்றி வேறு வருத்தமொன்று மடையார்,—து ன்பம் ஓட்டுவாய்ப் பொய் அலால் பொய் ஒன்றும் சொல்லார் — புலவித்துன்பத்தை நீக் கும்வாயினுகிய பொய்யேயன்றி வேறொருபொய்யும் சொல்லார். எ—று.

இன்பமாண்பிரிவு இனைவு என்பதற்கு இன்பத்தை மாட்சிப்படுத்தும் புலவியாலா கும் வருத்தமென்றுரைப்பாருமுளர். இது ஒழிப்பெண்ணுமணி. (சஅ)

உயங்குவாரலதின்புறுரெவ்வுதண்மையினுன்
முயங்குவாரைமூன்றுயர்செய்தன்முறைதெரிந்தாங்கு
வயங்குலாவிடமாரவேள்பகழியாய்மலர்ந்த
தயங்குதேமலரசோகங்கடழீயதகுறிஞ்சி.

(இ—ள்.) [illegible] — அக்குறிஞ்சிநிலமானது,—உயங்குவார அலது இன்பு உறு" என்பது உ[illegible]வருத்தமுறுபவரேயன்றிப் பிறர் இன்பமுறுவரோ (அன்றோர்) கூறுவது [illegible]யினுல்,—முயங்குவாரை — புணர்பவர்களை,—மூன் துயர் செய்தல் [illegible] — மூன் துயருறவித்தல் முறைமையைத் தெரிந்ததுபோ

-யாகிமலர்ந்த,—தயங்கு தேமலர் அசோகங்கள் தழீயது - விளங்குகின்ற தேன் பொருந்திய மலர்களையுடைய அசோகமரங்களைப் பொருந்தியது. எ-று.

முன்றுயர்செய்தல் "அனைத்துணர்வும்போக்குமசோகம்" என்பதனலறிக. வருந் துயோரலதின்புருரெனவே வருந்துவோர் இன்புறுவரென்பது பெற்ரும். உயங்குவா ரலதின்புருரென்பதை "துன்பமுற்றவாக்கலாலின்பமில்லை" என்னுஞ் சிந்தாமணியானு முணர்க. (சகூ)

பகைத்துடிப்படுப்பவர்பகைகசட்பாய்கலை
யுகைக்குமச்செய்கையாலுவப்பச்செய்வபோன்
மிகைத்திறற்குமரிக்குவிழாவெடுத்தனுா
துகைத்திறுடபதுதொகுமுரப்புச்சூழலே.

(இ—ள்.) தொகும் முரப்புச் சூழல் - பாலைநிலமானது,—பகைத்துடிப் படுப்பவர் பகைத்துடியென்னும் பறையை அடிப்பவா,—பகைக்கட் பாய்கலை - பகையாகிய கண்ணையுடைய பாய்கின்ற கலையை,—உகைக்கும் அச்செய்கையால் - செலுத்தித் தமக்கு வென்றிதருந்தன்மையினல்,—உவப்பச் செய்தல்போல் - (தாமும்) அவனை மகிழ்வித்தல் செய்வதுபோல,—மிகைத் திறல குமரிக்கு - மிக்க வீரத்தையுடைய துர்க்கைக்கு,—விழா எடுத்து - திருவிழாச்செய்து,—அனுா துகைத்து இறுப்பது - துயரத்தைக் கெடுத்து இருப்பது. எ-று.

இதுவன்றி, பகைத்துடிப்படுப்பவர் பகைக்கண்- பகைத்துடியை அடிக்கும் அந்நிலத்தோர்க்குப் பகையாயினரிடத்து-பாய்கலை உகைக்கும் அச்செய்கையால்- பாயுங்கலையைச் செலுத்தி வென்றிதருந்தன்மையினலென உரைத்தலுமொன்று. பாலைநிலமானது துர்க்கைக்கு விழாவெடுத்தலினல் துக்கம்நீங்கியிருப்பதென்க. பகைத்துடி - பாலைப்பறை; பகைக்கண் அடிக்கும்பறையாதலின் இவ்வாறுகூறினர். தொகுதல் - கூடுதல். முரம்பு - பரலடுத்துயர்ந்தநிலம். சூழல் - இடம். (ருo)

வரையுறைகடவுளாமகனைநீங்குதற்
கருமையினடுத்தமையறையுஞ்சண்டிகை
கிரியினுங்கிரிப்புறங்கெழீஇயகானினும்
பெரிதுமாம்பாலையம்பிராட்டியாயதே.

(இ—ள். சண்டிகை - துர்க்கையானவள்,—கிரியினும் கிரிப்புறம் கெழீஇய கானினும் பெரிதும் ஆம் - குறிஞ்சிநிலத்திலும் அதற்குபபுறமாகிய முல்லைநிலத்திலும் பெரிதும் உளதாகின்ற,—பாலையம்பிராட்டி ஆயது - பாலைநிலத்திற் கதிதேவதையாயிருந்த தன்மை,—வரைஉறை கடவுள் ஆம்மகனை - மலையில் வாசஞ்செய்யுந்தெய்வமாகிய தன் மகனை (குறிஞ்சிநிலத்தெய்வமென்றபடி)—நீங்குதற்கு அருமையின் - நீங்கியிருத்தலியலாமையால,—அடுத்தமை அறையும் - அடுத்திருத்தலை அறிவிக்கும். எ-று.

பாலையெனவொருநிலமில்லையென்பார் கிரியினுங் கிரிப்புறங்கெழீஇயகானினும்பெரிது மாம்பாலை என்றார். அறையுமென்றது தாற்பரியப்பொருள். இதனல் முல்லையுங் குறிஞ்சியுந்திரிந்து பாலையானதன்றிப் பாலைக்கு நிலமின்மைபெறப்பட்டது "முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற்றிரிந்து நல்லியல்பழிந்து நடுங்குதுயருறுத்துப் பாலையென்பதோர் படிவங்கொள்ளும்" என்னுஞ்சிலப்பதிகாரச்செய்யுளானுமுணர்க. (ருக)

ஆதுணம்பறவைகடுதுண்டோவறக்
காதலந்துணையொடுகெழுமிப்புல்லுவ
வேதுணவுண்ணினுமெவர்க்கும்வேள்கணை
தீர்திறமரிதெனத்தெளிப்பபோன்றன.

(இ—ள்.) ஆதுணம் பறவைகள் — புறாப்பறவைகளானவை,—ஆது உண்டு — பருக்கைக் கற்களையுண்டு,— ஓஅற காதல் அம் துணையொடு கழுமி புல்லுவ — நீங்குதலின்றி விருப்பமைந்த அழகிய பெடைகளோடு மயங்கிப்புணர்வன,—வேள்கணை — காமநோயானது,—எவர்க்கும் — யாவர்க்காயினும்,— ஏது உணவு உண்ணினும் — எவ்வுணவு புசிக்கினும், தீர்திறம் அரிது என — நீங்குந்திறம் அரியதென்று,—தெளிப்பபோன்றன — தெளிவிப்பனபோன்றிருந்தன. எ—று.

வேள்கணை - ஆகுபெயர். காமநோய்க்கேதுவாகாத கற்களையுண்டும் புறாப்பறவைகள் தம்பெடையோடொழிவின்றிச் சேர்வனவாதலால் காமநோய்க்கு அன்னங் காரணமல்லவெனத் தெளிவித்தவாறு.

எயிற்றியரிளமுலையிணையவெண்ணுபு
வெயிற்றலைமாதவம்விளைத்தல்வீழ்வன
பயிற்றியதெனநிறம்பரந்தமெல்லிதழ்
குயிற்றியதெனமுகைத்தலர்ந்தகோங்கமே.

(இ—ள்.) கோங்கம் — கோங்கமரங்கள்,—எயிற்றியர் இளம் முலை இணைய எண்ணுபு — எயினப்பெண்களுடைய இளமையாகிய முலைகளை நிகர்க்கும்படியெண்ணி,—வெயில் தலைமாதவம் விளைத்தல் — வெயிலினிடத்துப் பெருந்தவஞ்செய்தலை,—வீழ்வன பயிற்றியது என — விரும்பினவாகிச்செய்தல்போல,—நிறம்பரந்த மெல்லிதழ் குயிற்றியது என முகைத்து — நிறம்பரந்த மெல்லிய விதழ்களைப்பதித்து வைத்தாற்போல முகைகொண்டு,—அலர்ந்த - மலர்ந்திருந்தன. எ—று.

வீழ்வன வினையெச்சமுற்று. பயிலுதல் பயிற்றுதலென விகாரப்பட்டது. வீழ்வனவென்பதனை முற்றாக்கிநிகர்ப்பனவென்று கோடலுமொன்று. இது இல்புலிபபயன்றற்குறிப்பென்னு மணி.

குரவலர்ப்பாவைபெற்றெடுப்பகோழரை
மரவம்வெள்ளணியினுல்வயக்கமாணுவ
விரவலர்துற்றுவவேரிப்பாடலம்
பரவிசைபகர்வனபறவைக்கோகிலம்.

(இ—ள்.) குரவு அலர்ப்பாவை பெற்று எடுப்ப — குரவமரம் அலராகியபாவையைப்பெற்றுஎடுப்பன,—கோழ் அரை மரவம் - வழுவழுப்பாகிய அரையையுடைய வெண்கடம்புகள்,—வெள் அணியினுல் வயக்கம் மாணுவ — வெள்ளணியினாலே விளக்கத்தைப் பொருந்துவன,—வேரிப்பாடலம் — வாசனைபொருந்திய பாதிரிமரங்கள்,—விரவு அலர் துற்றுவ — பொருந்திய அலரைத்துற்றுவன,—பறவைக்கோகிலம் — கோகிலப்பறவைகள்,—பரவு இசை பகர்வன — வாழ்த்திசைபகர்வன. எ—று.

வெள்ளணியினுல், என்பதை வெள்ளணியினென்னக்கொண்டு வெள்ளணிநாள் விளக்கத்தைப் பொருந்தவனவெனக் கொள்ளினுமாம். வெள்ளணிநாளாவது குழந்தை பிறந்த நாளில் வெள்ளைவஸ்திரந்தரித்து வெண்மாலைசூடிக் கொண்டாடும் விழா. அல ரூற்றல் குழந்தைபிறந்தமையைப்பலர் அறியத்தூற்றல். (௩௪)

விரிமுகிலிடையிடைவிராயமீனமுஞ்
சுரிகுழன்முச்சியிற்றூக்குநித்திலச்
சொரிகதிர்மணிகளுந்துணையுமென்பவே
பொரிகெழுபொகுட்டரையிருப்பைபூத்தவே.

(இ—ள்.) பொரிகெழு பொகுட்டு அரை இருப்பைபூத்த - பொருக்கைப்பொருந் திய பொகுட்டாகிய வரையினையுடைய இருப்பைகள் பூத்திருப்பன,—விரி முகிலிடை இடைவிராயமீனமும் - விரிந்த முகிலினிடையிடையே பொருந்திய நட்சத்திரங்களை யும்,—சுரிகுழல் முச்சியில தூக்கும் - சுரிந்த மயிர்முடியிற் றூக்கப்பட்ட,—சொரிகதிர் நித்தில மணியும் - சொரிகின்ற கிரணத்தையுடைய முத்துமணிகளையும்,—துணையும் ஒக்கும். எ—று.

என்ப, ஏ அசை. பொகுட்டு—குமிழ்ப்பு, முச்சி ஆகுபெயர், இது உவமையணி. (௩௫)

நிகழ்தரு நால்வகை நிலனுமெல்லையாத்
திகழ்தரு பாலையந்திணைக்கங்கேற்புற
விகழ்தருஞ் சுரத்தவரெய்துபோகமும்
புகழ்தரு நானிலத்தவர்தம்போகமே.

(இ—ள்.) நால்வகை நிகழ்தரும் நிலனும் எல்லையா—நால்வகையென்றுசொல்லப் படும் நிலங்களுந்தனக்கெல்லையாக,—திகழ்தருபாலைத் திணைக்கு ஏற்புற—விளங்குகின்ற பாலைத்திணைக்கு ஏற்கும்படி,—இகழ்தரும் சுரத்தவர் அங்கு எய்து போகமும்—இகழப் பட்ட பாலைநிலமாக்கள் அங்கடையும் போகங்களும்,—புகழ்தரும் நானிலத்தவர் போ கம்—புகழப்படும் அந்நால்வகைநிலங்களினுமுறைவோர் அடையப்படும் போகமேயாம். எ—று.

அம்மும் தம்மும் சாரியை. நிகழ்த்தல், நிகழ்தலென இடைகுறைந்தது. பாலைக் குநிலமில்லாமை "நடுவு நிலைத்திணையே" என்னுஞ்சூத்திரமுதலியவற்றுணர்க. இகழ் தரும் சுரத்தவரென்றதும் இக்கருத்தநோக்கியும் ஆறறுத்தன்முதலிய விழிதொழில்க ளை நோக்கியுமென்க. தத்தமக்குநிலமுண்மையானும் இதுபோற் பாவத்தொழில் இன் மையானும் ஏனைநிலங்களைப்புகழ்தருநானிலமென்றதெனவறிக. (௩௬)

உடங்குசெல்பவர்க்கிடையூறொன்றின்றியே
யடங்கரும்பெருமகிழ்வாக்கிமாதரை
யிடங்களினீரியவர்செலவுழுங்குமா
தொடங்கலினுதவியிற் சுரமொப்பில்லையே.

(இ—ள்.) உடங்குசெல்பவர்க்கு—உடன்செல்பவராகிய மகளிர்க்கு,—இடையூறு ஒன்று இன்[illegible] யூறுகளொன்றும் இன்றாக,—அடங்க அரும் பெருமகிழ்வு ஆக்கி அடங்கற்கரிய [illegible] மகிழ்ச்சியையுண்டாக்கி,—மாதரை இடங்களின் இரீஇயவர் செ

அழுங்குமா தொடங்கலின் - பெண்களையவ்விடங்களில் இருக்கச்செய்தலும் காளையருடைய செலவை அழுங்குவிக்கும்படி செய்தலினால், — உதவியில் - உதவிசெய்தற்கண், சுரம் ஒப்பு இல்லை — அப்பாலைநிலத்திற்கொப்பாகவேறொன்றில்லை. எ — று.

ஒன்றும் என்றுமும்மைதொக்கது. இடையூறிலவாகச்செய்தல் விருந்துவிலக்கல் இடைச்சுரத்துக்கண்டோர் புகழ்தன்முதலியவற்றானுணர்க. இன்றி என்னுஞ்செய்தெனெச்சம் செயவென்னெச்சமாகக்கப்பட்டது. (௫எ)

பிரிந்தவர் பசலையம்பெரிய போர்வையுட்
டிருந்தவரென்னதன்செய்கைதோற்றியாங்
கரந்தைசெய்மதன்கணையாகப்பூத்தமா
மரந்தழீஇயதுநலம்வளாயபாலையே.

(இ—ள்.) நலம்வளாயபாலை — நன்மைபொருந்திய பாலைநிலமானது, — பிரிந்தவர் பசலையம் பெரியபோர்வையுள் இருந்தவர்என்ன — காதலரைப்பிரிந்தமகளிர் பசலையாகிய பெரியபோர்வையுள்ளே இருந்தமுறவரென்று, — தன் செய்கை தோற்றி ஆங்கு — தன்செய்கையைக் காட்டியதுபோல, — அரந்தைசெய்மதன்கணை ஆகப்பூத்து — துன்பத்தைச்செய்யும் மன்மதபாணமாகப்பூத்து, — மாமரம் தழீஇயது — மாமரங்களைத்தழுவப்பெற்றது. எ — று.

வளவியவென்னும்பெயரெச்சம் வளாயவென விகாரமாயிற்று. செய்கையாலென்னும் வினையெச்சவிகுதி தொக்கது பசலையம் பெரிய போர்வையுள் இருந்தவரென்றதனாலும் ஆகப் பூத்தவென்றமையாலும் வெள்ளிடையின்றிப்பூத்தனவாம். போர்வையுட்டிருந்ததல் அதுவாய்த்தோன்றல். (௫அ)

வேறு

ஆக்கங்கருதித்துணைநீங்கவன்னோர்கிளர்ந்த
வாக்கின்படிமங்கையராருயிர்வாழ்ந்திருக்கை
காக்குந்தொழிலென்றுபுரக்குமக்கண்ணற்கன்பு
பூக்குஞ்செயலாற்பொலிவுள்ளதுபூத்தகானம்.

(இ—ள்) பூத்தகானம் - பூக்களையுடைய முல்லைநிலம், — துணை ஆக்கம் கருதி நீங்க - தலைவராயினவர் பொருள்கருதிப்பிரிய, — அன்னோர்கிளர்ந்த வாக்கின்படி - அக்காதலர்செல்லும்பொழுதுகூறிய வார்த்தையின்படி, — மங்கையர் ஆருயிர் வாழ்ந்திருக்கை - பெண்கள் அரிய உயிர் வாழ்ந்திருத்தலையே, — காக்குந்தொழிலென்று - காவற்றொழிலென்று, — புரக்கும் அக்கண்ணற்கு - காக்கின்ற அவ்விஷ்ணுவுக்கு, — அன்புபூக்கும்செயலால் - அன்புமிகுஞ்செயலினால், — பொலிவு உள்ளது - பொலிவையடைந்தது. எ — று.

அகரம் பண்டறிசுட்டு துணைவர் துணையெனவீறுகெட்டது. (௫௯)

ஆளிக்கொடியேந்தியதனைகயகற்சியாற்றான்
மூளுற்றவார்வத்தணிமைக்கண்முற்றிற்றுசேராக்
காளக்குருமேனிமுராரி கல்சூழ்முரம்பு
கோளுற்றகனைக்கொருதெய்வதமாயகொள்கை.

(இ—ள்) காளம் குருமேனி முராரி — கரியநிறம்பொருந்திய விஷ்ணு, — கல்சூழ்முரம்புகோளுற்ற தானக்கு — குறிஞ்சிநிலத்தை

தன்கட்கொண்ட முல்லைநிலத்திற்கு,—ஒரு தெய்வதம் ஆய கொள்கை -- ஆதிதெய்வமாகப்பொருந்திய கொள்கையானது,—ஆளிக்கொடி ஏந்திய தங்கை -- சிங்கக்கொடியையுயர்த்திய தங்கையாகிய துர்க்கை,—அகற்சி ஆற்றான் -- அகன்றிருத்தலையாற்றாதவனாய்,—மூன்றுற்ற ஆர்வத்து -- அவள்மேற்கொண்டபற்றினால்,—அணிமைகாண்முற்றிற்று போர் ஆம் அணிமைக்கண்ணே வாசிருத்தலை நிகர்க்கும். எ — று.

கல்லும் முரம்பும் ஆகுபெயர். கானத்திற்கு என்பது கானக்கு என அத்தும் இன்னும் தொக்குநின்றன. முற்றியது என்பது முற்றிற்று என விகாரமாயிற்று; முற்றுதல் சூழுதல். (௯௰)

தூங்குங்கனிமல்கியகொன்றைதுணர்த்தலர்ந்து
பாங்கெங்குநிற்பதுருத்திரப்பல்கணங்கள்
வீங்கும்புகழ்மால்விடைபற்றிவெள்ளிச்சிலம்பி
னோங்கும்பெருமான்முனமுய்ப்பவந்துற்றதொப்பாம்.

(இ — ள்.) தூங்குங்கனிமல்கியகொன்றை — தூங்குகின்றகனிகள் நிறைந்தகொன்றைமரங்களானவை,— துணர்த்து அலர்ந்து — கொத்துக்கொண்டுமலர்ந்து,— பாங்கு எங்கும் நிற்பது — பக்கங்களெவ்விடத்தும் நிற்குந்தன்மையானது,— உருத்திரப்பல்கணங்கள் — உருத்திரராகிய பலகணத்தவர்கள்,— வீங்கும் புகழ்மால்விடைபற்றி — மிக்கபுகழையுடைய திருமாலாகிய இடபத்தைப்பிடித்து,— வெள்ளிச்சிலம்பின் ஓங்கும் பெருமான்முனம் உய்ப்ப — கயிலைகிரியினுயர்ச்சியோடுறைந்தருளும் சிவபிரானது திருமுன்னரேகொண்டுபோய்விடுதற்காக,— வந்துற்றது ஒப்பாம் — வந்துசேர்ந்திருத்தலை நிகர்க்கும். எ — று.

பழங்களும் வடிவாற்சடைக்குவமையாதலின் தூங்குங்கனிமல்கிய கொன்றையென்றும் திருவடையாளமாலையாதலின் அதனைவேறுபிரித்து துணர்த்தலர்ந்து பாங்கெங்கும் நிற்பதென்றும், திருமால் முல்லைநிலத்திற்கதிதேவதையாதலின் ஆண்டுறைவாரென்னுந்துணிவுபற்றி வந்தாரென்பார், மால்விடைபற்றி உய்ப்பவந்துற்றதொப்பாம் என்றுங் கூறினார். பழங்கள் நிறத்தால் விஷ்ணுவுக்கும் பூக்கள் நிறத்தாலுருத்திரருக்குமொப்பாமென்றுரைப்பாருமுளர். (௯௧)

விலகாவிறன்மாலறிந்தோர் விளையாடலாற்றாற்
பலமாயவுருக்கொடு நின்றொளிர்பான்மைபோலா
மலராணிறைகொன்றை யலங்கியசூழலெல்லாம்
புலராமதுமாமலர் பூவைகள் பூத்தகாட்சி

(இ — ள்.) அலரால் நிறைகொன்றை அலங்கியசூழலெல்லாம் -- பூக்களானிறைந்த கொன்றைமரங்கள் விளங்கி நிற்குமிடங்களினெல்லாம்,—புலரா மதுமாமலர் பூவைகள் பூத்தகாட்சி — புலராத தேன்பொருந்திய மலரைக் காயாமரங்கள் பூத்திருக்குந்தோற்றமானது,—விலகாவிறல்மால் — நீங்காத வலிமைபொருந்திய திருமால்,—அறிந்து — அவர் வரவையறிந்து,—ஓர்விளையாடல் ஆற்றால் — ஒருவிளையாட்டுமுறைமையால்,—பலமாய உருக்கொடு நின்று ஒளிர்பான்மைபோலாம் -- பலவாகிய மாயவடிவைக்கொண்டு நின்று விளங்குந்தன்மைபோலாகும். எ—று.

விலகாவென்பதற்கு விலகியென்றுசொல்லினும் பொருந்தும்.

இருங்கைக்குலமொத்தன பூவைகளிண்டுகோபந்
திருந்தார்ந்தழலொத்தன கொன்றைகள் செம்பொனொத்த
பெருந்தாட்குவையொத்தன பூத்தபிடாமரங்கள்
பொருந்தேர்முகிலொத்தது பொற்றொழில்வல்லகொல்லன்

(இ—ள்.) பூவைகள் இருங்கைக்குலம் ஒத்தன — காயாமரங்கள் கரித்திரளையொத்தன.—இண்டுகோபம் திருந்தார்ந்தழலொத்தன — நெருங்கிய இந்திரகோபங்கள் திருத்தமானநெருப்பையொத்தன,—கொன்றைகள் செம்பொன் ஒத்த — கொன்றைமலர்கள் செம்பொன்னையொத்தன,—பூத்தபிடாமரங்கள் பெருந்தாள்குவையொத்தன - பூத்திருக்கும்பிடவமரங்கள் நெருங்கிய பொற்றாளின் குவாலைநிகர்த்தன,—ஏர் பொருந்தும்முகில்-அழகுபொருந்திய முகிலானது,—பொன்தொழில்வல்லகொல்லன் ஒத்தது – பொன்தொழிலிலே வல்லதட்டானைநிகர்த்தது. எ—று.

பூவை, கொன்றை ஆகுபெயர். (கூ௩)

விரிகான்மலர்வாச நுகர்ச்சிவிழைந்துதத்த
முரிநாசியொன்றாலமையாதுலப்பற்றநாசி
பரியாவிமையோரவணிற்கும்அப்பண்புதோற்றும்
வரிபாடலின்வீழ்மணிக்குமிழ் பூத்தமாண்பு.

(இ—ள்.) வரிபாடு அளிவீழ்மணிக்குமிழ்பூத்தமாண்பு – இசைப்பாட்டைப்பாடும் வண்டுகள் வீழ்கின்ற அழகிய குமிழமரம் அலர்ந்திருக்கும் மாட்சிமையானது,—இமையோர் – தேவர்கள்,—விரி கான் மலர் வாசநுகர்ச்சி விழைந்து – விரிந்த மூங்கிலிலைத்துள்ள மலர்களுடைய பரிமளத்தை அநுபவித்தலை விரும்பி,— தத்தம் உரி நாசி ஒன்றால் அமையாது – தத்தமக்குரிய ஒவ்வோர் மூக்கினால் (அவ்வாசநுகர்ச்சி) அமையாமல்,—உலப்பு அற்ற நாசி பரியா – எண்ணிறந்த மூக்கைத்தரித்து —அவண் நிற்கும் அப்பண்பு தோற்றும் – அவ்விடத்துநிற்கும் அப்பண்பினைக்காட்டாநின்றன. எ—று.

கான்-ஆகுபெயர். அப்பண்பு-பரித்தபண்பு. உரிய என்பது-உரியெனவீறுகெட்டது. இமையோர் என்றதனால் மரங்கள் அநேகம் என்பதும் ஒன்றாலமையாதுலப்பற்ற நாசிபரியாவென்றதனால் ஒவ்வொன்றிலும் பற்பலமலர்களிருத்தலும் பெறப்பட்டன. (கூ௪)

மானுகமலர்த்திருமாதவனுகிமாயோ
னூனுவொளிநாமுறவள்ளியையீன்றவாற்ற
லானாமிவற்றணவேமெனநண்ணியாங்குத்
தானாளுமிருந்துழல்கின்றனதாவுமான்கள்.

(இ—ள்.) தாவும்மான்கள் –பாய்ந்துசெல்லுகின்றமான்கள்,—மலர்த்திருமான் ஆக – தாமரைமலரிலுறையுந் திருமாதானவள்மான்வடிவாக,—மாயோன் மாதவனுகி – திருமால் சிவமுனிவராகி,—நாம் ஆரு ஒளி உற – யாங்கள் (எங்காளும்) நீங்காப்புகழையடைய,—வள்ளியை ஈன்ற ஆற்றல் – வள்ளிநாயகியை ஈன்றதன்மையினால்,—நாம் நாளும் இவண்தணவேம் என – யாங்களெங்காளுமித்திருமாலை நீங்குவேமல்லமென்று,—நண்ணியாங்கு – சேர்ந்தாற்போல;—தாம் நாளும்மிருந்து உழல்கின்றன – தாங்கள் நாடோறும் நிருதியாகத்திரிகின்றன. எ—று.

தங்குலத்துக்குப்புகழ்கொடுத்தமையே பிரியாமைக்குக்காரணமாயிற்று. ஆனாமை நீங்காமை. (கூ௫)

புல்லும்புனலுநதமையூட்டுநர்பொற்பவிண்ணோர்க்
கொல்லும்பயமாதியுணப்பயனுய்க்குங்கற்ற.

(இ—ள்.) தமை புல்லும் புனலும் ஊட்டுநர் பொற்ப – தமக்குப் புல்லையும் புனலையும் ஊட்டுவோரா அழகடைய,—விண்ணோர்க்கு ஒல்லும் பயம் ஆதி உணப் பயன் தேவர்கட்குப் பிரீதியாகிய பால்முதலிய உணவுப்பொருளை,— உய்க்கும் கன்று உதவும் கன்றையுடைய பசுக்களானவை,—அல்லும் பகலும் கருது அன்பர் இரவும் பகலும் தம்மைத்தியானிக்கும் அன்பர்கள்,—அளித்த ஏற்று – தமக்கிடும் (பஞ்ச கவ்யம்) முதலியவற்றை அங்கீகரித்து,—வெல்லும் பரபோகம் விளைத்து அருள் சேர்ந்து நேர்ப – (பாசத்தை) வெல்லும் பரபோகத்தை ஊட்டியருளும் இறைவனை நிகர்ப்பன. எ—று.

தமக்கு என்பது தமை என்றும் தம்மை உண்ணவென்பன இடைக்குறைந்தும் ஏன்று ஆகற்றுவென விகாரப்பட்டும் நின்றன. இடைவிடாத்தியானமுடையோரென்பார் அல்லும்பகலுங்கருதன்பரென்றார். (௬௮)

தாற்றுக்கதிர்கால்வரகம்பயிர்சாமைசொன்ன
லாற்றக்கிளருந்துவரைப்பயிராதிமுற்றும்
தோற்றிக்கிளையோடினிதுண்டினமூன்றுந்தன்றப்
போற்றிக்குடிமல்கியபொற்பினபாடியெல்லாம்.

(இ—ள்.) பாடி எல்லாம் – முல்லைநிலத்தூரெல்லாம்,—தாற்றுக் கதிர்கால் வரகம்பயிர் – குலையாகிய கதிரைக்கக்கும் வரகுபயிர்,—சாமை சொன்னல் – சாமைப்பயிர் சோழன்பயிர்,—ஆற்ற கிளரும் துவரைப்பயிர் ஆதி – மிக உயர்ந்துவளரும் துவரைப் பயிர் முதலியவற்றை –முற்றும் தோற்றி,—முழுதும் விதைத்து – கிளையோடு இனிது உண்டு – உறவினரோடினிதாகவுண்டு,—இனம் மூன்றும் தன்ற போற்றி – மூவினமும் விருத்தியடையும்படி அவைகளைக் காப்பாற்றி,—குடிமல்கிய பொற்பின – குடிகணிறைந்த வாழ்க்கையுடையன. எ—று.

அம் சாரியை. போற்றி நிறைந்தவெனக் கூட்டுக. மூவினம் மாடு, ஆடு, எருமை என்பன. அது "நெடுமால்குறும்பொறைநாடனை"என்னும் அகப்பொருள்விளக்கச் சூத்திரத்தானுணர்க. தாற்றுக்கதிர் பரிகோல்போன்ற கதிரெனினுமாம். (௬௯)

குளிர்மென்மொழிநேருவதென்றுகொழுஞ்சுவைப்பா
லொளிர்செந்தழலுய்த்துநாமமற்றொன்றதாக்கி
வளமங்கையர்மத்தினுடைத்தலுமாழ்கியோவென்
றளறுஞ்செயல்போற்குமிறுரர்ப்பெழுங்காலையெங்கும்.

(இ—ள்.) வளம் மங்கையர் – வளத்தையுடைய மாதர்,—கொழுஞ் சுவைப் பால் – முதிர்ந்த சுவையுடைய பாலானது,—குளிர் மெல் மொழி நேருவது என்று – (தமது) குளிர்ந்த மெல்லிய சொல்லை ஒப்பது என்று,—ஒளிர் செம் தழல் உய்த்து விளங்காநின்ற சிவந்த நெருப்பிலிட்டுக் காய்ச்சி,—உறு நாமம் மற்று ஒன்று ஆக்கி – பொருந்திய நாமம் வேறொன்றாக்கி,—மத்தின் உடைத்தலும் – மத்தினால் உடை

த்தபொழுது,—மாழ்கி இனைந்து அளறும் செயல்போல் – மயங்கி ஐயோவெனறலறு ஞ்செயல்போல்,—காலை எங்கும் – உதயகாலத்தில் வீடுகளெங்கும்,—குமிறு ஆர்ப்பு எழும் – குமிறும் ஒலியானது எழாநிற்கும். எ-று.

நாமம் மற்றொன்றுக்கல் தயிரென்னும் பெயராக்கல். அளறல் – லளவொற்றுமை அது பகுதிப்பொருள்விகுதி. உடைத்தல் – கடைதல்.

(எ௰)

வார்கண்டமுலைத்துணைவாண்முகமங்கைநல்லார்
கார்கண்டுகவிழ்த்தவிழிப்புனல்கால்செயதன்பர்
தேர்கண்டுமிழோகைவிழிப்புனல்சேரவாறு
ஊர்கண்டநெடும்பணைசென்றினிதோம்புமன்றே.

(இ—ள்.) வார்கண்ட துணைமுலை – கச்சையணிந்த துணையாகிய முலையையும்,—வாள் முகம் — ஒளிபொருந்திய முகத்தையுமுடைய,—மங்கைநல்லார் – மங்கைப்பருவப் பெண்கள்,—கார் கண்டு கவிழ்த்த விழிப் புனல் – கார்காலத்தைக் கண்டு சொரிந்த விழிநீரானது,—கால் செய்து – கால்வாயாகி,—அன்பர் தேர் கண்டு உமிழ் ஓகை விழிப்புனல் சேர – காதலருடைய தேர்வரவைக்கண்டு கக்குகின்ற உவகைக்கண்ணீர்தனோடு சேருதலினால்,—ஆறு ஆய் – ஆறாகி,—ஊர்கண்ட நெடும்பணை சென்று – மருதநிலத்திற்பொருந்திய கழனியிற்சென்று,—இனிது ஓம்பும் – இனிதாகப் (பயிர்களைக்) காக்கும். எ-று.

கார்கண்டு கவிழ்த்த விழிப்புனல், கார்காலத்துவருவோமென்றகாதலர் வாராமையால் உளதாகிய சோகக்கண்ணீர், வார்கண்டமுலையென்பது தேன்செய்தகஞ்சத்தயன் என்றாற்போல நின்றது.

(எக)

தடக்குங்குமத்தையனல்லார்தமியர்யகாலைக்
கிடக்குங்கிடையல்லதில்லாமைகிளக்குமாபோற்
கடக்குங்கழைவாசிலையான்கணையாகவேவு
மடக்கும்பசுந்தேன்கமழ்முல்லையணிந்தமுல்லை.

(இ—ள்.) குங்குமம் தடம் தையல்நல்லார் – குங்குமமணிந்த முலையையும் அழகையுமுடைய பெண்கள்,—தமி ஆயகாலை – நாயகர் பிரிந்தகாலத்து,—கிடக்கும் கிடை அல்லது – காமநோயினால் கிடக்குங் கிடையன்றி,—இல்லாமை கிளக்குமாபோல் – வேறுசெயலில்லாமையை வெளிப்படுத்துமாறுபோல,—கடக்கும் கழை வாசிலையான் – யாவரையும் வெல்லும் கரும்பாகிய நெடிய வில்லையுடைய காமன்,—கணை ஆக ஏவும் – பாணமாக ஏவுகின்ற,—பசுந் தேன் அடக்கும் கமழ் முல்லை – பசியதேனையடக்கும் பரிமளிக்கின்ற முல்லைமலரை,—அணிந்த – பொருந்தியது,—முல்லை – முல்லைநிலம். எ-று.

அணிந்தது என்பதனீறுகெட்டது. பசுந்தேனை அடக்கும் முல்லையை அழகிய முல்லைநிலமானது தனக்கட்கொண்டிருக்கும் எனக்கூறினும் பொருந்தும்.

(எஉ)

வேறு.

விலகிநின்றுமிழுமோலிவேர்தருக்குறுப்பாந்தாங்க
ஞலமூன்றளிக்குமவோதையும்பணைக்கோட்டலைரென

விசனும்,—பொய்கை – பொய்கைகளும்,—தொகு டனை – கூட்டமான வயல்களுமாகி ய,—இலைப[illegible] தாங்கி – இலைச்செறிவுபொருந்திய ஆபரணத்தைத் தாங்கி,—காருப் பொழிற் பொ[illegible]யா நந்தாவனம் – பெருமைபொருந்திய சோலையும் பொதும்பரும் நந்தாவனமுமாகிய,—உடை நலசுகச் சூழ்ந்து – ஆடையை அழகுபெறவுடுத்து,—மரு புகை கடக்கும் கொச்சி வனை செறிந்தன்று – மறக்கக்கூடாத பகையைவெல்லும் மதி லாகிய கைகளையையும் அணிந்திருந்தது. எ—று.

பெரிதும்பர் இளமரக்கா; அது வயல்சூழ்சோலை. நந்தாவனம்–பூஞ்சோலை. பொ ய்கை மனிதரால் ஆக்கப்படாத நீர்நிலை. இலஞ்சி - மடு. (௭௰)

பூஞ்சினைவஞ்சிபாங்கர்ப்புனைந்ததற்கேற்பப்பைத்து
ராஞ்சிறையடமேறசெல்லுமனவயதன்றொழின்முற்றுமை
காஞ்சிவேய்ந்ததற்கங்கேற்பகடிமருதினத்திற்சிந்துந்
தீஞ்சுவைநறைநீரோடைசெறுநதிகால்களெங்கும்.

இ—ள்.) பூம் சினை வஞ்சி பாங்கர் புனைந்ததற்கு ஏற்ப – மலர்பொருந்திய கொ ம்பரையுடைய வஞ்சிமரங்களைப பக்கங்களிலே பொருந்தியிருந்தமைக்கு ஏற்கும்படி,— பைத்து ஊர் ஆம் சிறை அட மேல செலலும் – பரந்து ஊராகிய பக்கங்களை அழிக்கும் படி அவைமேற் செல்வனவும்,—அவை – அச்சிறைகள்,—அதன் தொழில் முற்றுமை – (தமமையடும்படி மேற்செல்லும்) அவ்வஞ்சியின் தொழிலானது முற்றுப்பெறுவண் ணம்,—அங்கு காஞ்சி வேய்ந்ததறகு ஏற்ப - அவ்விடத்துக் காஞ்சியைவேய்ந்ததற்கு ஏற் கும்படி,—கடி மருது இனத்தில் சிந்தும் – விளக்கம்பொருந்திய மருதினங்களாற் சிந்த ப்படுவனவுமாகிய,—தீம் சுவை நறை நீரோடை செறு நதி காலகள் எங்கும் – மதுரச் சுவைபொருந்திய வாசனையையுடைய நீரோடைகளும் அழித்தலையுடைய நதிகளும் கால்வாய்களும் எவ்விடங்களினும் பொருந்தும. எ—று.

வஞ்சியைப் புனைந்ததற்கேற்கும்படி ஊராகிய பக்கங்களை அழிக்கும்படி செல்வ னவும், அப்பக்கங்களானவை தம்மையழிக்கும்படி வருதலையுடைய அதின்றொழில் முற் றுபபெறுவண்ணம் காஞ்சியைப் புனைந்ததற்கேற்கும்படி மருதினங்களாற் சிந்தப்படு வனவுமாகிய ஓடைகளும் நதிகளும் கால்வாய்களும் பொருந்[illegible]ன்ன. செறு-வயல் எனக்கொள்ளினுமாம்.வஞ்சிபகைமேற்செல்வோர்மேற்கொள்ளுமாலை.காஞ்சியெதிரூன்றுமா லை; இவைக்களைப் புறத்திணையியலுட்காண்க. அவை, சுட்டுப்பெயர். சிந்தும் என்பது படுவிகுதி தொக்குநின்றது. இதற்குச் சிதைக்கவருவன நதிகளும் கால்வாய்களும், மரு தினங்களால் விலக்குவன ஓடைகளென்றுரைப்பாருமுளர். இப்பொருள் ஊராஞ்சி றையடுமேற்செல்லும் அவை அதன்றொழில் முற்றுமை மருதினங்களாற் சிந்தும் என் பதனோடு மாறுதலால் அஃதுரையன்மையறிக. (௭௧)

காலிருமருங்குநீண்டகரைக்கலித்தெழுந்தவேழம்
வாலியபூத்துநிற்கும்வண்ணஞ்செங்கைத்துப்போர்வே
டாலியுமின்னர்சேனையணிவகுத்தடற்றவேர்தும்
வெவிரீந்தட்டவென்னவிளங்குமவ்விடங்கடோறும்.

(இ—ள்.) கால் இரு மருங்கும் நீண்ட கரை – கால்வாய்களின் இருமருங்கும் நீண்டிருக்கும் கரைக்கண்ணே,—கலித்து எழுந்த வேழம் – தழைத்து வளர்ந்த கருப்பங்களானவை,—வாலிய பூத்து நிற்கும் வண்ணம் – வெண்ணிறமுடையவாய்ப் பூத்துநிற்கும் அழகானது,—செங்களத்துப் போர் வேட்டு – போர்க்களத்து யுத்தஞ்செய்தலை விரும்பி,—ஆலிய மன்னர் சேனை – ஆரவாரிக்கும் அரசருடைய சேனைகள்,—அணிவகுத்து – அணியைவகுத்து,—உடற்ற ஏந்தும் – சமர்செய்யும்படி ஏந்துகின்ற,—இரும் வேல் கூட்டம் என்ன – பெரிய வேற்படைக்கூட்டம்போல,—இடங்கள்தோறும் விளங்கும் – இடங்களினெல்லாம் விளங்குவன. எ—று.

வேழம் பூத்துநிற்கும்வண்ணம் அரசர்சேனையேந்தும் வேற்கூட்டம்போல விளங்குவவென்க. (எஎ)

அளிநரம்புளரநாரையமிழ்திசைப்பீலியூதத்
தெளிதிரைமுரசமார்ப்பச்சேவடிகம்புள்சூட
களிசிறைக்குரண்டந்தாழ்ந்துநலந்தகவொடுங்கிநிற்ப
மிளிர்மணிமலர்மேலன்னம்வீற்றிருப்பனநீரோடை.

(இ—ள்.) அன்னம் – அன்னமாகியவரசன்,—அளி நரம்பு உளர – வண்டுகள் நரப்புக்கருவி வாசிக்கவும்,—நாரை அமிழ்து இசைப் பீலி ஊத – நாரைகள் அமிழ்தம்போலும் இசையாகிய சிறுசின்னத்தை யூதவும்,—தெளிதிரை முரசம் ஆர்ப்ப – தெளிந்த திரையாகிய முரசப்பறை யொலிக்கவும்,—கம்புள் சே அடி சூட – சம்பங்கோழிகள் சிவந்த அடிகளில் வணங்கவும்,—களி சிறை குரண்டம் தாழ்ந்து நலம் தக ஒடுங்கி நிற்ப – குளிர்ந்த சிறையையுடைய கொக்குகள் வணங்கி நன்மைபொருந்த ஒடுங்கிநிற்கவும்,—மணி மிளிர் மலர்மேல் – அழகிய விளக்கமுற்ற தாமரைமலரின்மேல்,—வீற்றிருப்பன – கொலுவிருக்கப்படுவன,—நீரோடை – நீரோடைகள். எ—று.

இதற்கு அன்னம் நீரோடைகளிற் பொருந்திய மலரின்மேல் கொலுவிருப்பனவென வுரைப்பினுமமையும். நலத்தக - வலிக்கும்வழி வலித்தல். செயப்பாட்டுவினையுணாதலும் படுவிகுதி தொக்கது. நலத்தகவொடுங்கல் அரசனுக்கெதிரே குடிகள் ஒதுங்கிநிற்றல்போல வணங்கித்தோடொதுங்கல்.

இந்திரற்காக்கம்வேண்டியீட்டியவேள்வித்தீயின்
வந்தெழுமவுணர்தாக்கமறுகுமேழ்முனிவரேய்ப்ப
முந்துசெங்கமலத்தேனுண்மூசளிவெண்பூச்செந்துர்
தந்தலைமிதிப்பவன்னந்தணப்பனவிலஞ்சிதோறும்.

(இ—ள்.) அன்னம் – அன்னப்பறவைகள்,—இந்திரற்கு ஆக்கம் வேண்டி ஈட்டிய – இந்திரனுக்கு ஆக்கம்வருதலை விரும்பிச் செய்யப்பட்ட,—வேள்வித் தீயில் வந்து எழும் அவுணர் தாக்க – யாகாக்கினியினின்றுந் தோன்றியெழாநின்ற அவுணர்கள் எதிர்த்தலினால்,—மறுகும் ஏழ் முனிவர் ஏய்ப்ப – மனம்மறுகும் ஏழு முனிவர்கள்போல,—முந்து செம் கமலத் தேன் உள் மூச அளி – முன்னே மலர்ந்த செந்தாமரைமலரின் தேனுள்ளே மொய்க்கும் வண்டுகளானவை,—வெண்பூ செந்தும் தம் தலை மிதிப்ப—

வெண்டாமரைமலரை நிகர்க்கும் தங்கடலையின் மிதித்தலினால்,—இலஞ்சி சோரம் வைப்பன - [illegible]லைகடோறும் நீங்குவன. எ—று.

ஆக்கம்-மேன்மேலுயர்தல். இந்திரனுடைய வேண்டுகோளின்படி எழுமுனிவரா லுஞ் செய்யப்பட்ட யாகாக்கினியில் அநேகம் அசுரர்தோன்றி அவர்களைத்துரத்தின ரென்பது புராணகதை. இது பொதுமையணியும் உவமையணியும். (எ௯)

ஓம்புதன் குறியினோடுமுறைந்தெனக்கமலம்பூத்த
தீம்புனற்றடத்துண்மேதிசென்றுமேய்ந்துழக்கவிண்ணி்
னூம்பெருவாளைவெய்யோற்றூக்குவகமலத்தேவி
கூம்புறப்பானாணிங்குங்குற்றங்கண்டொறுத்தன்மான.

(இ—ள்.) தீம்புனல் - மதுரமாகிய நீரானது,—ஓம்புதன் குறியினோடும் உறைந் தென் - பாதுகாக்கின்ற தன்னுடையாளுமாகிய (கோகனதக்) குறியோடு மிருந்தாற் போல,—கமலம் பூத்த தடத்துள் - தாமரைமலர் அலர்ந்த தடாகத்தினுள்ளே,—மே திசென்று மேய்ந்து உழக்க - எருமைகள்சென்று மேய்ந்துழக்குதலினால்,—தாம் பெரு வாளை விண்ணில் வெய்யோன் தூக்குவ - எழுந்துபாயும் வாளைமீன்கள் ஆகாயத்தின மீது வரும் சூரியன்மீது தாக்குவன,—கமலத்தேவி - தாமரைமலரென்னு மனைமனை வியானவள்,—கூம்புதல் உற - குவிவடைய,—பால்நாள் - பாதிநாளில்,—நீங்கும் குற் றங் கண்டு,—பிரிந்தகுற்றத்தைக் கண்டு,—ஒறுத்தல் மான - தண்டித்தாற்போல. எ—று.

உறைந்தாலென்ப துறைந்தெனத் திரிந்துநின்றது. தாவுமென்னும் செய்யுமெனெ ச்சத் திற்றுயிர்மெய் கெட்டது. கூம்புதல் கூம்பு என முதனிலைமாத்திரையாய் நின் றது. நீரின்குறி - கோகனதமென்பது "குறிகள்வச்சிரத்தினோடுகோகனதஞ்சுவத்தியறு புள்ளியமுதவிந்து" என்று பஞ்சபூதக்குறிகூறும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானு ணர்க. (௮௦)

பண்டொருகோள்வாய்ப்பெய்துபாற்றியகாரிப்புத்தேண்
மிண்டியகோள்களுனாள்கள்வேறுளமீனமுற்று
முண்டுபின்னுமிழ்வபோல்வுரைத்தவனைவற்றையெல்லாங்
கொண்டுளமடக்கிக்கால்வகுருமலர்ப்பொதும்பரீட்டம்.

(இ—ள்.) குருமலர்ப பொதும்பர் ஈட்டம் - நிறம்பொருந்திய மலரையுடைய சோலைக்கூட்டங்களானவை,—பண்டு ஒருகோள் வாய்ப்பெய்து பாறறிய - முன்னாளில் ஒப்பற்ற கோளாகிய வெள்ளியைத் தமவாயிலிட்டு(அபானத்தா)லிறக்கிய,—காரிப்புத் தேள் - வைரவக்கடவுள்,—மிண்டிய கோள்கள் நாள்கள் வேறு உள மீன முற்றும் - நெருங்கிய (சூரியன்முதலிய) கோள்களும் இருபத்தேழு நட்சுத்திரங்களும் அவற்றி ற்கு வேறாயுள்ள வான்மீன்களுமாகிய முழுவதையும்,—உண்டு பின் உமிழ்வபோல - முன்போல வாயிலிட்டுப் பின்னுமிழ்ந்தாற்போல,—உரைத்த அன்னவற்றை யெல்லா ம் - மூக்கூறிய கோள்முதலியவனைத்தையும்,—உள் அடக்கிக்கொண்டு கால்வ - தம்மு ள்ளே அடக்கிக்கொண்டு பின் வெளியில்விடுவன. எ-று.

